# அலேக்ஸ் ஹேலி

# வேர்கள்

## 1

**1750**ஆம் ஆண்டு, வசந்த காலத்தின் புதுவரவு. மேற்கு ஆப்பிரிக்காவின் காம்பியா நாட்டில் காம்பியா நதிக்கரையிலிருந்து நதியையொட்டி மேல்நோக்கி நான்கு நாள் பயண தூரத்தில் ஜுஃப்பூர் என்றொரு கிராமம். ஓமோரோ — பின்டா கின்டே தம்பதியருக்கு ஆண்மகவு பிறந்தது. பின்டாவினுடைய கட்டுறுதியான உடலிலிருந்து வீறிட்டு வெளியேறிய சிசு அவளைப் போலவே கருமையாய்ப் பளபளத்தான். பின்டாவின் குருதியும் நிணமும் புள்ளிகளாகவும் கோடுகளாகவும் தீட்டப்பட்டிருந்த அவனுடைய உடல் வழுக்கியது. அலறினான். உடலெங்கும் முதிர்ச்சியைப் பறைசாற்றிய சுருக்கங்கள் கொண்ட மூதாட்டியர் இருவரும், நியோ போட்டோ கிழவியும் குழந்தையின் பாட்டியான ஆயிசாவும் பண்டுவம் பார்த்தனர். பிறந்தது ஆண் குழந்தை எனக் கண்டவுடன் மகிழ்ச்சியில் பூரித்தனர். மூதாதையரின் வாக்குப்படி, அல்லாவின் அருளாசி நிரம்பப் பெற்றவர்களுக்குத் தான் முதலில் பிறப்பது ஆண் குழந்தையாக இருக்கும். குழந்தையின் பெற்றோர்கள் மட்டுமின்றி அவர்களுடைய குடும்பங்களைச் சார்ந்த அனைவருமே அல்லாவின் அருளாசி பெற்றவர்களாவர். கின்டேயின் பெயர் நிலைத்து, புகழ்பெற்றுத் தழைக்கப்போகிறது.

முதல் சாமக் கோழி கூவுவதற்கு இன்னும் ஒருமணி நேரம் இருந்தது. நியோ போட்டோவும் பாட்டி ஆயிசாவும் குதூகலம் கொப்பளிக்கப் பேசிக் கொண்டிருந்தனர். முதன் முதலாக அவனுடைய செவிகளில் விழுந்த அவர்களுடைய அரட்டையின் ஒலி அடங்கும் விதத்தில், கிராமப் பெண்டிர் மரத்தாலான உரலில் தானியத்தைப் போட்டு ‘திம்’, ‘திம்’ எனும் தாள லயத்துடன் இடித்துக் கொண்டிருந்தனர். மூன்று கற்களைக் கொண்டு அடுப்புக் கூட்டி மூட்டப்பட்ட நெருப்பின் மீது மண்பானைகளை வைத்து தமது பாரம்பரியக் காலை உணவான கஞ்சி தயாரிக்க ஆயத்தமாயினர்.

சிறிய, தூசு படிந்த அக்குக்கிராமத்தின் வட்டவடிவமான மண்குடிசைகளுக்கு மேலே மெல்லிய நீலப் புகை வளையமிட்டது; புகையின் கடுநெடியும் கஞ் சியின் இனிய மணமும் காற்றில் மிதந்தன. கிராம ஹஜரத், கஜாலி தெம்பா, மூக்கொலியாக எழுப்பிய வாங்கோசை மக்களை மசூதியை நோக்கி அன்றைய முதல் தொழுகைக்கு வருமாறு அழைப்பு விடுத்தது. உயிருடன் உள்ளவரை நாள்தோறும் ஐந்துமுறை அல்லாவைத் தொழ வேண்டும் என்று அக்கிராம மக்களுக்கு நினைவுபடுத்தும் ஓசை. மூங்கில் கழிகளாலான படுக்கையை விட்டு வேக, வேகமாக எழுந்து, பதனிடப்பட்ட தோலுடன் இணைந்த முரட்டுப் பருத்தியாலான அங்கியை உடலில் இறுக்கிக் கட்டிக்கொண்டு கிராமத்து ஆடவர் மசூதியை நோக்கி ஆர்வத்துடன் சாரை சாரையாக விரைந்தனர். ‘அல்லாஹூ அக்பர்! அஷாது அன் லாஇலாஹா இல்லல்லா!’ எனும் பேரொலியுடன் ஹஜரத் தொழுகையை முன்னின்று நடத்தினார். (இறைவன் மகாப் பெரியவன்! ஒன்றே கடவுள்! இது சத்தியம்!) தொழுகை முடித்து, காலை உணவுக்காக வீடு திரும்பிக் கொண்டிருந்த ஆடவர்களிடம், குதூகலம் பொங்க ஓமோரோ தனக்கு முதல்மகன் பிறந்திருக்கும் செய்தியைத் தெரிவித்தார். அவரைப் பாராட்டிய ஆடவர் அனைவரும் ஒருமித்த குரலில் நல்ல எதிர்காலம் காத்திருப்பதை எதிரொலித்தனர்.

தமது குடிசைகளுக்குத் திரும்பிய ஆடவர் ஒவ்வொருவரும் தமது மனைவியரிட மிருந்து சுரைக் குடுக்கைக் குவளையில் கஞ்சியைப் பெற்று அருந்தினர். பின்னர், தமது குழந்தைகளுக்கு ஊட்டிய மனைவிமார் தாமும் உட்கொண்டனர். காலை உணவு முடிந்த பிறகு, குட்டையான, வளைந்த கைப்பிடி கொண்ட மண்வெட்டியைத் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு நிலத்தை நோக்கி நடந்தனர். மண்வெட்டியின் வெட்டும் பகுதியை உலோகத்தால் செய்து கிராமக் கருமான் கூர்மையாகத் தீட்டிக் கொடுத்திருந்தார். நிலக்கடலை, சிறுதானியங்கள், பருத்தி போன்ற ஆடவருக்குரிய பயிர்களை விளைவிப்பதற்காக நிலத்தைப் பண்படுத்தும் பணியில் ஈடுபட்டனர். நெல் பெண்டிரால் உழவடை செய்யப்பட்டது. சுட்டெரிக்கும் வெப்பமும் மரங்களும் புல்வெளிகளும் நிறைந்த காம்பியா நாட்டு உழவடை நிலங்கள் அவர்களை வரவேற்றன.

காலங் காலமாகத் தொடர்ந்து வந்த குலமரபுப்படி, ஓமோரோ அடுத்த ஏழு நாட்களுக்கு ஒரே ஒரு வேலையில் தான் முழுமூச்சுடன் ஈடுபட்டிருந்தார். தன்னுடைய முதல் மகனுக்குப் பெயர் தேர்வு செய்யும் வேலை! பாரம்பரியமான

அவர்களுடைய குலத்திற்கு வளம் மிக்க வாழ்க்கையை உறுதி செய்யும் பெயராக இருத்தல் வேண்டும். ஏனெனில், மாண்டிங்கர்களான அப்பழங்குடி மக்கள் மத்தியில் ஒரு நம்பிக்கை நிலவியது. யாரை அல்லது எதனைக் குறிப்பிட்டுப் பெயரிடுகிறார்களோ அவருடைய அல்லது அதனுடைய பண்பியல்புகளில் ஏழு பெற்று குழந்தை வளருமாம்!

குழந்தை பிறந்த எட்டாவது நாள் பெயரிடும் விழா நடத்துவது வழக்கம். அந்த ஏழு நாட்களும் மகனுக்குப் பெயர் தேர்வு செய்யும் சிந்தனையில் மூழ்கியவாறே, ஓமோரோ தன் சார்பிலும் தனது மனைவி பின்டா சார்பிலும் கிராமத்திலிருந்த அனைத்துக் குடும்பத்தாரையும் விழாவில் கலந்து கொள்ளுமாறு நேரில் சென்று அழைப்பு விடுத்தார். அந்த நன்னாளில், தனது தந்தையைப் போலவும் தனது பாட்டனைப் போலவும் புதிதாகப் பிறந்த மகனும் அந்தப் பழங்குடி இனத்தின் உறுப்பினராகிவிடுவான்.

எட்டாவது நாள் அதிகாலைப் பொழுதில் கிராமத்தினர் அனைவரும் ஓமோரோ—பின்டா குடிசையின் முன்பாகத் திரண்டனர். இரு குடும்பத்துப் பெண்களும் தலையில், அரிசி மாவுடன் தேன் கலந்து செய்யப்பட்ட பணியாரங்களையும் தயிரையும் சுரைக் குடுக்கைப் பாண்டங்களில் சுமந்து வந்தனர். கிராமத்துக் கலைஞர் கராமோ சில்லா தாரை, தப்பட்டைகளுடன் அங்கிருந்தார். ஹஜரத் வந்திருந்தார். கிராமத்து ஆசான் பிரிமா செசே அங்கிருந்தார்; அவனுக்குப் பயிற்றுவிக்கப் போகிறவரும் அவரே. முரசறைந்து அறிவிக்கப்பட்ட செய்தி செவிப்பட்டு ஓமோராவின் சகோதரர்கள், ஜானேவும் சலோமும் நெடுந்தொலைவிலிருந்து விழாவில் கலந்து கொள்வதற்காக வந்திருந்தனர்.

பின்டா பெருமை பொங்க சிசுவைக் கையிலேந்திருந்தாள். குழந்தையின் தலைமுடி ஒரு பட்டையாக மழிக்கப்பட்டிருந்தது. பெயர் சூட்டும் நாளில் நிகழ்த்தப்படுகின்ற சடங்குமுறை. உருண்டு திரண்டிருந்த குழந்தையின் கறு, கறு மேனியைப் பார்த்த பெண்டிரெல்லாம் மூக்கின் மீது விரல் வைத்தபடி அளவளாவினர். கிராமத்துக் கலைஞர் பறையறையத் தொடங்கியவுடன் அவர்களுடைய அரட்டை ஒலி அடங்கியது. தயிரும் பணியாரங்களும் நிறைந்திருந்த சுரைக் குடுக்கைகளைப் பார்த்தபடி ஹஜரத் ஓதினார். அவர் தொழுகை நடத்திக் கொண்டிருந்த போதே அங்கு குழுமியிருந்த ஆடவரும் பெண்டிரும் உணவுக்கு வணக்கம் செலுத்தும் முகத்தான் சுரைக் குடுக்கைகளின் விளிம்புகளைத் தொட்டு வணங்கினர். பிறகு, ஹஜரத் குழந்தையின் பக்கம் திரும்பி ஓதத் தொடங்கினார். குழந்தைக்கு நீண்ட ஆயுளையும் குடும்பத்தாருக்கும், கிராமத்திற்கும், பழங்குடி இனத்திற்கும் பெருமையும் புகழும் சேர்க்கும் வெற்றிகளை அருளும்படி அல்லாவை வேண்டினார். நிறைவாக, குழந்தைக்குச் சூட்டப்படவிருந்த பெயர் வலிமையும் மாண்பும் பெற்றுத் திகழ வேண்டுமெனத் தொழுதார்.

பிறகு, ஓமோரோ கூட்டத்திலிருந்து வெளிப்பட்டு குழுமியிருந்தோர் முன்னிலையில், மனைவி அருகில் சென்று, குழந்தையைக் கையிலெடுத்து, அனைவரும் பார்க்கும்படி அவனுடைய காதுகளுக்குள் தான் தேர்வு செய்திருந்த பெயரை மூன்று முறை ஓதினார். அந்தப் பெயர் அக்குழந்தையின் பெயராக

அப்பொழுது தான் முதன் முதலாக வாய்விட்டு வெளிப்படுத்தப்பட்டது. மனிதன் தான் யார் என்பதை அறியக் கூடிய முதல் நபராக அவனே இருக்க வேண்டும் என்பது அவருடைய இனத்தவருக்கு ஆழப் பதிந்த உணர்வு.

மீண்டும் பறையொலி எழுந்தது. அப்போது, குழந்தையின் பெயரை பின்டாவின் காதுக்குள் முணுமுணுத்தார். குதூகலத்துடனும் பூரிப்புடனும் பின்டாவின் முகம் மலர்ந்தது. அதன் பிறகு, ஓமோரோ ஆசானின் காதோடு குழந்தையின் பெயரை ஒலித்தார்.

"ஓமோரோவுக்கும் பின்டாவுக்கும் பிறந்திருக்கும் முதல் குழந்தைக்கு குண்டா எனப் பெயரிடப்படுகிறது", என்று பிரிமா செசே கூவினார்.

குழந்தையினுடைய பாட்டனார் பெயரான கைரபா குண்டா கின்டே என்பதன் நடுப்பெயரைத் தான் சூட்டியுள்ளனர் என்பதை அனைவரும் அறிந்தனர். தனது தாயகமான மௌரெடேனியாவிலிருந்து காம்பியா வந்தடைந்த அவனுடைய பாட்டனார் ஜுஃப்யூர் மக்களைப் பஞ்சத்திலிருந்து காப்பாற்றினார்; பாட்டி ஆயிசாவை மணந்தார்; சாகும் வரை ஜுஃப்யூர் மக்களுக்கு மதிப்புமிக்க புனித மனிதராக சேவை புரிந்தார்.

மௌரெடேனிய மூதாதையருடைய பெயர்கள் ஒன்றன் பின் ஒன்றாக ஆசானால் ஓதப்பட்டன. அவற்றைப் பற்றி குழந்தையின் பாட்டனார் கைரபா குண்டா அடிக்கடி சொல்லியிருக்கிறார். நீளம், நீளமான பல பெயர்கள் ஓதப்பட்டன; இரு நூறு மழைக்காலங்களுக்கும் அப்பால் நீண்ட மிகப் பெரிய பட்டியல்! அதன் பின்னர் கிராமத்துக் கலைஞர் பறையை ஓங்கி அறைந்தார். குழுமியிருந்த அனைவரும் குடும்பத்தின் பாரம்பரியத்தைக் கேட்டு வியப்பில் ஆழ்ந்து பெருமையாகப் போற்றினர்.

கிராமத்திற்கு வெளியே, பாலூற்றிய நிலவிற்கும் கண்சிமிட்டிய விண்மீன்களுக்கும் கீழே, அந்த எட்டாவது நாள் பெயரிடும் சடங்கினை ஓமோரோ நிறைவு செய்தார். தனது வலிய கரங்களில் சிசுவை ஏந்தியபடி கிராமத்தின் எல்லைக்குச் சென்று, வானத்தைப் பார்க்கும் விதமாகக் குழந்தையை உயர்த்திப் பிடித்தார்; சன்னக்குரலில் கூறினார், "இதோ பாருங்கள்! உங்களுக்கெல்லாம் மேலான தனிப்பெருந் திரு!"

# 2

நடவு செய்யும் பருவம். அந்த ஆண்டிற்கான முதல் மழையை எதிர்பார்த்திருந்தனர். ஜுஃப்யூர் ஆடவர் உழவடை நிலமெங்கும் புல் பூண்டுகளை அப்புறப்படுத்தி மலை போல குவித்திருந்தனர். அதனை எரிப்பதால் உண்டாகும் சாம்பல் காற்று வீசும் போது நிலமெங்கும் பரவி உரமாக வலு சேர்த்தது. பெண்டிர் தமது நெல் வயல்களில் ஏற்கனவே கரும் பச்சை நாற்றுக்களை நடவு செய்து விட்டனர்.

பின்டாவுக்கு பிள்ளை பெற்ற உடம்பு என்பதால் உடல்நலம் தேறும் வரையிலும் அவளுடைய காணியில் நடவு வேலைகளைப் பாட்டி ஆயிசா கவனித்துக் கொண்டாள். தற்போது பின்டா பணிக்குத் திரும்பத் தயாராகி விட்டாள். குண்டாவை முதுகில் பருத்தித் துணியால் தூளி கட்டித் தொங்கவிட்டபடி, பிற பெண்டிருடன் வயலை நோக்கி நடந்தாள். அவர்களுள் சிலரும் தமக்குப் புதிதாகப் பிறந்திருந்த குழந்தைகளை முதுகுத் தூளியில் சுமந்தபடி, தலையிலும் மூட்டையைத் தாங்கிக் கொண்டு சென்றனர். அவர்களுள் ஒருத்தி பின்டாவின் நெருங்கிய தோழி ஜான்கே தௌரே. காம்பியா நதியின் எண்ணற்ற கிளைகளில் ஒன்று அந்தக் கிராமத்தை ஒட்டி ஓடியது. பரிசல்கள் மூலம் அதைக் கடந்து நெல்

வயல்களுக்குச் செல்ல வேண்டும். பரிசல் ஒன்றிற்கு ஐந்து, ஆறு பெண்கள் ஏறிக் கொண்டு குட்டையான அகன்ற துடுப்புக்களால் நீரை உந்தித்தள்ளி நீர்வழியில் பயணித்தனர். அவ்வாறு ஒவ்வொரு முறையும் குனிந்து துடுப்பினை அசைத்த போது முதுகில் இளம் குண்டாவின் பிஞ்சு உடல் உரசியது; பின்டாவுக்கு இதமளித்தது. வாய்க்காலின் இருபுறமும் அடர்ந்திருந்த மாந்தோப்புகளிலிருந்தும் பூத்துக் குலுங்கிய ஏனைய மரங்களிலிருந்தும் இனிய நறுமணத்தைச் சுமந்து வீசிய காற்றின் அடர்த்தி கூடுதலாக இருந்தது. பரிசல்களின் சலசலப்பால் பீதி அடைந்த மிகப் பெரிய வாலற்ற குரங்குக் குடும்பங்கள் அங்குமிங்குமாகத் தாவி பனை மரங்களின் ஓலைகளில் அசைந்தாடின. காட்டுப் பன்றிகள் நறநறத்தபடி புதர்களுக்குள் ஓடி ஒளிந்து கொண்டன. சகதி படர்ந்திருந்த கரையை மறைத்துக் கொண்டு கூட்டங் கூட்டமாக இரையெடுத்துக் கொண்டிருந்த ஆயிரக்கணக்கான பலவகைப்பட்ட நீர்ப்பறவைகள் அதிர்ச்சியுடன் தலையைத் தூக்கி நீரில் நழுவிச் சென்ற பரிசல்களைக் கவனித்தன. புறா, மீன்கொத்தி, சிட்டுக்குருவி போன்ற சிறுபறவைகள் பரிசல்கள் கடந்து செல்லும் வரை கீச்சொலி எழுப்பியபடி வானில் வட்டமிட்டுக் கொண்டிருந்தன.

கற்றை கற்றையாக அலைகளை நாலாபக்கமும் பரப்பியவாறு பரிசல்கள் முன்னோக்கி ஊர்ந்த போது, அயிரை மீன்கள் போன்ற வெள்ளி வண்ண மின்னோ மீன்கள் கூட்டங் கூட்டமாக மேலெழும்பி நடன நளினத்துடன் நீரில் குதித்தன. பசிவெறியுடன் மின்னோ மீன்களைத் துரத்திய பெரிய வகை மீன்களைப் பெண்கள் சில சமயங்களில் துடுப்பால் அடித்து பரிசலுக்குள் ஏற்றிச் சென்று மாலை நேர உணவுக்கு விருந்தாக்கிக் கொண்டனர். ஆனால், அன்றைய காலைப் போதில் தம்மைத் துன்புறுத்துவார் யாருமின்றி மின்னோக்கள் துள்ளியாடின.

பரிசல்களைச் செலுத்திய பெண்கள் பயணித்த கால்வாய் போன்றிருந்த நீர்வழி வளைந்து சென்று பரிசல்களை ஒரு சுழற்றுச் சுழற்றி அகன்றதொரு கிளை நதியுடன் இணைத்தது. லட்சக்கணக்கான கடற்பறவைகளின் சிறகடிக்கும் ஓசை விண்ணைப் பிளந்தது. மேலெழும்பிய பறவைக் கூட்டம் வானை மறைத்து சிறகு விரித்தன. நீர்ப்பரப்பு மேலும் கருமை அடைந்தது. எழும்பும் போது படபடத்த சிறகுகள் நீர்ப்பரப்பை உழுது சென்றன. கண்கொள்ளாக் காட்சியை கண்டு களித்தபடி பெண்டிர் பரிசல்களைச் செலுத்தினர்.

ஜுஃப்பூர் கிராமப் பெண்டிர் காலங்காலமாக நெல் பயிரிட்டு வந்த சொதசொதப்பான வயல்வெளிகளை நெருங்கிய போது பரிசல்கள் மேகக் கூட்டங்களாக மறைத்திருந்த கொசுப் பட்டாளங்களைத் துளைத்துச் சென்றன. ஒருவர் பின் ஒருவராகப் பரிசல்களிலிருந்து இறங்கி தடித்த கம்பளங்களாக அடர்ந்திருந்த புல், பூண்டு நடைபாதையில் சென்றனர். களைகள் அடர்ந்திருந்த வரப்புகள் ஒவ்வொரு பெண்ணுக்கும் ஒதுக்கப்பட்டிருந்த காணியின் எல்லைகளாக அடையாளம் காட்டின. வயல்களில் மரகதப் பச்சை வண்ண இளம் நெற்பயிர்கள் ஒரு முழம் உயரத்திற்கு நீர்ப்பரப்பிற்கு மேல் அசைந்தாடின.

ஒவ்வொரு பெண்ணினுடைய காணியின் அளவினை ஆண்டுதோறும் ஊர்ப்பெரிசுகள் கூடி தீர்மானித்தனர். ஒவ்வொரு பெண்ணும் அரிசி அமுது

படைக்க வேண்டிய வயிறுகளின் எண்ணிக்கை அடிப்படையில் காணியின் அளவு தீர்மானிக்கப்பட்டதால் பின்டாவுக்குச் சற்றே குறைந்த அளவு காணி ஒதுக்கப்பட்டிருந்தது. முதுகுத் தூளியில் தொங்கிய சிசுவுடன் மிகுந்த கவனத்துடன் நிதானமாக பரிசலை விட்டு இறங்கிய பின்டா வரப்பில் சில எட்டுக்கள் நடந்த பின் மூக்கில் விரலை வைத்தபடி வியப்புடன் நின்றாள். மூங்கில் கழிகளைக் கொண்டும் பனை ஓலைகளைக் கொண்டும் அங்கே அமைக்கப்பட்டிருந்த சிறிய நிழற்குடை அவளுக்கு இன்ப அதிர்ச்சி அளித்தது. பேறு காலத்தில் அவள் வீட்டிலிருந்த போதே அவளுடைய கணவர் அங்கு சென்று அவர்களுடைய மகனுக்காக அந்தக் குடிலை அமைத்திருந்தார். ஆடவருக்குரிய தாம்பத்திய சாகசங்களில் ஒன்றாக அவர் அந்தச் செய்தியைப் பற்றி அவளிடம் எதுவும் தெரிவிக்கவில்லை.

குழந்தைக்கு அமுதூட்டிய பின் அவனைக் குடிலுக்குள் பத்திரப்படுத்தி விட்டு, தலை மீது தாங்கிச் சென்ற மூட்டையில் வைத்திருந்த பணி உடுப்புக்களை மாற்றிக் கொண்டாள். வரப்புகளைக் கடந்து வயலில் இறங்கினாள். கணுக்காலை மறைத்திருந்த கழனி நீருக்குள் உடல் இரு மடிப்பாகும்படி குனிந்து சிறு களைகளை வேருடன் பறித்தாள். இல்லாவிட்டால், பயிரையே மூடி மறைக்கும் அளவிற்கு உயர்ந்து விடுவன அவை. குண்டாவின் அழுகுரல் கேட்டபோதெல்லாம் கழனியை விட்டு வெளியேறி ஈரத்தைத் துடைத்துக் கொண்டு குடிலின் நிழலில் அவனுக்குப் பசியமர்த்தினாள்.

தாயின் அரவணைப்பில் குட்டிக் குண்டா நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தான். ஒவ்வொரு மாலையிலும் குடிசைக்குத் திரும்பியவுடன் சமையலை முடித்து ஓமோராவுக்கு சாப்பாடு படைத்தபின் குழந்தையின் தலை முதல் பாதம் வரையிலும் ஷியா மர விதைகளிலிருந்து தயாரிக்கப்பட்ட வெண்ணெயைத் தடவி அவனுடைய மேனிக்கு மெருகேற்றினாள். கிராமத்தினூடே அவனைப் பெருமை பொங்கச் சுமந்து கொண்டு பாட்டி ஆயிசா குடிசைக்குச் சென்றாள். பாட்டியோ அவனை மேலும் செல்லமாக முத்த மழை பொழிந்து கொஞ்சினாள். அவனுடைய உடலமைப்பைச் சீராக்கும் முயற்சியாக இருவரும் தலையையும், மூக்கையும், காதுகளையும், உதடுகளையும் மீண்டும் மீண்டும் அழுத்தியதால் குண்டாக் குட்டி எரிச்சல் தாளாமல் துவண்டான்.

ஓமோரோ சில சமயங்களில் அவனைப் பெண்டிரிடமிருந்து விடுவித்து போர்வையால் சுற்றி எடுத்துக் கொண்டு தனது குடிசைக்குச் சென்றார். அவர்களுடைய மரபுப்படி கணவன்மார் தமது மனைவியரிடமிருந்து தனித்துத் தங்கினர். அங்கே தனது படுக்கையின் தலைமாட்டில் கெட்ட ஆவிகளிடமிருந்து காத்துக் கொள்வதற்காக வைக்கப்பட்டிருந்த மாந்திரீகச் சின்னங்கள் போன்ற பொருட்களால் கவரப்பட்ட குண்டா தனது பார்வையாலும் விரல்களாலும் துழாவி விளையாடினான். வண்ண வண்ணமாகக் கண்களில் பட்ட ஒவ்வொரு பொருளும் குண்டாவை ஈர்த்தது. குறிப்பாக, தந்தையினுடைய வேட்டைக்கு எடுத்துச் செல்லும் தோல்பை அவனைப் பெரிதும் கவர்ந்தது. வெம்மைக் கடற்பகுதிகளில் கிடைக்கக் கூடிய பளபளப்பான வண்ணச் சிப்பிகளால் அந்தப்பை கிட்டத்தட்ட

முழுவதுமாக மறைக்கப்பட்டிருந்தது. ஊர் மக்களுக்கு உணவாக அவர் தனியராக வேட்டையாடிக் கொணர்ந்த விலங்குகள் ஒவ்வொன்றிற்கும் ஒன்று என்கிற வீதத்தில் சிப்பிகள் பதிக்கப்பட்டன. அதனருகே தொங்கவிடப்பட்டிருந்த நீண்டு வளைந்த வில்லையும் அம்புகள் நிறைந்த அம்பறாத் தூணியையும் கண்ட குண்டா ஆர்வ மிகுதியால் கூவினான். அவனுடைய பிஞ்சுக் கரம் நீண்டு கருமையான குத்தீட்டியைப் பற்றியபோது ஓமோரோ நகைத்தார். அதனுடைய இரும்பு முனை அடிக்கடி பயன்படுத்தப்பட்டதால் பளபளத்தது. தொழுகை விரிப்பைத் தவிர ஏனைய பொருட்கள் அனைத்திலும் குண்டாவின் கரங்கள் விளையாடின. தொழுகை விரிப்பு அதன் உரிமையாளர் மட்டுமே புனிதமாகப் போற்றத் தக்கது. இருவரும் தனியாகக் குடிசையில் இருந்தபோது பெரியவனானதும் குண்டா ஆற்றப் போகிற அரும் பெரும் செயல்களைப் பற்றியெல்லாம் ஓமோரோ அவனுடன் பேசுவதைப் போல வெளிப்படுத்தி மகிழ்ந்தார்.

ஒருவழியாக குண்டாவிற்கு அடுத்த வேளை அமுதளிப்பதற்காக அவனைப் பின்டாவின் குடிசைக்குக் கொண்டு சென்றார். எங்கிருந்த போதிலும் குண்டா குதூகலமாக இருந்தான். பெரும்பாலான நேரம் உறங்கியவாறு படுத்திருந்தான். அவனை மடியில் வைத்துத் தட்டிக் கொடுத்தவாறு அல்லது படுக்கையில் கிடத்தி அவன் மீது குனிந்தபடி மெல்லிய குரலில் தாலாட்டுப் பாடி பின்டா அவனை உறங்கச் செய்தாள்.

பொக்கை வாய்ச் சிரிப்பழகே!
புண்ணியர்கள் பேர் தழைக்கப் பிறந்தவனே!
நீ வளர்ந்து ஆளாகி
வில்லேந்தி வேட்டை கொள்வாய்!
வாளேந்தி போர் புரிவாய்!
அதைக் கண்டு பூரிப்பார் உன் தந்தையே
அந்த நினைப்பில் பொழைச்சிருக்கும்
எந்நாளும் என்உசுரே!

தனது மகன் மீதும் கணவர் மீதும் எவ்வளவு தான் பாசத்தைப் பொழிந்த போதிலும் யதார்த்தமானதொரு மனக்குழப்பம் அவளை ஆட்கொண்டது. முதல் மனைவிமார்கள் பிள்ளைத்தாச்சிகளாக பிறந்த குழந்தைகளுக்குப் பாலூட்டிக் கொண்டிருந்த காலத்தில், இஸ்லாமியக் கணவன்மார்கள், இரண்டாவது மனைவியைத் தேடிக் கொள்வது காலங்காலமாக நிலவி வந்த வழக்கம். அன்று வரையிலும் ஓமோரோ அப்படியொரு முயற்சியில் இறங்கிவிட வில்லை என்ற போதிலும், குண்டா விரைவிலேயே இடுப்பிலிருந்து இறங்கி நடை பயின்றுவிட வேண்டும் என்பதில் பின்டா கண்ணுங் கருத்துமாக இருந்தாள். ஏனெனில், குழந்தை தனியாக நடக்கக் கற்றுக் கொண்ட பின்னர் தான் தாய்ப்பால் ஊட்டுவதை நிறுத்துவர். அதற்குள் ஓமோரோ அது போன்ற ஆவலால் உந்தப்பட்டுவிடக் கூடாது என்பதே அவளுடைய மனக்குழப்பத்திற்குக் காரணம்.

குண்டா பிறந்து பதின்மூன்றாவது முழுநிலவுக் காலத்தில், தள்ளாடித் தளிர் நடை போடத் தொடங்கினான். விரைவில் அவன் முழுமையாக நடை பயின்று தனியே

நடந்துவிட வேண்டுமென்கிற எண்ணத்தில் அவனுக்குப் பெரிதும் உதவினாள். வெகு விரைவிலேயே குண்டா யாருடைய கையையும் பிடித்துக் கொள்ளாமல் அசைந்து, ஆடி, நடந்த போது ஒமோரோ பெருமைப்பட்டார்; பின்டா நிம்மதிப் பெருமூச்சு விட்டாள். அடுத்தமுறை குண்டா பசியால் குரலெழுப்பிய போது, பின்டா மடியேந்தவில்லை; பசுந்தயிர்ச் சோற்றைப் பிசைந்துகொண்டிருந்தாள்.

# 3

மூன்று மழைக் காலங்கள் கடந்து விட்டன. உழவடைப் பணிகள் எதுவும் இல்லாத ஓய்வுக் காலம். கடந்த அறுவடையில் பெற்ற தானிய வகைகளும் உலர வைத்து சேமிப்புக் கிடங்குகளில் பாதுகாக்கப்பட்ட உணவுப் பண்டங்களும் தீர்ந்து விட்டன. ஆடவர் வேட்டைக்குச் சென்றனர். ஆனால், சிறு வகை மானினங்களும் புதரில் வாழும் சிறுபறவைகளும் மட்டுமே கிடைத்தன. சுட்டெரித்த அந்தக் கோடைக்காலத்தில், இயற்கையாகவே வெப்பம் மிகுந்த அந்த நாட்டின் நீர்நிலைகள் அனைத்தும் வறண்டு போயின; சேறும் சகதியுமாகக் காட்சியளித்தன. பெரிய வகை விலங்கினங்கள் காட்டின் உட்பகுதிக்குள் சென்று விட்டன. புதிய உழவடைப் பணிகளைத் தொடங்குவதற்கு ஜுஃப்பூர் மக்கள் தமது உடல் வலிமையைத் திரட்டிக் கொள்ள வேண்டிய தருணம். ஏற்கனவே மனைவிமார்கள் அரிசியாலோ சோளம் போன்ற தானியத்தாலோ ஆக்கப்பட்ட சோற்றுடன் மூங்கில் விதைகள், கீரை வகைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்ட உப்புச் சப்பற்ற சாற்றுடன் சாப்பாடு பரிமாறத் தொடங்கி விட்டனர். பட்டினிக் காலம் ரொம்பச் சீக்கிரமாகவே தலைதூக்கிவிட்டது. கிராமத்தைப் பட்டினியிலிருந்து காப்பாற்றுமாறு அல்லாவைத் தொழுகின்ற அனைவருடைய

வேண்டுதலும் நிறைவேறுவதற்காக முன்பைக் காட்டிலும் கூடுதலாக ஐந்து ஆடுகளும் இரண்டு காளைகளும் பலிகொடுத்தாகிவிட்டது.

ஒருவழியாக, அந்த வறண்ட வானத்தில் மேகங்கள் திரண்டன; மெல்லிய காற்று விரைவாக வீசத் தொடங்கியது. திடீரென மழை பொழிந்தது. ஓரளவு சுமாரான மழை. உழவர்கள் உழுது பார்பிடித்து விதை நடுவதற்கு நிலங்களைப் பக்குவப்படுத்தினர். பெரும் மழைக்காலம் தொடங்குவதற்குள் விதையிட வேண்டும்.

அடுத்த சில காலைப் பொழுதுகளில், காலை உணவுக்குப் பிறகு, பரிசல்களில் நதியைக் கடந்து நெல் வயல்களுக்குச் செல்வதற்குப் பதிலாக, வளரப் போகின்ற பயிர்களின் பச்சை நிறத்தின் சின்னமாக, நீண்டு, அகன்ற பெரிய பெரிய பசுமையான இலைகளை, வளமையைக் காட்டும் மரபுரியாக அணிந்து கொண்டு, உழவர்களின் மனைவிமார்கள் பண்படுத்தப்பட்டிருந்த புன்செய் நிலங்களை நோக்கி நடந்தனர். அவர்களுடைய தலையில் தாங்கியிருந்த மண் குடுவைகளில் இருந்த சிறுதானியங்கள், வேர்க்கடலை, இன்ன பிற விதைகள் வலுவாக வேர் பிடித்து வளர வேண்டித் தொழுது எழுப்பிய குலவை ஒலியும் பாட்டொலியும் ஏற்ற, இறக்கத்துடன் சுதி லயத்தோடு, அவர்கள் கண்களுக்குத் தென்படும் முன்பாகவே காதுகளை இனிமையாக எட்டின.

வெறுங்கால்களுடன் அடி மேல் அடி வைத்துப் பாடிக்கொண்டே ஒவ்வொரு உழவருடைய நிலத்தையும் மூன்று முறை சுற்றி வந்தனர். அதன் பின்னர், பிரிந்து சென்று அவரவர் கணவன்மாருடைய நிலத்தில் அவருக்குப்பின்னால் நின்றனர். அவர் சால் பிடித்து நீண்ட கரையின் ஓரத்தில் தனது வலது கால் பாதத்தின் பெரு விரலை அழுத்தி ஊன்றி குழி ஏற்படுத்த அவருக்குப் பின்னால் ஒவ்வொரு குழியிலும் விதையை ஊன்றி தனது வலது கால் பெருவிரலைக் கொண்டு மண்ணால் மூடியவாறு தொடர்ந்தனர். ஆடவரைக் காட்டிலும் பெண்டிரே கூடுதலாக உழைத்தனர். தமது கணவன்மார்களுக்கு அவர்களுடைய நிலங்களில் உதவியது மட்டுமின்றி நெல்வயல்களிலும் பாடு பட்டனர்; தமது குடிசைகளின் பின்புறம் காய் கறித் தோட்டங்களையும் பராமரித்தனர்.

பின்டா வெங்காயம், வள்ளிக் கிழங்கு, சுரை, பீர்க்கை, பாகற்காய் போன்றவற்றின் விதைகளை நடவு செய்து கொண்டிருந்த வேளையில், குண்டா கிராமத்து மூதாட்டியர் கண்காணிப்பில் ஆடிக் கொண்டிருந்தான். ஐந்து மழைக்காலங்களுக்கும் குறைவான வயது கொண்ட கிராமத்துக் குழந்தைகள் அனைவரையும் கண்காணிக்கும் பணியை ஜுஃப்யூர் கிராம மூதாட்டிகள் ஏற்றனர். பையன்களும் பெண்களும் குட்டி விலங்குகளைப் போல அம்மணமாகச் சுற்றித் திரிந்தனர். அவர்களுள் சிலர் தமது முதல் வார்த்தைகளை மழலையாக உதிர்க்கத் தொடங்கியிருந்தனர். அனைவருமே குண்டாவைப் போல வேகமாக வளர்ந்தனர். சிரித்துக் கொண்டும் கூச்சலிட்டபடியும் ஒருவரை ஒருவர் துரத்தி ஆலமர நிழலில் அதன் பெரிய பெரிய அடிமரங்களுக்குப் பின்னால் ஒளிந்தும் கண்ணாமூச்சி போன்ற விளையாட்டுக்களில் திளைத்தனர்.

ஆனால், அனைத்துக் குழந்தைகளும், குண்டாவைப் போன்ற மிகச் சிறுசுகள் உட்பட, பாட்டி ஒருவர் கதை சொல்வதாகத் தெரிவித்து விட்டால் கப் சிப் என்று அமைதியாக அமர்ந்தனர். கதை சொல்லிப் பாட்டி ஏதோ நேரில் நடந்ததைப் போல கைகளை ஆட்டியும் முக பாவங்களுடனும் நீட்டி முழக்கும் போது, பல வார்த்தைகளைப் புரிந்து கொள்ளும் சக்தி இல்லாவிட்டாலும் குண்டா வைத்த கண் வாங்காமல் பாட்டியையே பார்த்துக் கொண்டிருந்தான்.

குண்டா குட்டிப் பயலாக இருந்த போதிலும் தனது பாட்டியின் குடிசைக்குச் சென்ற போதெல்லாம் அவனுக்கு மட்டும் தனியாக அவள் சொன்ன கதைகளை ஏராளமாகக் கேட்டிருந்தான். ஆனால், தனது வயதை ஒத்த விளையாட்டுத் தோழர்களுடன் கதை கேட்ட போது, பாட்டிமார் எல்லோரையும் காட்டிலும், ரொம்பப் பாசமான, புரிந்து கொள்ள முடியாத, வித்தியாசமான பாட்டியான நியோ போட்டா தான் நல்ல கதைசொல்லி என்று குண்டாவுக்குப் பட்டது. சொட்டைத் தலை, ஆழமான சுருக்கங்கள், கரிச்சட்டி போன்ற கறுப்பு நிறம், பல்லிடுக்குகளில் சிக்கியிருந்த புகையிலைத் துணுக்குகள், நெடுங்காலமாகப் பாக்கு மென்று கறையேறிப் போன எஞ்சியிருந்த ஒன்றிரண்டு பற்கள்—இத்தனை அம்சங்களுடன் பாட்டி தன்னுடைய குட்டையான இருக்கையில் கம்பீரமாக அமர்ந்திருந்தாள். கதை சொல்லும் அவளுடைய நடிப்பு பயமுறுத்திய போதிலும், தன்னுடைய சொந்தப் பேரப்பிள்ளைகளாகத் தம்மீது பாசத்தைப் பொழிகிறாள் என்பதை குழந்தைகள் அறிவர். அவளும் அவர்களைத் தனது பேரன், பேத்திகள் என்று தான் சொன்னாள்.

குழந்தைகள் புடை சூழ, உறுமுவது போல் சொன்னாள், "இப்ப, நா ஒரு கதை சொல்லப் போறேன்..."

"சொல்லுங்க பாட்டி, சொல்லுங்க..." ஒருமித்த குரலில் குழந்தைகளின் நச்சரிப்பு.

மண்டிங்கா கதை சொல்லிகள் அனைவரையும் போலவே, "ஒரு காலத்தில, ஒரு ஊர்ல்ல, ஒரு ஆள் இருந்தா..." என்று அவளும் அதே பாணியில்தான் பொதுவாகத் தொடங்கினாள். ஆனால், அன்று அவள் சொன்ன கதையில், அவர்களுடைய வயதை ஒத்த சிறுவன் ஒருவன் ஒரு நாள் நதிக்கரைக்குச் சென்றான். அங்கே ஒரு முதலை வலையில் சிக்கிக் கொண்டு தவிப்பதைப் பார்த்தான்.

அந்த முதலை கதறியது, "யாராவது காப்பாற்றுங்கள்!"

சிறுவனும் கத்தினான், "நீ என்னைக் கொன்றுவிடுவாய்!"

"மாட்டேன்! அருகில் வா", முதலை உறுதியளித்தது.

சிறுவன் முதலை அருகில் சென்றான். திடீரென தனது வாயை வெளியே நீட்டி தனது நீண்ட பற்களால் சிறுவனைக் கவ்விக் கொண்டது.

"நல்லது செய்த எனக்குத் தீமை செய்கிறாயே! இது முறையா?" பையன்

அலறினான்.

முதலை தனது வாயின் ஓரத்திலிருந்து கூறியது, "ஆமாம்! அப்படித் தான் உலகமே இருக்கிறது!"

பையன் அதனை நம்பவில்லை. ஆகவே, அவர்களைக் கடந்து செல்லக் கூடிய முதல் மூன்று நபர்களிடமிருந்து அதற்கான சாட்சியம் பெறும் வரை பையனை விழுங்குவதில்லை என முதலை ஒப்புக் கொண்டது. முதலில் ஒரு கிழட்டுக் கழுதை அவ்வழியாகச் சென்றது.

பையன் அதனிடம் கருத்துக் கேட்ட போது, கழுதை கூறியது, "இப்பொழுது எனக்கு வயதாகி விட்டது. என்னால் இனிமேல் பாடுபட முடியாது. என்னுடைய எஜமான் சிறுத்தைக்கு இரையாகிப் போகட்டும் என்று என்னைத் துரத்தி விட்டான்!"

"பார்த்தாயா?", என்றது முதலை. அடுத்ததாக, ஒரு கிழக்குதிரை கண்ணில் பட்டது. அதுவும் அதே கருத்தினைத் தெரிவித்தது.

முதலை மீண்டும், "பார்த்தாயா?" என்று குதூகலித்தது. அதன் பின்னர், அந்தப் பக்கமாக ஒரு கொழுத்த முயல் சென்றது. அதனிடம் கேட்ட போது, "நடந்தவற்றை முதலிலிருந்து நேரில் காணாமல் என்னால் கருத்துக் கூற முடியாது" என்றது.

கருவியபடி, அதனிடம் விவரிப்பதற்காக முதலை வாயை அகலத் திறந்தது. வெளியே குதித்த சிறுவன் பாதுகாப்பாக நதிக்கரையை அடைந்தான்.

முயல் பையனைப் பார்த்துக் கேட்டது, "உனக்கு முதலைக் கறி பிடிக்குமா?" ஆம் என்றான். "உன்னுடைய பெற்றோர்களுக்கு?" அவன் மீண்டும் ஆம் என்றான். "பிறகென்ன? இங்கே தான் ஒரு முதலை சட்டியில் போட்டு வறுப்பதற்குத் தயாராக இருக்கிறதே!"

பையன் பின்னங் கால் பிடறியில் பட ஓடினான். கிராமத்து ஆட்களை அழைத்துக் கொண்டு திரும்பினான். அவர்கள் முதலையைக் கொல்வதற்கு உதவினர். அவர்களுடன் ஒரு வேட்டை நாயும் வந்திருந்தது. அது முயலைத் துரத்திப் பிடித்துக் கொன்றுவிட்டது.

நியோ போட்டோக் கிழவி இப்போது அழுத்தமாகக் கூறினாள், "முதலை சொன்னது சரியாகத் தான் இருந்தது! நன்மை செய்தவருக்குக் கைம்மாறாக தீமை செய்வது தான் உலகின் நடைமுறையாக உள்ளது. அதைத் தான் நான் உங்களுக்குக் கதையாகக் கூறினேன்!"

குழந்தைகள் நன்றியுணர்வுடன் கூறினர், "கடவுள் புண்ணியத்துல நீங்க நல்லாயிருக்கணும், பாட்டி!"

பிறகு, பிற பாட்டிகள் அப்பொழுது தான் வறுக்கப்பட்ட சிறு, சிறு பூச்சிகளைக் கிண்ணங்களில் ஏந்தியபடி குழந்தைகளுக்குப் பரிமாறினர். ஆண்டின் பிற

நாட்களில் இதுபோன்ற உணவுப் பண்டங்கள் குழந்தைகளுக்கு கொரிப்பதற்கான தின்பண்டங்களாகக் கொடுக்கப்பட்டிருக்கக் கூடியவை. ஆனால், பெரும் மழையை எதிர்பார்த்திருந்த, பசியுடன் கழிக்க வேண்டிய காலம் தொடங்கிவிட்ட, அந்தப் பருவத்தில் வறுக்கப்பட்ட பூச்சிகள் மதிய உணவாகப் பரிமாறப்பட்டன. ஏனெனில், குடிசையின் அடுக்குப் பானைகளில் ஒரு சில கைப்பிடி அளவு அரிசியும் தானியமும் தானே எஞ்சியுள்ளன.

# 4

**த**ற்பொழுது நாள்தோறும் காலைப் பொழுதுகளில் விட்டு விட்டு மழை பொழியத் தொடங்கிவிட்டது. வானம் வெறிச்சோடிய வேளைகளில் குண்டா தன்னுடைய தோழர்களுடன் வெளியே விளையாட ஓடினான். எப்பொழுதுமே மிக அருகில் இருந்ததைப் போல காட்சியளித்தபடி, பூமியைத் தொட்டுக் கொண்டு, அடிவானத்தில் வளையமிட்டிருந்த வானவில்லைப் பார்த்து, "எனக்கு! எனக்கு!!" என்று குழந்தைகள் கத்தினர். மழைபொழியத் தொடங்கிய உடனே, கூடவே கொசுப் பட்டாளங்களும் வண்டுகளும் படையெடுக்கத் தொடங்கிவிட்டன. அவை கடித்ததால் வலியைப் பொறுக்க முடியாமல் பிள்ளைகள் மீண்டும் குடிசைகளுக்குள் புகுந்து கொண்டனர்.

பிறகு, திடீரென்று, ஓர் இரவில் பெரும் மழை கொட்டத் தொடங்கியது. குளிர்ந்த குடிசைகளுக்குள் முடங்கியபடி ஓலைக் கூரைகளை நீர்த்தாரைகள் இடைவிடாது தாக்கியதைக் கவனித்துக் கொண்டிருந்தனர். மின்னல் வெட்டிய ஒளிப்பிழம்புகளால் இடுக்கிய கண்களுடன் அச்சுறுத்திய இடியோசையையும் கேட்டபோது குழந்தைகளை அரவணைத்துக் கட்டிக் கொண்டனர். மேகக் கூட்டங்களின் ஆர்ப்பரிப்புகளுக்கு இடையே நரிகள்

ஊளையிடுவதும், ஓநாய்களின் கூக்குரலும், சொறித் தவளைகளின் பேரிரைச்சலும் காதுகளைத் துளைத்தன.

அடுத்த இரவும் மழை பொழிந்தது. அதற்கடுத்த இரவு, மேலும் அடுத்த இரவு என தொடர்ந்து இரவு நேரங்களில் மட்டும் மழை பிடித்துக் கொண்டது. ஆற்றுப் பகுதியை ஒட்டிய தாழ்நிலங்கள் வெள்ளத்தில் மூழ்கின. வயல் வெளிகளில் நீர் நிரம்பித் ததும்பியது. கிராமத் தெருக்கள் சகதிக் காடாகக் காட்சியளித்தன. அப்படியிருந்தும், நாள்தோறும் காலை உணவுக்கு முன்னர், கிராமத்து ஆடவரெல்லாம் தெருச்சகதிகளில் நடந்து சென்று மசூதியில் தொழுதனர். மேலும் கூடுதல் மழை வேண்டி அல்லாவை இறைஞ்சினர். மழைப்பொழிவு குறைந்து விட்டால் அடுத்து வரும் கடும் வெப்பக் காலத்தில் பயிர் பச்சைகளெல்லாம் வாடி வதங்கிப் போய்விடுவன.

மழலையருக்கான வகுப்பு நடத்தப்பட்ட சொதசொதப்பான குடிசைக்குள்ளே மங்கிய ஒளியில், தரையில் குழி தோண்டி ஏற்படுத்தப்பட்ட கணப்பு அடுப்பிலிருந்து வெளிப்பட்ட வெப்பத்தின் சூட்டில் நியோ போட்டோ பாட்டி குண்டாவிற்கும் பிற குழந்தைகளுக்கும் போதிய பெரும் மழை பொழியாததொரு காலத்தை நினைவுகூர்ந்து அப்போது மக்கள் பட்ட அவதியை விவரித்துக் கொண்டிருந்தாள். மக்களுடைய அல்லல் எந்த விதத்தில் இருந்த போதிலும் தனது வாழ்நாளில் அவர்கள் எதிர்கொண்ட கடுமையான காலத்தை நியோ போட்டோ மறக்காமல் நினைவில் வைத்திருந்தாள். இரண்டு நாள் கனத்த மழைக்குப் பின்னர் வெயில் காலம் வந்துவிட்டதென்று அவள் குழந்தைகளுக்கு கதையை விவரிக்கத் தொடங்கினாள். மக்கள் கடுமையான பக்தியுடன் அல்லாவைத் தொழுத போதிலும், பாரம்பரிய மழை நடனத்தை ஆவேசமாக ஆடிய போதிலும், நாள்தோறும் இரண்டு வெள்ளாடுகளையும் ஒரு காளையையும் பலியிட்ட போதிலும், நிலத்தில் வளர்ந்த அனைத்தும் கருகி மடிந்தன. வனத்தின் நீர்நிலைகள் கூட வறண்டு போயின. முதலில் வனப் பறவைகளும் பின்னர் வனவிலங்குகளும் நா வறட்சியால் கிராமக் கிணறுகளில் தென்பட்டன. பளிங்கு போல் தெளிந்திருந்த வானத்தில் இரவு வேளைகளில் ஆயிரக்கணக்கான விண்மீன்கள் பேரொளியை உமிழ்ந்தன. ஊதற் காற்று வீசியது. மக்களுள் பெரும்பாலானோர் நோய்வாய்ப்பட்டனர். ஜுஃப்யூர் கிராமத்தைக் கெட்ட ஆவிகள் பிடித்து ஆட்டின.

உடல் நலத்துடன் இருந்தவர்கள் தொழுகையையும் மழை நடனத்தையும் தொடர்ந்தனர். கடைசியாக இருந்த வெள்ளாட்டையும் காளையையும் பலிகொடுத்தாகிவிட்டது. அல்லா ஜுஃப்யூர் கிராம மக்களுடைய தொழுகையை ஏற்க மறுத்துவிட்டாரோ என்கிற அச்சம் பீடித்துக் கொண்டது. வயசாளிகளும் வலுவிழந்தோரும் நோயாளிகளும் மடியத் தொடங்கினர். ஏனையோர் கிராமத்தை விட்டு வெளியேறி வேறொரு கிராமத்திற்குச் சென்று உணவுப்பண்டங்கள் வைத்திருப்போரிடம் தம்மை அடிமைகளாக ஏற்றுக் கொண்டு தமது தொப்பையைக் காயவிடாமல் காப்பதற்கு ஏதேனும் கொடுக்கும்படி மன்றாடினர். வேறெங்கும் செல்வதற்குக் கதியற்றோர் சாரமற்று குடிசைகளுக்குள் முடங்கிக் கிடந்தனர். அப்போது அல்லா மனமிரங்கி கைரபா குண்டா கின்டே எனும்

இயற்கை கடந்த அருளாற்றல் பெற்ற மனிதரை அந்த ஊருக்கு அனுப்பி வைத்தார். மக்களுடைய அவல நிலையைக் கண்ட அவர் முழந்தாழிட்டு அல்லாவைத் தொழத் தொடங்கினார். ஊன், உறக்கமின்றி சில மிடறு நீரை மட்டும் அருந்தியபடி அடுத்த ஐந்து நாட்கள் தொடர்ந்து தொழுதார். ஐந்தாவது நாள் மாலையில் கனத்த மழை கொட்டியது. வெள்ளம் பெருக்கெடுத்தது. ஜுஃப்பூர் மக்கள் காப்பாற்றப்பட்டனர்.

நியோ போட்டோ பாட்டி கதை சொல்லி முடித்தவுடன் பிற குழந்தைகள் குண்டாவை புதுவிதமானதொரு மரியாதையுடன் பார்த்தனர். தனது பாட்டி ஆயிசாவின் கணவரான தனது பாட்டனாரின் பெயரை அவன் பெற்றிருந்தான். ஏற்கனவே, பிற குழந்தைகளுடைய பெற்றோர் தனது பாட்டியிடம் மதிப்புடன் நடந்து கொண்டதை அவன் கவனித்திருந்தான். நியோ போட்டோ பாட்டியைப் போலவே தனது பாட்டியும் கிராமத்தில் மிகவும் மதிப்பிற்குரியவள் என்பதை உணர்ந்து கொண்டான்.

இரவுதோறும் கனத்த மழை கொட்டு கொட்டென்று கொட்டியது. மழை ஒருவாறு ஓயத் தொடங்கியவுடன் பெரியவர்கள் கணுக்கால் வரையிலும் சில இடங்களில் முழங்கால் வரையிலும் சேற்றில் நடந்தும் பரிசல்களைச் செலுத்தியும் வயல்களுக்குச் சென்று திரும்பியதைக் குண்டாவும் பிற குழந்தைகளும் கவனித்தனர். நதியின் கிளை வாய்க்காலில் நீர்மட்டம் உயர்ந்ததால் நெல்வயல்களெல்லாம் மூழ்கிப் போனதை பின்டா ஓமோரோவிடம் கூறியதை குண்டா கேட்டான். குளிரிலும் பசியிலும் வாடியபோதிலும் குழந்தைகளின் தந்தைமார் நாள்தோறும் அல்லாவுக்கு வெள்ளாடுகளையும் காளைகளையும் பலியிட்டனர். ஒழுகிய குடிசைகளின் கூரைகளை ஓலைகளை வைத்துத் தைத்து பழுது நீக்கினர். மண்சுவர்களைக் கெட்டிப்படுத்தினர். குறைந்து கொண்டிருந்த சிறுதானியங்களும் அரிசியும் அடுத்த அறுவடைக் காலம் வரை நீடிக்க வேண்டுமென்று தொழுதனர்.

குண்டாவும் அவனுடைய தோழர்களும் இன்னமும் சிறு பிள்ளைகளாக இருந்ததால், தொப்பையில் எரிந்த பசித்தீயைப் பற்றியெல்லாம் கவலைப்படாமல் தமது ஆட்டங்களிலேயே கவனத்தைச் செலுத்தினர்; சகதியில் கட்டிப் பிடித்து மல்லாடினர்; ஆடையில்லாத தமது புட்டங்கள் உயரமான சகதிப் பகுதிகளில் சறுக்கிக் கொண்டு இறங்கிவர குதூகலமடைந்தனர். இருப்பினும், சூரியனைக் கண்டு நாட்கள் பல ஆகிப் போன ஏக்கத்தால், சாம்பல் நிற வானத்தை அண்ணாந்து பார்த்து கைகளை அசைத்தபடி தொழுதனர், “சூரியனே, வெளிச்சம் கொடு! உனக்கொரு ஆட்டைப் பலியிடுகிறோம்!” அவர்களுடைய பெற்றோர் செய்ததைப் பார்த்திருக்கிறார்களல்லவா?

உயிரூட்டிய மழையால் பயிர் பச்சைகளெல்லாம் பசுமையாகவும் செழிப்பாகவும் அசைந்தாடின. பறவைகளின் இன்னிசை காற்றை நிறைத்தது. மரங்களும் செடி கொடிகளும் பூத்துக் குலுங்கிய மலர்களிலிருந்து நறுமணத்தைப் பரப்பின. ஒவ்வொரு காலைப் போதிலும், செம்பழுப்பு மண் கால்களில் மிதிபட்டு சிவப்புக் கம்பளம் விரித்திருந்தது. முந்திய இரவு மழையில் குளித்து மெருகேறிய கரும்பச்சை இலைகளும் பூக்களின் ஒளிமிகுந்த இதழ்களும் கண்களுக்கு விருந்தளித்தன.

இயற்கை செல்வச் செழிப்பால் பூரித்திருந்த போதிலும், அவற்றுள் எதுவுமே மக்கள் உண்பதற்கேற்ற பக்குவத்தை இன்னமும் பெறாததால், அவர்கள் மத்தியில் பசி நோய் பரவிக் கொண்டிருந்தது. காய்த்துக் கனத்துத் தொங்கிய காய்கள் எவையும் உட்கொள்ள ஏற்றவையாக இல்லாததால் பசிவெறியுடன் பார்த்து சப்புக் கொட்டிக் கொண்டனர். ஏனெனில், துணிந்து உண்டவர்கள் வாந்தியெடுத்து நோய்வாய்ப்பட்டனர்.

பாட்டி ஆயிசா தனது பேரனைப் பார்த்த போதெல்லாம் நாக்கால் 'த்சொ' ஒலி எழுப்பியபடி 'எலும்பும் தோலுமாயிருக்கானே!' என ஆதங்கப்பட்டாள். ஆனால், உண்மையில், பாட்டி பேரனைக் காட்டிலும் மோசமான நிலையில் இருந்தாள். ஜுஃப்யூரிலிருந்த தானியக் கிடங்குகள் அனைத்தும் தற்பொழுது காலியாகி விட்டன. வெட்டித் தின்றவையும் பலியிடப்பட்டவையும் போக, எஞ்சியிருந்த ஆடு மாடுகள், கோழிகள் அடுத்த ஆண்டிற்கான குட்டிகளையும் கன்றுகளையும் குஞ்சுகளையும் பெறுவதற்காகவே விட்டு வைக்கப்பட்டிருந்தன. ஆகவே, சூரிய உதயத்திலிருந்து பொழுது சாயும் வரை கிராமத்தைச் சுற்றிலும் தேடி அலைந்து பிடித்த எலிகளையும், கிழங்குகளையும், கீரை வகைகளையும் சமைத்துப் பசியாற்றிக் கொண்டனர்.

ஆண்டின் பிற பருவங்களில் சென்றதைப் போல ஆடவர் வேட்டைக்குச் சென்றனர். காட்டு விலங்குகளை வேட்டையாடிப் பெற்ற போதிலும் அவற்றைக் கிராமத்திற்கு இழுத்து வருவதற்கான உடல்வலு குன்றியிருந்தனர். பழங்குடியினருடைய குலமரபு வழக்கங்கள் மந்திகளையும் வாலில்லாப் பெரிய வகைக் குரங்குகளையும் வேட்டையாடுவதற்குத் தடை விதித்திருந்தன. ஏராளமாகக் கிடைத்த பறவை முட்டைகளைக் கூட அவர்கள் தொடுவதில்லை. மாண்டிங்கர்கள் பச்சைத் தவளைகள் நச்சுத் தன்மை கொண்டவை எனக் கருதினர். சமயப் பற்று மிக்க இஸ்லாமியர் என்பதால் தமது கிராமம் வரை மந்தைகளாக உலா வந்த காட்டுப் பன்றிகளையும் தொட்டதில்லை.

நெடுங் காலமாகவே, கிராமத்தின் இலவ மர உச்சிக் கிளைகளில் தான் கூடு கட்டி கொக்குக் குடும்பங்கள் வாழ்ந்தன. புதிதாகப் பொறிக்கப்பட்ட கொக்குக் குஞ்சுகளுக்கு தாய்க் கொக்குகள் நதிக்கரை வரை சிறகடித்துச் சென்று மீன்களைக் கவ்விக் கொண்டு திரும்பி ஊட்டுவதுண்டு. அதைக் கவனித்துக் கொண்டிருந்த கிராமத்துப் பாட்டிகளும் குழந்தைகளும் மரத்தடியில் கூடி கொம்புகளையும் கற்களையும் மேல்நோக்கி எறிந்தனர். பதட்டமடைந்த தாய்ப் பறவைகளும் குஞ்சுகளும் மீன்களை நழுவவிடுவதுண்டு. மரத்தின் அடர்ந்த கிளைகளுக்கும் இலைகளுக்கும் ஊடாக இறங்கிச் சென்று கீழே விழுந்த மீனை அவர்கள் அடித்துப் பிடித்து பற்றிவிடுவர். திறமைசாலி வீட்டில் அன்றைக்கு மீன் விருந்து. சில சமயங்களில், எறிந்த தடியாலோ கல்லாலோ அடிபட்டு குஞ்சுப் பறவையோ தாயோ விழுந்து விட்டால் முண்டியடித்து எடுத்தவர் வீட்டில் கொக்குச் சாறு! ஆனால், அத்தகைய விருந்துகள் அரிதானவை.

நாள்தோறும் பொழுது சாய்ந்து இருட்டிய பிறகு வீடு சேர்ந்த குடும்பத்தினர் அனைவரும் தாம் கொண்டு சென்ற எலியையோ பெரிய வகைப் புழுக்களையோ

திரட்டி, அன்றிரவு மண்பானையில் சாறாக்கி உண்டனர். அத்தகைய உணவு அவர்களுடைய பசியைப் போக்கிக் கொள்ள உதவியதே தவிர உடலுக்குத் தேவையான ஊட்டம் கிடைக்கவில்லை. அதனால் தான் ஜுஃப்பூர் கிராமத்தில் இறந்தோரின் எண்ணிக்கை அதிகரிக்கத் தொடங்கியது.

# 5

**த**ற்பொழுது, கிராமமெங்கும் அவ்வப்போது பெண்களின் அழுகுரல் உச்ச ஸ்தாயியில் கேட்டது. அதன் பொருளைப் புரிந்து கொள்ள இயலாத சிசுக்களும் மழலையருமே கொடுத்து வைத்தவர்கள். குண்டா கூட அழுகுரல் எழுப்பிய பெண்ணுக்கு ரொம்பவும் வேண்டப்பட்டவர்கள் அப்பொழுது தான் இறந்து போயினர் என்பதைப் புரிந்து கொள்ளும் அளவுக்கு வளர்ந்து விட்டான். மாலைப் பொழுதுகளில், காலையில் களை வெட்டுவதற்காக வயலுக்குச் சென்ற ஒருவரை மாட்டுத் தோலில் போட்டுத் தூக்கிக் கொண்டு கிராமத்திற்குத் திரும்புவது வழக்கமாகிப் போனது. அந்த ஆளோ அசைவற்றுக் கிடந்தான்.

நோயால் சில பெரியவர்களுடைய கால்கள் வீங்கிக் கொண்டே இருந்தன. இன்னும் சிலர் காய்ச்சலால் அளவுக்கதிகமாக வியர்த்துக் கொட்டி உடல் சில்லிட்டு நடுங்கினர். குழந்தைகள் அனைவருக்கும் கைகளிலும் கால்களிலும் சில பகுதிகள் முதலில் வீங்கத் தொடங்கின; வேகமாகப் பருத்து வேதனையால் துடிதுடிக்கச் செய்தன; பின்னர், வீங்கிப் பருத்த பகுதி வெடித்து செம்பளுப்பான திரவம் வடியத் தொடங்கியது; அதுவே மஞ்சள் நிறம் கொண்ட சீழாக உருவெடுத்து துர்நாற்றம் வீசியது; ஈக்கள் மொய்த்தன.

காலில் சிலந்தி வெடித்துச் சீழ் பிடித்திருந்ததால், குண்டா ஓட முயன்ற போது தடுமாறி கீழே விழுந்து விட்டான். பலத்த அடியுடன் விழுந்தவனை அவனுடைய தோழர்கள் தூக்கி விட்டனர்; அதிர்ச்சியால் உறைந்து போனவன், பின், கத்தினான். நெற்றியிலிருந்து இரத்தம் வழிந்தது. வயலிலிருந்த பின்டாவும் ஓமோரோவும் ஓடோடிச் சென்று அவனைத் தூக்கிக் கொண்டு பாட்டி ஆயிசாவின் குடிசைக்கு விரைந்தனர். அவள் சில நாட்களாகவே குழந்தைகளைப் பராமரிக்கும் குடிசையில் தட்டுப்படவில்லை.

அவள் ரொம்பவே மெலிந்து போய்விட்டாள். அவளுடைய கறுத்த முகம் கன்னங்கள் இடுங்கித் தொங்கியது. தன்னுடைய மூங்கில் கீற்றுப் படுக்கையில் மாட்டுத் தோலை மூடி முடங்கியிருந்தாள். உடலெங்கும் வியர்த்துக் கொட்டியது. குண்டாவைக் கண்டவுடன் துள்ளியெழுந்து நெற்றியில் வழிந்த இரத்தத்தைத் துடைத்தாள். அவனை இறுக்கி அணைத்தபடி, குழுமியிருந்த பிற குழந்தைகளை ஓடிச் சென்று சில கட்டெறும்புகளைப் பிடித்து வருமாறு பணித்தாள். கட்டெறும்புகளுடன் சிறுவர்கள் திரும்பினர். நெற்றியில் காயத்தால் பிளவுண்ட பகுதியை ஒன்று சேர்த்து இறுக்கியபடி, கட்டெறும்புகளை ஒன்றன் பின் ஒன்றாக பிளந்திருந்த தோல் பகுதியை இணைக்கும் வகையில் கடிக்க விட்டாள். அதனுடைய கொடுக்கைச் செலுத்திக் இருபுறத்தோலும் இணையுமாறு கவ்விகொண்டவுடன் அதன் உடற்பகுதியைத் துண்டித்து விட்டாள். அவ்வாறாகப் பிளவுண்ட காயத்திற்குத் தையல் போட்டாள்.

பிற குழந்தைகளை அனுப்பி விட்டு குண்டாவைத் தனது படுக்கையில் தனக்கருகிலேயே படுத்துக் கொள்ளச் சொன்னாள். சற்று நேரம் அமைதியாக இருந்த பாட்டி விட்ட பெருமூச்சை படுத்திருந்த குண்டாவால் கேட்க முடிந்தது. பிறகு, தனது படுக்கைக்கு அருகில் இருந்த அலமாரியில் அடுக்கப்பட்டிருந்த புத்தகங்களைக் காட்டினாள். மெல்லிய குரலில் மெதுவாகப் பேசியவள் அந்தப் புத்தகங்கள் அனைத்தும் அவனுடைய பாட்டனாருக்குரியவை என்று தொடங்கி அவரைப் பற்றிய பல செய்திகளைக் கூறினாள்.

அவருடைய தாயகமான மௌரெடேனியாவில், கைரபா குண்டா கின்டே முப்பத்தைந்து வயது வரை ஆசான் ஒருவரிடம் ஆன்மீகப் பயிற்சி பெற்றார். அதன் பின்னர் ஆசான் அவருக்கு ஆசிகள் அருளிப் புனிதராக்கினார். பல நூறு ஆண்டுகள் பின்னோக்கி பழைய மாலி வரை சென்ற புனித மாந்தர்களின் குடும்ப மரபுகளை குண்டாவினுடைய பாட்டனார் குண்டா பின்பற்றினார். இயற்கை கடந்த ஆற்றல் படைத்த தனது ஆசானிடம் தன்னை சீடனாக ஏற்றுக் கொள்ளும்படி வேண்டிய பாட்டனார் குண்டா அடுத்த பதினைந்து ஆண்டுகள் தனது மனைவிமார், அடிமைகள், சீடர்கள் அடங்கிய குழுவுடன் கிராமம் கிராமமாகப் புனிதப் பயணம் மேற்கொண்டு அல்லாவிற்கும் அவருடைய குடிமக்களுக்கும் இறைப்பணியாற்றினார். மௌரெடேனியாவிலிருந்து தெற்கு நோக்கி, புழுதி படிந்த ஒற்றையடிப் பாதைகளையும், சகதி நிறைந்த வாய்க்கால் கரைகளையும் கடந்து, சுட்டெரித்த வெயிலிலும், கொட்டிய மழையிலும், பசுமை படர்ந்த பள்ளத்தாக்குகளிலும், பலத்த காற்று வீசிய தரிசு நிலங்களிலும் நடைப்

பயணமாகச் சென்றார்.

புனித மாந்தன் என்கிற தகுதியை அடைந்த பின்னர், கைரபா குண்டா கின்டே தனியாகவும் பல மாதங்கள் பழைய மாலியைச் சுற்றிலுமிருந்த கெய்லா, ஜீலா, கங்கபா, திம்புகா போன்ற இடங்களிலெல்லாம் சுற்றித் திரிந்து, தான் சந்தித்த புனித மாந்தர்களின் கால்களில் தலைபடும்படி தரையில் விழுந்து வணங்கி அவர்களுடைய அருளாசிகளை வேண்டினார். அவர்களும் தயக்கமின்றி அவருக்கு தமது ஆசிகளை வழங்கினர். அதன் பின்னர், அல்லா அந்த இளம் துறவியினுடைய பாதங்களை தெற்குத் திசை நோக்கி வழிகாட்டினார். இறுதியாக, காம்பியா நாடு சென்று சேர்ந்தவர் முதலில் பகாலி நிதிங் எனும் கிராமத்தில் தங்கினார்.

குறுகிய காலத்திலேயே, அவருடைய தொழுகைகள் சிறந்த பலன்களை உடனடியாக அளிப்பதை உணர்ந்து கொண்ட கிராம மக்கள், அந்த இளம் புனிதர் அல்லாவின் அருளாசிகளைச் சிறப்பாகப் பெற்றவர் என்று போற்றினர். முரசறைந்து அச்செய்தி பரப்பப்பட்டது. உடனே, ஏனைய கிராம மக்கள் இளம் கன்னியரையும், அடிமைகளையும், ஆடு மாடுகளையும் காணிக்கையாக்கி தமது கிராமங்களுக்கு அருளாசி நல்குவதற்கு வருகை தரும்படி வேண்டினர். அத்தகைய அழைப்புகளை ஏற்று அவர் அங்கிருந்து புறப்பட்ட சில நாட்களிலேயே, ஜிஃப்பராங் எனும் கிராமத்திற்குச் செல்ல நேர்ந்தது. அல்லா தான் அவரை அக்கிராமத்திற்குச் செல்லுமாறு பணித்திருக்க வேண்டும். ஏனெனில், அவருடைய தொழுகைகளுக்குக் கைம்மாறாக காணிக்கைகள் படைக்க அந்த ஊர் மக்களிடம் எதுவுமில்லை. அங்கே இருந்த போது தான் அவர் ஜுஃப்யூர் எனும் கிராமத்தைப் பற்றிக் கேள்விப்பட்டார். அங்கே மக்கள் போதிய மழை பொழியாததால் நோயால் மடிந்துகொண்டிருந்தனர். அங்கு சென்று தொடர்ந்து ஐந்து நாட்கள் ஊன், உறக்கமின்றி அல்லாவைத் தொழுதார். அல்லாவின் கருணையால் ஐந்தாவது நாள் பெரும்மழை பொழியவே, மக்கள் காப்பாற்றப்பட்டனர்.

பாட்டனார் குண்டாவினுடைய மாபெரும் செயலைப் பற்றிக் கேள்விப்பட்ட அப்பகுதியை ஆண்ட மன்னர் பர்ரா நேரடியாகச் சென்று அவரைச் சந்தித்து, கன்னியொருத்தியை அவருடைய முதல் மனைவியாக ஏற்றுக் கொள்ளுமாறு பரிசளித்தார். சைரெங் எனும் பெயர் கொண்ட தனது முதல் மனைவி மூலம் கைரபா குண்டா கின்டே ஜானே, சலோம் என்ற இரு மகன்களைப் பெற்றார்.

நிகழ்வுகளை விவரித்த பாட்டி3 ஆயிசா, தனது மூங்கில் படுக்கையில் எழுந்து அமர்ந்தாள். "அப்போது தான் கிராமக் கொண்டாட்டம் ஒன்றில் நடனமாடிய ஆயிசாவைக் கண்டார்." சொல்லிக்கொண்டிருக்கும் போதே அவளுடைய கண்கள் மின்னின. "அப்போது எனக்குப் பதினைந்து வயது!" சிரிப்புப் பொங்கியது. பொக்கை வாய் அகன்று கன்னங்கள் காதுகளைத் தொட்டன. "இரண்டாவது மனைவியைத் தேடிக் கொள்ள உனது பாட்டனுக்கு மன்னர் தேவைப்படவில்லை! இந்தப் பொந்தியிலிருந்து தான் உன் அப்பன் ஓமோரோ பிறந்தான்"

தாயின் குடிசைக்குத் திரும்பிய குண்டா இரவு நெடு நேரம் வரை உறக்கம் கொள்ள வில்லை. பாட்டி கூறிய செய்திகளை அசை போட்டுக் கொண்டே

படுத்திருந்தான். புனிதத் துறவியான தாத்தா ஒருவர் கிராமத்தைக் காப்பாற்றியது பற்றிய செய்தியை அவன்பலமுறை கேட்டிருந்தான். ஆனால், அவர் தான் அவனுடைய தகப்பனாரின் தகப்பனார் என்பது அவனுக்கு அப்பொழுதுதான் புரிந்தது. தான் தனது தந்தையை அறிந்திருந்ததைப் போல ஓமோரோவும் அவருடைய தந்தையை நன்கு அறிந்திருந்தார் என்பது அவனுக்கு அப்பொழுது பிடிபட்டது. தனக்கு பின்டாவைப் போல தனது தந்தைக்கு ஆயிசா பாட்டி அன்னை என்பதும் தெளிவானது. அவனும் ஒரு காலத்தில் ஒரு பெண்ணை மணந்து தனக்கென ஒரு மகனைப் பெறுவான். அந்த மகன் மறுபடியும்.....

புரண்டு படுத்துக் கண்களை மூடிய குண்டா சிந்தனையில் மூழ்கியபடியே உறங்கினான்.

# 6

அடுத்த சில நாட்கள் பொழுது சாய்ந்த பின்னர், வயல் வெளியிலிருந்து திரும்பிய பிறகு, ஒரு குடுவை குடிநீர் சேந்தி வருவதற்காக குண்டாவை கிராமக் கிணற்றிற்கு பின்டா அனுப்பினாள். அன்று வயற்காடுகளில் கிடைத்தவற்றைக் கொண்டு அந்த நீரில் சாறு காய்ச்சினாள். காய்ச்சிய சாற்றை எடுத்துக் கொண்டு கிராமத்தினூடே பாட்டி ஆயிசாவின் குடிசையை நோக்கித் தாயும் மகனும் விரைந்தனர். பின்டா மிகவும் சிரமப்பட்டு மெதுவாக நடந்ததாக குண்டாவிற்குத் தென்பட்டது. அவளுடைய அடிவயிறு பருத்தும் கனமாகவும் இருந்ததாக அவனுக்குப் பட்டது.

விரைவில் குணமான பிறகு பார்த்துக் கொள்வதாக பாட்டி தடுத்த போதிலும், பின்டா குடிசையைப் பெருக்கித் தூய்மைப்படுத்தினாள். காட்டு மரங்களில் படர்ந்திருந்த உலர்ந்த கரும் மொச்சைகளின் மீது படிந்திருந்த மஞ்சள் நிற மாவைக் கொண்டு தயாரிக்கப்பட்ட பட்டினிக் கால ரொட்டியுடன் காய்ச்சி எடுத்துச் சென்ற சாற்றையும் உட்கொண்ட பின்னர் பாட்டியைப் படுக்கையில் கிடத்தி விட்டு குடிசையை விட்டு வெளியேறினர்.

ஒரு நாள் இரவு உறங்கிக் கொண்டிருந்த குண்டாவை

அவனுடைய தந்தை உலுக்கி எழுப்பிய போது கண்விழித்தவன், பின்டா தனது படுக்கையில் மெல்லிய முனகல் ஒலிகளை எழுப்பிக் கொண்டிருந்ததைக் கவனித்தான். குடிசைக்குள் நியோ போட்டோ பாட்டியும் பின்டாவினுடைய தோழி ஜாக்கே டௌரேவும் அங்குமிங்குமாக விரைந்து கொண்டிருந்தனர். குண்டாவை அழைத்துக் கொண்டு ஒமோரோ கிராமத்தினூடே அந்த நள்ளிரவில் விரைந்தார். நடந்தது என்னவென்று அறியாமல் திகைத்தபடி தூங்கிவழிந்து கொண்டிருந்த குண்டா சற்று நேரத்தில் அவனுடைய தந்தையின் படுக்கையில் உறங்கிப் போனான்.

மறுநாள் அதிகாலையில் மீண்டும் குண்டாவை எழுப்பிய ஒமோரோ 'உனக்கு ஒரு தம்பிப் பயல் கிடைத்திருக்கிறான்' என்றார். தூக்கக் கலக்கத்துடன் முழங்கால்களுக்கு இடையே முகத்தைப் புதைத்த குண்டா கண்களைக் கசக்கியபடி, எப்போதும் கடுமையான முகத்துடன் காட்சியளித்த தனது தந்தையை குதூகலப்படுத்தும் விதத்தில் ஏதோ சிறப்பாக நடந்து விட்டது என எண்ணினான். மதியம் தனது விளையாட்டுத் தோழர்களுடன் காட்டுவெளிகளில் ஏதேனும் திங்கக் கிடைக்குமா என்று தேடிக் கொண்டிருந்தான். அப்பொழுது அவனைக் கூவி அழைத்த நியோ போட்டோ பாட்டி அவனை பின்டாவிடம் கூட்டிச் சென்றாள். படுக்கையின் விளிம்பில் மிகவும் களைப்பாக அமர்ந்திருந்த பின்டா மடியில் குழந்தையைக் கிடத்தி மெதுவாகத் தடவிக் கொண்டிருந்தாள். சுருக்கம் நிறைந்த அந்தக் கறுப்புக் குட்டியை அவன் ஒரு கணம் வைத்த கண் வாங்காமல் பார்த்தான். பிறகு, அதைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்த இரு பெண்டிரையும் பார்த்தான். வழக்கமாக பெருத்துக் காணப்பட்ட பின்டாவின் வயிறு திடீரென்று சுருங்கிப் போனதைக் கவனித்தான். ஒரு வார்த்தையும் பேசாமல் வெளியேறி நெடு நேரம் நின்றான். பிறகு, தனது தோழர்களிடம் திரும்பிச் செல்லாமல், தந்தையின் குடிசைக்குச் சென்று தனியே அமர்ந்தான். தான் கண்ட சிசுவைப் பற்றிய சிந்தனை அவனை ஆட்கொண்டது.

அடுத்த ஏழு இரவுகளிலும் குண்டா தனது தந்தையுடன் உறங்கினான். புதிதாகப் பிறந்திருந்த சிசுவின் மீது அக்கறை கொண்டதால் அவனைக் கவனிப்பார் யாருமில்லை. தாய்க்குத் தன் மீது இனி விருப்பமில்லையோ என எண்ணத் தொடங்கினான். தந்தைக்கும் அப்படிதானோ! எட்டாவது நாள் மாலையில் ஒமோரோ அவனை அவனுடைய தாயின் குடிசைக்கு அழைத்துச் சென்றார். ஜுஃப்பூர் கிராமத்தில் உடல்நலக் கேடில்லாத அனைவரும் குடிசை முன் திரண்டனர். குழந்தைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த லேமின் எனும் பெயரைக் கேட்டு மகிழ்ந்தனர்.

அன்றிரவு குண்டா அமைதியாகவும் நன்றாகவும் உறங்கினான். தனது தாய்க்கும் தம்பிக்கும் பக்கத்தில் தனது படுக்கைக்குத் திரும்பிவிட்டானல்லவா! ஆயினும், ஒரு சில நாட்களில், உடல் ஓரளவு தேறிய உடனே, காலை உணவு சமைத்து குண்டாவுக்கும் ஒமோரோவுக்கும் கொடுத்த பிறகு, குழந்தையை எடுத்துக் கொண்டு ஆயிசா பாட்டி குடிசைக்கு விரைந்தாள். பகல் பொழுதின் பெரும்பாலான நேரத்தை அங்கேயே கழித்தாள். தாய், தந்தையரின் முகங்களில்

வெளிப்பட்ட கவலை, பாட்டியின் நிலைமை மிகவும் மோசமாகிவிட்டது என்பதை குண்டாவிற்கு உணர்த்தியது.

சில நாட்களுக்குப் பிறகு, பொழுது சாயும் வேளையில், குண்டாவும் அவனுடைய தோழர்களும், ஒருவாறு பழுக்கத் தொடங்கிவிட்ட மாங்காய்களைப் பறித்து, அருகிலிருந்த பாறையில் தேய்த்து வடிந்துகொண்டிருந்த பாலை நீக்கி விட்டு, கடித்து உள்ளிருந்த சதைப் பகுதியைத் தின்றனர். தங்களுடன் கொண்டு வந்திருந்த கூடைகளில் பேரிக்காய்களையும், காட்டு முந்திரிகளையும் சேகரித்தனர். திடீரென்று, பாட்டியின் குடிசை இருந்த திசையிலிருந்த பழக்கப்பட்ட குரல் ஓலமிட்ட அலறல் ஒலியைக் கேட்டான். அதிர்ச்சியால் உடலெங்கும் சில்லிட்டது. சமீப காலமாக கேட்டுப் பழகிப் போன மரண ஓலம் தனது தாயின் குரலில் கேட்டது. சற்று நேரத்தில் ஏனைய கிராமப் பெண்டிர் அனைவரும் பிலாக்கணம் எழுப்பிய ஓலக்குரல் கிராமமெங்கும் எதிரொலித்தது. கண்மண் தெரியாமல் பாட்டியின் குடிசையை நோக்கி ஓடினான்.

பெருங் குழப்பத்திற்கிடையில், குண்டா தனது தந்தையின் கவலை தோய்ந்த முகத்தையும் நியோ போட்டோ பாட்டி கதறி அழுததையும் பார்த்துக் கொண்டிருந்தான். சற்று நேரத்தில் தாரை, தப்பட்டைகள் ஒலிக்கத் தொடங்கின. கிராமக் கலைஞர் பாட்டியினுடைய அருமை பெருமைகளையும் தன்னுடைய நீண்ட கால வாழ்க்கையில் அந்தக் கிராம மக்களுக்கு அவர் ஆற்றிய சேவையையும் நீட்டி முழக்கிக் கொண்டிருந்தார். அதிர்ச்சியில் உறைந்து போயிருந்த குண்டா, கிராமத்தின் இளம் கன்னியர் கோரைப் புற்களாலான அகன்ற துடப்பத்தைக் கொண்டு குடிசையின் முன் வாசலைத் தூய்மைப்படுத்திக் கொண்டிருந்ததைக் கவனித்தான். இறப்பை ஒட்டி அவர்கள் குல மரபு வழக்கங்களில் அதுவும் ஒன்று. குண்டாவை யாரும் கவனித்ததாகத் தோன்றவில்லை.

பின்டா, நியோ போட்டோ பாட்டி, மேலும் இரண்டு பெண்கள் கதறியபடியே குடிசைக்குள் நுழைந்தவுடன், வெளியில் திரண்டிருந்த மக்கள் அனைவரும் முழந்தாளிட்டுத் தலைவணங்கினர். துக்கமும் அச்சமும் பொங்க குண்டா திடீரென்று பெருங்குரலெழுப்பி அழுதான். ஆண்கள் சிலர் புதிதாகப் பிளக்கப்பட்ட மிகப் பெரிய கட்டைகளைக் கொண்டு செய்யப்பட்ட பாடையை குடிசையின் முன்னர் வைத்தனர். சில பெண்கள் பாட்டியின் உடலைக் கொணர்ந்து பாடையின் மீது கிடத்தியதைக் குண்டா கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான். பாதம் முதல் கழுத்து வரையிலும் வெள்ளைப் பருத்தித் துணியால் உடலைப் போர்த்தியிருந்தனர்.

பாட்டியின் உடலுக்கு அஞ்சலி செலுத்தியோர் தொழுதபடியும் மந்திரங்களைச் செபித்துக்கொண்டும் ஏழுமுறை உடலைச் சுற்றி வலம்வந்ததையும் ஹஜரத் உரத்த குரலில் ஆயிசா பாட்டி அல்லாவிடமும் மூதாதையரிடமும் என்றென்றைக்கும் சேர்ந்திருக்கப் பயணப்பட்டு விட்டதாக ஓதியதையும் தாரை தாரையாக வழிந்து கொண்டிருந்த கண்ணீர்த் திரையினூடே குண்டா கவனித்தான். அத்தகைய பயணத்திற்குப் போதிய வலிமையை அளிப்பதற்காக இளம் கன்னியர் பாட்டியினுடைய உடலைச் சுற்றிலும் சாம்பல் நிரப்பப்பட்ட மாட்டுக்

கொம்புகளைப் பரிவுடன் வைத்தனர்.

பெரும்பாலானோர் அஞ்சலி செலுத்திய பிறகு, நியோ போட்டோ பாட்டியும் ஏனைய மூதாட்டிகளும் கூடி நின்று கைகளால் தலையில் அடித்தபடி ஒப்பாரி வைத்தனர். மூதாட்டிகள் அமர்ந்த பின்னர் இரவு நெடு நேரம் வரையிலும் கிராம முரசுகள் பாட்டியின் பெருமைகளைப் பறைசாற்றிக் கொண்டிருந்தன.

பனி படர்ந்திருந்த அதிகாலைப் பொழுதில், மரபு வழக்கப்படி, நடப்பதற்குத் தெம்பிருந்த கிராமத்து ஆடவர் மட்டும் கிராமத்திலிருந்து சற்று தொலைவில் இருந்த இடுகாட்டிற்கு ஊர்வலமாகச் சென்றனர். தமது மூதாதையரின் ஆவிகளின் பால் ஒருவிதமான அச்சங் கலந்த மரியாதை காரணமாக மற்ற சமயங்களில் எவரும் இடுகாட்டுப் பக்கம் செல்வதில்லை. பாட்டியின் உடலைச் சுமந்து சென்ற ஆட்களுக்குப் பின்னால் ஒமோரோ கைக்குழந்தை லேமினைத் தூக்கிக் கொண்டு, ஒரு கையில் குண்டாவைப் பிடித்தபடி சென்றார். குண்டா பயத்தால் அழுவதற்குக் கூட முடியாமல் வெறித்தபடி நடந்தான். அவர்களுக்குப் பின்னால் ஏனையோர் சென்றனர். வெள்ளைத் துணியால் மூடப்பட்டு விரைத்திருந்த உடலைப் புதிதாகத் தோண்டப்பட்டிருந்த குழிக்குள் இறக்கினர். முதலில் மூங்கில் கழிகளைக் கொண்டு நெருக்கமாகப் பின்னப்பட்டிருந்த பாயை உடலின் மீது கிடத்தினர். பின்னர் முட்கள் நிறைந்த செடிகளைப் போட்டு மூடினர். ஓநாய், நரி போன்ற விலங்குகள் தோண்டி உடலை எடுத்துவிடக் கூடாதல்லவா! அதற்கு மேல் கற்களைப் போட்டு இறுக்கிக் கெட்டித்து களிமண்ணால் மேடு போல பூசி மெழுகிவிட்டனர்.

அதன்பிறகு, பல நாட்கள் குண்டா சரியாகச் சாப்பிடாமலும் உறக்கம் பிடிக்காமலும் விளையாட்டுத் தோழர்களுடன் சேர்ந்து வெளியில் எங்கும் செல்லாமலும் துக்கத்தில் ஆழ்ந்து போனான். ஒரு நாள் மாலைப் பொழுதில், ஒமோரோ அவனைத் தனது குடிசைக்குக் கூட்டிச் சென்று படுக்கையின் மீது தனது அருகில் அமர்த்தி அவனைத் தேற்றும் விதமாக முன்னெப்பொழுதையும் விடக் கூடுதலான பாசத்துடனும் பரிவுடனும் சில, பல வார்த்தைகள் பேசினார்.

"ஒவ்வொரு கிராமத்திலும் மூன்று விதமான மக்கள் இருக்கிறார்கள். முதலாவது வகை, நாம் அன்றாடம் காணக் கூடியவர்கள். நம்மைப் போலவே உண்டும், உறங்கியும், வேலை செய்து கொண்டும் நம் முன்னே நடமாடக் கூடியவர்கள். இரண்டாவது, மூதாதையர்கள்; முன் காலத்தில் வாழ்ந்து மறைந்தவர்கள்; அவர்களிடம் தான் பாட்டி சென்றிருக்கிறார்."

"மூணாவது வகை, யாருப்பா?"

"மூணாவது வகை மக்கள், இனிமேல் பிறப்பதற்காகக் காத்திருப்பவர்கள்!"

## 7

மழை ஒருவழியாக ஓய்ந்தது. தெளிந்த நீலவானத்திற்கும் ஈரமண்ணுக்கும் இடையே செழித்திருந்த காட்டுப் பகுதிகளின் பூக்களிலிருந்தும் கனிகளிலிருந்தும் புறப்பட்ட நறுமணத்தின் சுமையை தாளாமல் காற்று தள்ளாடியது. பிரதான அறுவடைக்கு இன்னும் காலமிருந்தது. கடந்த ஆண்டு அறுவடையின் போது நிலத்தில் சிந்திய விதைகள் நடப்பு விதைகளை முந்திக் கொண்டு விளைந்ததால் கிடைத்த சிறுதானிய வகைகளையும் நிலக்கடலையையும் உரலில் போட்டு பெண்டிர் இடித்த ஓசை அதிகாலைப் பொழுதுகளில் எதிரொலித்தது. வேட்டைக்குச் சென்ற ஆடவர் கொழுத்த மான்களுடன் திரும்பினர். இறைச்சியை வெட்டி எடுத்துப் பிரித்துக் கொடுத்த பின்பு தோலை ஒட்டச் சுரண்டிப் பதனிட்டனர். பெண்கள் புதர்களை உலுக்கி அவற்றில் பழுத்துச் சிவந்திருந்த ஒருவகைப் பேரிப் பழங்களைக் கீழே விரிக்கப்பட்டிருந்த துணியின் மீது சேகரிப்பதில் முனைந்தனர். பழங்களை சூரிய ஒளியில் உலர்த்தி இடித்து இனிமையான மாவாக்கி விதைகளைப் பிரித்தெடுத்தனர். எதையும் வீணாக்கியதில்லை. விதைகளை ஊறவைத்து இடித்த சிறுதானியத்துடன் சேர்த்து சுவைமிக்க கஞ்சியாகக் காய்ச்சினர். மழை ஓய்ந்த காலத்தில் அவ்வாறு தயாரிக்கப்பட்ட கஞ்சி வழக்கமான காலை உணவுக்

கஞ்சியைக் காட்டிலும் மிகுந்த விருப்பத்துடன் குண்டா போன்றோரை சப்புக் கொட்டிச் சுவைக்கச் செய்தது.

ஒவ்வொரு நாளும் ஏராளமான உணவுப் பண்டங்கள் கிட்டியமையால், ஜுஃப்பூர் கிராமம் புத்துயிர் பெற்றுப் பொலிந்ததைப் பார்க்கவும் கேட்கவும் முடிந்தது. ஆடவர் தமது வயல்களுக்குப் பீடு நடை போட்டுச் சென்று திரும்பினர். தவச, தானியங்களின் பசுமையான செழிப்பைப் பெருமையுடன் கவனித்தனர். அவை வெகு விரைவாக அறுவடைக்குத் தயாராகிக் கொண்டிருந்தன. ஆற்றில் பெருக்கெடுத்தோடிய வெள்ளத்தின் வேகம் குறைந்தபடியால், பெண்டிர் பரிசல்களைச் செலுத்தி தமது நெல் வயல்களுக்குச் சென்று பச்சைப் பசேலென உயரமாக வளர்ந்திருந்த பயிர்களுக்கிடையில் நின்ற களைகளை வேருடன் பறித்து நீக்கினர்.

நீண்ட பட்டினிக் காலத்திற்குப் பிறகு, குழந்தைகளுடைய விளையாட்டாலும் அவர்கள் எழுப்பிய கூச்சலாலும் சிரிப்பொலியாலும் கிராமம் அதிர்ந்தது. சத்து மிகுந்த உணவால் வயிறு நிறைந்ததால், உடலிலிருந்த புண்கள் காய்ந்து பருக்குகளாகி உதிர்ந்தன. ஒருவரோடொருவர் இடித்து மோதிக் குதியாட்டம் போட்டனர். ஒரு நாள், சாணத்திலிருந்து வெளிப்படும் பெரிய வகை விட்டில்களைப் பிடித்து ஈரத் தரையில் குச்சியைக் கொண்டு கிழிக்கப்பட்ட வட்டத்திற்குள் வரிசையாக நிறுத்தி ஓட்டப்பந்தயம் விட்டு, விரைவாக ஓடிய பூச்சியை உற்சாகப்படுத்திக் களித்தனர். இன்னொரு நாள், குண்டாவும் அவனுடைய தனிப்பட்ட நண்பன், பின்டாவின் பக்கத்துக் குடிசைக்காரன், சிடாஃபா சில்லாவும் உயரமான புற்று ஒன்றைக் குடைந்து உள்ளே இருந்த சிறகில்லா குருட்டு ஈசல்கள் ஆயிரக்கணக்கில் வெளியேறித் திக்குத் தெரியாமல் அங்குமிங்குமாக அல்லாடி விரைவதைப் பார்த்துக் குதூகலித்தனர்.

சில சமயங்களில், சிறுவர்கள் சிலர் ஒன்றாக அணில்களைத் துரத்தியடித்து அவை புதர்களுக்குள் ஓடி ஒளிந்ததைப் பார்த்துக் கைகொட்டிச் சிரித்தனர். அவர்களுக்கு ரொம்பப் பிடித்தமான விளையாட்டு ஒன்றுண்டு. நீண்ட வால் செங்குரங்குக் குட்டிகளை பெருங்கூச்சலுடன் கல்லால் எறிந்து துரத்தினர். அவை கிரீச்சிட்டவாறு ஓடிச் சென்று தமது அண்ணன்மாருடன் மீதுயர்ந்த கிளைகளில் தஞ்சம் புகுந்தன. சில குட்டிகள் எறிந்த கல்லைப் பற்றித் திருப்பி எறிவதும் உண்டு. நாள்தோறும் பயல்களுக்கிடையே மல்யுத்தம் நடந்தது. ஒருவனை ஒருவன் கட்டிப் புரண்டு கீழே தள்ளியும் மேலே ஏறி உட்கார்ந்தும் மீண்டும் அவன் இவனைப் புரட்டிப் போட்டு மார்பின் மீது அமர்வதுமாக மல்யுத்தம் அமர்க்களப்பட்டது. ஜுஃப்பூர் கிராமத்தினுடைய மல்யுத்த மாவீரனாக வேண்டும் என்பது ஒவ்வொரு பயலுடைய கனவாகவும் இருந்தது. கிராமத்தின் மாவீரனாகி விட்டால், அறுவடைக் கால விழாக்களின் போது கிராமங்களுக்கிடையே நிகழ்த்தப்பட்ட மல்யுத்தங்களிலும் பங்கு பெற்று வெல்லலாமல்லவா!

சிறுவர்கள் ஆடிக்கொண்டிருந்த இடங்களைக் கடந்து சென்ற பெரியவர்கள், சிடாஃபாவோ, குண்டாவோ, மற்றவர்களோ சிங்கம் போல கர்ஜித்ததையோ, யானை போல பிளிறியதையோ, பன்றி போல நறநறத்ததையோ அல்லது

சிறுமியர் செப்புகளையும் பொம்மைகளையும் கொண்டு சமைப்பது போலவும், குழந்தைகளைப் பராமரிப்பது போலவும், தானியங்களைக் குத்துவது போலவும் தமக்குள் அன்னையர் போலவும், மனைவிமார் போலவும் ஆடிக் களித்ததையோ கண்டும் காணாமலும் கேட்டும் கேளாமலும் இருந்தனர். ஆனாலும், விளையாட்டுகளின் போது எப்படியிருந்த போதிலும், தமது அம்மாக்கள் சொல்லிக் கொடுத்திருந்தபடி பெரியவர்களுக்கு மதிப்பளிக்கத் தவறியதில்லை. பெரியவர்களைக் கண்ணைப் பார்த்தபடி பணிவாக 'நல்லாயிருக்கீங்களா?' என்று நலம் விசாரித்தனர். அவர்களும் கண்களில் பாசம் மின்ன 'நல்லா இருக்கேன்' என்பர். எதிரே வந்த பெரியவர் ஒருவர் ஒரு கையை நீட்டினால், அதனைத் தமது இரு கரங்களாலும் பற்றினர். பின்னர், இரு கரங்களையும் கூப்பி மார்பின் மீது வைத்தபடி அவர் கடந்து செல்லும் வரை நிற்பர்.

குண்டாவினுடைய வீட்டில் பயிற்சி மிகவும் கடுமையாக இருந்தது. ஏதேனும் தவறு நடந்துவிட்டால் பின்டாவின் விரல்கள் குண்டாவின் கன்னத்தை கிள்ளின; கட்டிப் போட்டு சவுக்கால் அடிப்பதைக் காட்டிலும் அவமானமாகவும் வலியாகவும் இருந்தது. சாப்பிடும் போது உணவைப் பார்த்து எடுத்து உண்ணாமல் அவனுடைய கண்கள் அங்குமிங்கும் அலைபாய்வதை பின்டா கவனித்து விட்டால் தலையில் குட்டு விழுந்தது. வெளியில் விளையாடிவிட்டு குடிசைக்குள் நுழைவதற்கு முன் அழுக்கு முழுவதையும் முற்றாகக் கழுவாமல் விட்டு விட்டானானால், பின்டா காய்ந்த மர நாரால் செய்த தேய்ப்பானையும் வீட்டில் செய்யப்பட்ட சவக்காரக்கட்டியையும் கோபம் கொப்பளிக்க எடுத்ததைப் பார்த்தால் தன்னை அம்மா தோல் உரிந்து போகும்படி தேய்த்துக் குளிப்பாட்டப் போகிறாள் என்று குலை நடுங்கியது.

அவளையோ, அவனுடைய தந்தையையோ, வேறு எந்தப் பெரியவரையுமோ முறைத்துப் பார்த்தாலோ அல்லது பெரியவர்கள் பேசிக்கொண்டிருந்தபோது குறுக்கிட்டாலோ கன்னத்தில் சப்பென்று அறை விழுந்தது. உண்மையைத் தவிர எதையும் பேசுவதைப் பற்றி அவனால் நினைத்துக் கூடப் பார்க்க இயலாது. பொய் பேச வேண்டிய சூழல் அவனுக்கு ஏற்படவில்லை; பேசியதுமில்லை.

பின்டாவுக்கு அப்படி நினைக்கத் தோன்றவில்லை என்ற போதிலும், குண்டா தான் வீட்டில் பெற்ற பயிற்சிகளைத் தன்னுடைய விளையாட்டுத் தோழர்களிடம் கடைப்பிடித்தான். அவர்களுக்குள் முரண்பாடு ஏற்பட்டு, பொதுவாக அவர்கள் ஒருவரை ஒருவர் கடுமையான வார்த்தைகளால் திட்டவும் கிள்ளவும் செய்த வேளைகளில், குண்டா பேசாமல் அங்கிருந்து சென்றுவிடுவான்; தன்மதிப்பும் கட்டுப்பாடும் மாண்டிங்கா இனத்தவரின் தனிப் பண்பு என்று அவனுடைய தாய் கற்றுக் கொடுத்ததை வெளிப்படுத்தினான்.

ஆனாலும், தன் குட்டித்தம்பியிடம் தவறாக நடந்து கொண்டதற்காக இரவுதோறும் புட்டத்தில் நாலு சாத்து விழத்தான் செய்தது. பொதுவாக, விழிகளைத் திரட்டி விழித்தபடி, கைகளை முன்னங்கால்களைப் போல மடக்கிக் கொண்டு குரங்கு போல நான்கு கால்களாலும் குழந்தையின் முன் திமீல் எனக் குதித்துப் பயமுறுத்தினான். பொறுமையின் எல்லை கடந்துவிட்ட பின்டா

"பூச்சாண்டியைக் கூப்பிடுவேன்டா" என்று கத்தினாள். குண்டாவுக்கு சர்வ நாடியும் அடங்கிவிடும். பாட்டிமார்கள் அடிக்கடி கூறுவதுண்டு. பரட்டைத் தலையும் தாடியும் மீசையுமாக செம்மூஞ்சி விநோத வெள்ளை மனிதர்கள் பெரிய பெரிய பரிசல்களில் கிராமத்திற்கு வந்து சிறுபிள்ளைகளைப் பிடித்துக் கொண்டு செல்வார்களாம்!

# 8

குண்டாவும் அவனுடைய தோழர்களும் நாள் முழுக்க ஓடியாடியதால் பொழுது சாயும் வேளையில் களைப்பாகவும் பசியாகவும் இருந்தபோதிலும், தொடர்ந்து மரங்களில் ஏறித் தாவுவதிலும் கடலில் மூழ்கிக் கொண்டிருந்த கருஞ்சிவப்பு வண்ணச் சூரியப் பந்தை கண்டு “நாளைக்கு இன்னும் அழகாக இருப்பான்” என்று கூவிக் களிப்பதிலுமே ஆர்வமாக இருந்தனர். ஜுஃப்யூர் கிராமப் பெரியவர்கள் கூட இரவு உணவை விரைவாக முடித்துக் கொண்டு இருண்டு கிடந்த வெட்ட வெளியில் திரண்டு, அல்லாவின் சின்னமாக உதிக்கவிருந்த இளம்பிறையை கைகொட்டிக் கூச்சலிட்டும் பறையறைந்து முழக்கியும் வரவேற்க ஆயத்தமாயினர்.

ஆனால், அன்றிரவு மேகக் கூட்டங்கள் இளம்பிறையை நெருக்கமாகச் சூழ்ந்து மறைத்ததால் பீதியுற்ற மக்கள் கலைந்து மசூதிக்குள் நுழைந்து அல்லாவிடம் மன்னிப்புக் கோரித் தொழுதனர். இளம்பிறையை மேகக் கூட்டங்கள் நெருக்கமாக மூடி மறைத்தால், வானுலக ஆவிகள் ஜுஃப்யூர் கிராமத்தின் மீது கோபம் கொண்டதாகப் பொருள். தொழுத பின்பு, பீதியடைந்த ஆடவர் தமது குடும்பத்தாருடன் ஆலமரத்தடியில் திரண்டனர். அங்கே, ஏற்கனவே கிராமக் கலைஞர் குத்தவைத்து உட்கார்ந்து

நெருப்பு மூட்டி ஆட்டுத் தோலால் செய்யப்பட்ட பறையைச் சூடேற்றிக் கொண்டிருந்தார்.

நெருப்பிலிருந்து எழுந்த புகையால் எரிச்சலெடுத்த கண்களைக் கசக்கியபடி, குண்டா பல்வேறு கிராமங்களிலும் அதுபோல செய்திகளை அறிவிப்பதற்காக பறையறையப்பட்டு தனது உறக்கத்தைக் கெடுத்த இரவுகளை நினைவு கூர்ந்தான். விழித்துக்கொண்டவன் படுக்கையில் கிடந்தபடியே பறையொலியால் அறிவிக்கப்பட்ட செய்திகளை மிகவும் சிரமப்பட்டுக் கவனித்துக் கேட்டான். எழுப்பப்பட்ட ஒலியும் அதன் இலயமும் வாய்விட்டுப் பேசியதைப் போலவே இருந்தது. சில ஒலிகளின் பொருளை அவனால் புரிந்து கொள்ளவும் முடிந்தது. பஞ்சம் ஏற்பட்டதையோ, தொற்றுநோய் பரவியதையோ, கொள்ளைக்காரர்கள் கிராமத்திற்குள் புகுந்து தீவைத்து விட்டு பொருட்களையும் ஆட்களையும் கவர்ந்து சென்றதையோ அறிவிப்பதற்காகவே அத்தகைய பறையொலி அறிவிப்புகள் செய்யப்பட்டன.

கிராமக் கலைஞருக்கு அருகில் ஆலமரத்தின் மற்றொரு கிளையில் ஆட்டுத்தோல் ஒன்று தொங்கியது. அதில் அறிவிக்கப்பட வேண்டிய செய்தியை அரேபிய மொழியில் கிராமத்து ஆசான் எழுதியிருந்தார். எழுந்தும் வீழ்ந்தும் எரிந்து கொண்டிருந்த நெருப்பின் ஒளியில் கிராமக் கலைஞர் பறையின் தோலின் மீது பல்வேறு இடங்களில் குமிழ் நுனி கொண்ட கட்டையால் வேக வேகமாக ஓங்கி ஓங்கி அடித்து ஒலி எழுப்பியதைக் குண்டா கவனித்துக் கொண்டிருந்தான். ஜுஃப்யூருக்கு வருகை தந்து கெட்ட ஆவிகளை ஓட்டும்படி அருகாமையிலிருந்த மந்திரவாதிக்கு அவசர அழைப்பு விடுத்து எழுப்பப்பட்ட பறையொலி!

இளம்பிறையை மீண்டும் பார்ப்பதற்குத் துணிவின்றி, மக்கள் குடிசைகளுக்குள் விரைந்து முடங்கிவிட்டனர். ஆனால், இரவு முழுவதும் மந்திரவாதிக்கு ஜுஃப்யூர் மக்கள் அழைப்பு விடுத்ததைப் போன்ற பறையொலி ஏனைய கிராமங்களிலும் இடைவெளி விட்டுக் கேட்டது. பசுத் தோலுக்கு அடியில் நடுங்கியபடியே அவர்களுடைய இளம்பிறையும் மேகக் கூட்டங்களால் மறைக்கப்பட்டுவிட்டது போலும் என்று குண்டா யூகித்தான்.

அடுத்த நாள், ஓமோரோ வயதை ஒத்த ஆடவர்கள் இளம் ஆடவருடைய நிலங்களில் விளைந்து முற்றியிருந்த தவச, தானியங்களை குரங்குக் கூட்டங்களோ, பறவையினங்களோ மேய்ந்து வீணாக்காமல் பாதுகாப்பதற்கு உதவினர். விடலைப் பயல்கள் ஆடு மேய்க்கும் போது மிகவும் கவனமாக இருக்க வேண்டுமென்று எச்சரிக்கப்பட்டது. தளிர்நடையினரையும் குழந்தைகளையும் பாட்டிமார்கள் முன்னெப்பொழுதையும் விடக் கூடுதல் விழிப்புணர்வுடன் கவனித்துக் கொண்டனர். பிள்ளைப் பருவமாயினும் சற்றே வளர்ந்த பிள்ளைகளான குண்டா, சிடாஃபா போன்றவர்கள் கிராமத்தின் உயர்ந்த மதில்களுக்கு வெளியே பாதையில் யாரேனும் புதியவர்கள் தட்டுப்பட்டனரா என்று கண்காணிக்கும்படி அறிவுறுத்தப்பட்டனர். அவர்களும் அவ்வாறே கண்காணிக்க, அன்று முழுவதும் யாரும் வரவில்லை.

மறுநாள் முதியவர் ஒருவர் தென்பட்டார். மரத்தடியை ஊன்றித் தள்ளாடியவாறு வழுக்கைத் தலையில் பெரிய மூட்டை ஒன்றைச் சுமந்தபடி கிராமத்தை நெருங்கிக் கொண்டிருந்தார். அடையாளம் கண்டு கொண்ட பிள்ளைகள் உரக்கக் கத்திக்கொண்டே கிராமத்தின் நுழைவாயில் வழியாக ஓடிச் சென்றனர். தலையைத் தூக்கி, கண்களை இடுக்கி நோட்டமிட்ட நியோபோட்டோ பாட்டி செய்தி அறிவிக்கும் பறையை மீண்டும் மீண்டும் அறைந்து ஒலியெழுப்பினாள். வயல்களுக்குச் சென்றிருந்த ஆடவர் விரைந்து திரும்புவதற்காக அந்த ஒலி எழுப்பப்பட்டது. அவர்களும் மந்திரவாதி கிராமத்து நுழைவாயிலை நெருங்குவதற்கு ஒரு கணம் முன்னதாகவே திரும்பி விட்டனர்.

கிராமத்தினர் சுற்றிச் சூழ்ந்து கொள்ளவே, மந்திரவாதி ஆலமரத்தடிக்குச் சென்று மூட்டையைக் கவனமாக இறக்கித் தரையில் வைத்தார். ஒருவழியாகத் தரையில் தட்டுத் தடுமாறி உட்கார்ந்து, ஆட்டுத் தோலாலான சுருக்குப் பையில் வைத்திருந்த ஒரு சில அபூர்வப் பொருட்களைக் கொட்டினார். பதப்படுத்தப்பட்ட சிறு பாம்பு ஒன்று, ஓநாயின் தாடை எலும்பு, குரங்கு ஒன்றின் பற்கள், பெரிய நீர்ப்பறவைச் சிறகின் எலும்பு, பல்வேறு கோழிகளின் கால்கள், புதுமையான வேர் வகைகள் பையிலிருந்து சிதறின. சுற்றிலும் நோட்டமிட்டவர், பொறுமையிழந்தவராக கூட்டத்தினரை ஓரமாக ஒதுங்கி தனக்குக் கூடுதல் இடமளிக்கும்படி சைகை காட்டினார். அவர்கள் பின்னோக்கி நகர்ந்தவுடன் அவருடைய உடல் முழுவதும் நடுங்கியது. ஜுஃப்யூர் கிராமத்தின் தீய ஆவிகள் அவரைத் தொற்றிக் கொண்டன!

மந்திரவாதியின் உடல் உதறலெடுத்தது; முகம் கோணல் மாணலாக மாறியது; விழிகள் பிதுங்கிச் சுழன்றன. நடுங்கிய கரங்கள் அற்புதப் பொருட்களின் குவியலுக்குள் கிடந்த மந்திரக்கோலைப் பற்றுவதற்குப் போராடின. அரும்பெரும் முயற்சியுடன் ஒருவழியாக மந்திரக்கோலின் நுனியைத் தொட்டவுடன் மின்னல் தாக்கியதைப் போல பின்நோக்கி மல்லாந்து கிடந்தார். மக்கள் பெருமூச் செறிந்தனர். பிறகு, அவர் மெதுவாக தன்னிலைக்குத் திரும்பினார். தீய ஆவிகள் கிராமத்தை விட்டு துரத்தப்பட்டு விட்டன. தட்டுத் தடுமாறி அவர் முழந்தாளிட்டு அமர்ந்தவுடன், கிராமத்து மக்கள் தமது குடிசைகளுக்கு ஓடிச் சென்று காணிக்கைப் பொருட்களுடன் திரும்பினர். ஏற்கனவே முந்தைய கிராமங்கள் படைத்த காணிக்கைகளால் பெரிதாக இருந்த மூட்டை மேலும் பருத்தது. தாங்க முடியாத சுமையைத் தலையில் ஏந்தியவாறு, அடுத்த கிராமத்தை நோக்கி நடந்தார். அவருடைய கருணையால், அல்லாவின் பார்வை ஜுஃப்யூர் மீது விழுந்து மக்கள் மீண்டும் காப்பாற்றப்பட்டனர்.

# 9

**ப**ன்னிரெண்டு மாதங்கள் கடந்தன. மீண்டும் ஒருமுறை கனத்த மழை பெய்து ஓய்ந்திருந்தது. காம்பியா நாட்டில் பயணியர் வருகை புரிவதற்கான காலம் தொடங்கிவிட்டது. கிராமங்களுக்கிடையே நீண்டு கிடந்த நடைபாதைகள் நெடுகிலும் ஏராளமான பயணிகள் தென்பட்டனர். ஜுஃப்யூர் கிராமத்தைக் கடந்து சென்றவர்களுள் சிலர் அங்கே தங்கிச் செல்வதுண்டு. குண்டாவுக்கும் அவனுடைய நண்பர்களுக்கும் நாள்தோறும் அப்படிப்பட்ட ஒருவரேனும் கண்ணில் பட்டனர். புதியவர் எவரையேனும் கண்டவுடன் கிராமத்தினருக்கு அறிவித்து விட்டு, ஓடிச்சென்று பயணியர் இளைப்பாறும் மரத்தை நெருங்கிக் கொண்டிருக்கும் போதே அவரை எதிர்கொண்டனர். துணிச்சலுடன் அவரை நெருங்கி அவருடன் அணிவகுத்து நடந்தபடியே பேச்சுக் கொடுத்தனர். அவர்களுடைய கூர்மையான கண்கள் அவர் அங்கே வந்ததன் நோக்கம், அவருடைய தொழில் போன்ற விவரங்களை அறிந்து கொள்ளும் துடிப்புடன் நோட்டமிட்டன. அவர் அக்கிராமத்தில் தங்குவதாக அறிகுறி ஏதேனும் தென்பட்டால், அவரை அப்படியே விட்டு விட்டு ஓடிப் போய் அன்றைய தினம் விருந்தோம்பல் பொறுப்பினை ஏற்றுக் கொண்ட குடிசையில் உள்ளவர்களிடம் விவரத்தைத் தெரிவித்தனர். பழங்குடி

இனத்தவருடைய தொன்மைக் கால மரபுக்கேற்ப, கிராமத்திற்கு வருகை தந்த புதியவர்களை விருந்தினராக ஏற்று ஒவ்வொரு நாளும் வெவ்வேறு குடும்பத்தினர் உணவும் உறையுளும் அளித்து உபசரித்தனர். அவர் மீண்டும் பயணத்தைத் தொடங்கும் வரை கைம்மாறு எதையும் எதிர்பாராமல் விருந்தினருடைய தேவைகளைக் கவனித்துக் கொண்டனர்.

கிராமக் கண்காணியராக நியமிக்கப்பட்ட குண்டா, சிடாஃபா, அவர்களுடைய தோழர்களின் செயல்பாடும் பொறுப்புணர்வும் அவர்களுடைய வயதுக்கு மீறியவையாக இருந்தன. நாள்தோறும் காலைக் கஞ்சியைக் குடித்து முடித்தவுடன் ஆசானுடைய பள்ளித்திடலில் திரண்டனர். தம்மைக் காட்டிலும் மூத்த வயதுப் பையன்களுக்கு, ஐந்து முதல் ஒன்பது வயதுப் பிள்ளைகளுக்கு, ஆசான் கற்பித்தவற்றை முழந்தாளிட்டபடி கவனமாகக் கேட்டனர். ஆசான் திருக்குரானைப் படிப்பதற்கும், எட்டிக்காய்ச் சாற்றில் அடுப்புக்கறியைக் கலந்து செய்யப்பட்ட மையை கோரைப்புல் நுனியால் தொட்டு எழுதுவதற்கும் கற்பித்தார்.

அன்றைய தினப் படிப்பு முடிந்தவுடன் பள்ளிப்பையன்கள் ஓட்டமெடுத்தனர். அவர்கள் அணிந்திருந்த அங்கியின் பின்பட்டை வால் போல் ஆடியது. ஆட்டு மந்தைகளை அன்றைய தின மேய்ச்சலுக்கு புல்வெளிகளை நோக்கி ஓட்டிச் செல்ல வேண்டும். கண்டுகொள்ளாதது போல் நடித்த போதிலும், குண்டாவிற்கும் அவனுடைய தோழர்களுக்கும் மூத்த பிள்ளைகள் அணிந்திருந்த நீண்ட அங்கிகளைக் கண்டு பொறாமை தான்! இட்ட வேலைகளை வாய் பேசாமல் கவனமாகச் செய்த போதிலும், பெரியவர்கள் தம்மை இன்னமும் குழந்தைகளைப் போல நடத்துவதும் அம்மணமாகத் திரிய விட்டிருந்ததும் குண்டா வயதை ஒத்தவர்களுக்கு மன வருத்தம் அளித்தது. லேமின் போல இன்னமும் பால்குடி மறக்காதவர்களையோ, தள்ளாடித் தளிர்நடை பயில்வோரையோ அவர்களுக்குப் பிடிப்பதில்லை; பெரியவர்கள் கவனிக்காத வேளைகளில் அவர்களைக் கிள்ளுவது அல்லது அடிப்பதோடு சரி! நினைவு தெரிந்த நாளிலிருந்தே குண்டாவும் அவனுடைய தோழர்களும் பாட்டிமார்களுடைய கண்காணிப்பை வெறுத்தனர். தமது தந்தைமாருடைய வயதை ஒத்த பெரியவர்களையே வளைய வளையச் சுற்றித் திரிந்தனர். தம்மையும் மதித்து அவர்கள் ஏதேனும் எடுபிடி வேலை கொடுத்து விட்டால் அதனை நிறைவேற்றுவதற்குக் குதியாட்டம் போட்டுக் கொண்டு விரைந்தனர்.

அறுவடைக்குச் சில நாட்களுக்கு முன்பு, இரவு வேளை உணவுக்குப் பின் ஓமோரோ தற்செயலாக குண்டாவிடம் மறுநாள் அதிகாலையில் எழுந்து வயல்களில் விளைந்து நின்ற பயிர்களைக் காவல் காக்கத் தன்னுடன் வருமாறு கூறினார். குண்டா மனம் துள்ளாட்டம் போட்டது. இரவு சரியாகத் தூங்கக் கூட இல்லை. காலையில் ஒரே மிடறில் கஞ்சியை உள்ளே தள்ளியவன் தோளில் வயலுக்குப் புறப்பட்டபோது அவனுடைய தந்தை மண்வெட்டியை வைத்தவுடன் அவனுக்குப் பெருமை பிடிபடவில்லை. குண்டாவும் அவனுடைய நண்பர்களும் விளைந்திருந்த வயல்களின் வரப்புகள் மீது முன்னும் பின்னும் ஓடி, உரத்த குரலில் கூச்சலிட்டும் தடிகளை ஆட்டியும், வேர்க்கடலைச் செடிகளைப் பறிப்பதற்கு

நறநறத்துக் கொண்டு புதர்மறைவிலிருந்து வெளிப்பட்ட காட்டுப் பன்றிகளையும் மந்திகளையும் துரத்தியடித்தனர். முற்றியிருந்த கதிர்களை மேய்வதற்குத் தாழ்ந்து பறந்த பறவைக் கூட்டங்களையும் கவண்கற்களால் எறிந்தும் கூச்சலிட்டும் விரட்டினர். பாட்டிகள் கதை சொன்ன போது, விலங்கினங்களைப் போலவே பறவைக் கூட்டங்களும் விளைந்த பயிர்களை நாசப்படுத்திவிடுவன என்று கூறியிருந்தனர். விளைச்சலைச் சோதிப்பதற்காக தந்தைமார் பறித்த கதிர்களிலிருந்த தானியங்களையும் செடிகளிலிருந்த கடலையையும் சேகரித்தனர். குடுவைகளில் குடிப்பதற்கு நீர் மொண்டு வந்து கொடுத்தனர். நாள் முழுவதும் அயராமல் பாடுபடுவதில் பெருமை கொண்டனர்.

ஆறு நாட்கள் கழித்து அறுவடையைத் துவக்குவதற்கு அல்லாவின் அருளாசி கிடைத்தது. கருக்கலில் அதிகாலைத் தொழுகையை முடித்துக் கொண்டு, உழவர்கள் தமது மகன்களுடன், அதற்கெனத் தேர்ந்தெடுக்கப்பட்ட சிலரைத் தாரை, தப்பட்டைகளுடன் அழைத்துக் கொண்டு வயல்களுக்குப் புறப்பட்டனர். முண்டாசுத் தலைகளுடன் சற்று நேரம் உற்றுக் கவனித்தபடி காத்திருந்தனர். கிராமத்தின் மிகப்பெரிய முரசின் ஒலி செவிப்பட்டவுடன், பேராவலுடன் பாய்ந்து அறுவடையில் ஈடுபட்டனர். கிராமத்துக் கலைஞரும் ஏனையோரும் தாரை, தப்பட்டைகளை ஒலித்தபடி அவர்கள் மத்தியில் உற்சாக ஒலி எழுப்பினர். தாள இலயம் அறுவடை செய்தோரின் அசைவுகளுடன் இயைந்து இழையோடியது. “சொய்ங்....சொய்ங்....'' பாடலில் அனைவருடைய குரலும் இசை கூட்டியது. உற்சாக மிகுதியில் ஓர் உழவர் மண்கொத்தியைச் சுழற்றி வீசினார். முதல் பறை ஒலிக்கு சுழன்றபடி மேலெழும்பி அடுத்த பறை ஒலிக்கு அவருடைய கையில் விழுந்தது!

குண்டாவும் அவனுடைய தோழர்களும் தம்முடைய தகப்பன்மாருடன் உடலிலிருந்து கொட்டிய வியர்வையால் அந்த மண்ணை நனைத்தனர். பறிக்கப்பட்ட நிலக்கடலைக் கொடிகளின் வேர்களில் ஒட்டியிருந்த ஈரமண்ணை உதறி எடுத்தார்கள். முற்பகலின் நடுவில் சற்று நேரம் முதலாவது ஓய்வு. மதியத்தில் தாய்மார்களும் இளம்பெண்டிரும் கஞ்சிக் குடுவைகளைச் சுமந்து வந்ததைக் கண்டு குதூகலத்தில் கூச்சலிட்டனர். வரப்பின் மீது ஒருவர் பின் ஒருவராக நடந்து சென்ற அவர்களும் அறுவடைப் பாடலை இசைத்தனர். தலையிலிருந்த பானைகளை இறக்கி அதிலிருந்ததை சிறு சிறு சுரக்குடுக்கைகளில் அறுவடை செய்தோருக்கும் தாரை தப்பட்டை முழக்கியவர்களுக்கும் பரிமாறினர். உண்ட களைப்பில் மறுபடியும் பெரிய முரசின் ஒலி கேட்கும் வரை ஓய்வெடுத்தனர்.

முதல் நாள் அறுவடை முடிந்த போது ஆங்காங்கே குவிக்கப்பட்டிருந்த புதுத் தவசங்களின் மணமும் அழகும் வயல்களுக்குப் பொலிவூட்டின. ஊற்றெடுத்த வியர்வையுடனும் வேர்த்த உடலில் படிந்திருந்த மண்ணுடனும் களைத்திருந்த உழவர்கள் அருகிலிருந்த நீரோடையை நோக்கிச் சென்றனர். ஆடைகளைக் களைந்து விட்டு நீருக்குள் பாய்ந்தனர். அழுக்கையும் அலுப்பையும் தீர்ப்பதற்கு குடைந்து குடைந்து குளித்தனர். பிறகு, குடிசைகளை நோக்கி நடை துரிதப்பட்டது. குளித்துப் பளபளத்த மேனியைச் சுற்றிலும் ரீங்காரமிட்ட கடிவண்டுகளைக் கைகளை வீசித்

துரத்தினர். கிராமத்தை நெருங்கிய போது, பெண்டிரின் அடுக்களையிலிருந்து வட்டமிட்டுப் பறந்த புகைச் சுருள்கள் உழைத்துக் களைத்தோரை வரவேற்றன. வறுக்கப்பட்ட இறைச்சியின் மணம் மூக்கு வழி நுழைந்து மூளையைக் குடைந்தது. அறுவடை முடியும் வரை நாள்தோறும் மூன்று வேளை கறிச் சாப்பாடு!

வயிறு புடைக்க ஒரு பிடி பிடித்த குண்டாவிற்கு அன்றிரவு அவனுடைய தாயார் எதையோ தைத்துக் கொண்டிருந்தது கண்ணில் பட்டது. அதைப் பற்றி அவள் எதுவுமே சொல்லவில்லை; அவனும் கேட்கவில்லை. மறுநாள் காலையில் மண்கொத்தியைத் தூக்கித் தோளில் மாட்டிக் கொண்டு வயலுக்குப் புறப்பட்டவனைப் பார்த்துக் கடுப்புடன் கூறினாள், "அங்கியைப் போட்டுக்கிறலையாடா?"

அதிர்ச்சியில் குண்டா ஒரு சுற்று சுற்றினான். முளை ஒன்றில் புத்தம் புதிய அங்கி தொங்கியது. பொங்கிய ஆவலை அடக்கியபடி அதற்குள் புகுந்து கொண்டான். கதவிற்கு வெளியே பாய்ந்தவன் குதியாட்டம் போட்டான். ஏற்கனவே அவனுடைய கூட்டாளிகள் வெளியில் நின்றிருந்தனர். அவர்கள் அனைவரும் அவனைப் போலவே வாழ்க்கையில் முதன்முதலாக அங்கி அணிந்திருந்தனர். அனைவரும் சேர்ந்து துள்ளிக் குதியாட்டம் போட்டனர். ஒரே கூச்சலும் நகைப்பொலியுமாக அல்லோல கல்லோலப் படுத்தினர். ஒருவழியாக அவர்களுடைய நிர்வாணத்திற்கு நிவாரணம் கிடைத்துவிட்டது. அவர்கள் தமது சமுதாய நெறிப்படி அடுத்த பருவத்தை அடைந்து விட்டனர். ஆமாம்! அவர்கள் ஆளாகிக் கொண்டிருந்தனர்.

# 10

அன்றிரவு துள்ளல் நடைபோட்டு பின்டாவின் குடிசைக்குத் திரும்புவதற்குள் ஜுஃப்பூர் கிராம மக்கள் அனைவருக்கும் அவன் அங்கி அணிந்திருந்ததைக் காட்டிவிட வேண்டும் என்கிற விதத்தில் அவனுடைய போக்கு இருந்தது. நாள் முழுவதும் ஓய்வில்லாமல் உழைத்த போதிலும் அவனுக்குக் களைப்பே தெரியவில்லை. வழக்கமான நேரத்தில் அவனால் தூங்குவதற்கு முடியாமல் போகலாம் என்று நினைத்தான். இப்பொழுது அவன் பெரியவனாகி விட்டானல்லவா? பின்டா அவனுக்கு ஏதேனும் வேலை கொடுத்து இரவு நெடு நேரம் விழித்திருக்கச் செய்யலாம்! ஆனால், லேமின் தூங்கிய உடனே வழக்கம் போல அவனையும் தூங்கும்படி பணித்தாள். படுக்கைக்குச் செல்லும் முன் அங்கியைக் கழற்றிக் கொக்கியில் மாட்டிவிட வேண்டுமென்று நினைவுபடுத்தினாள்.

புறப்படுவதற்காகத் திரும்பியவன் முகத்தில் அதிருப்தியான பாவனை தெளிவாகத் தெரிந்தது. பின்டா அவனை மீண்டும் அழைத்தாள். அம்மாவிடம் முகத்தைக் காட்டியதற்காகத் தண்டனை கொடுக்கப் போகிறாரா? இல்லை, மனதை மாற்றிக் கொண்டு இன்னும் சிறிது நேரம் தன்னுடன் இருக்கச் சொல்லப் போகிறாளா? குண்டா எண்ணமிட்டான். "உங்கப்பா உன்னைக் காலையில

பார்க்கணும்ன்னார்" சொரத்தின்றிச் சொன்னாள். எதற்கு என்று கேட்காமல் "சரிம்மா" என்றான்; இரவு வணக்கம் தெரிவித்தான். அவனுக்குக் களைப்புத் தெரியவில்லை. எப்படியும் உடனே தூக்கம் பிடிக்கப் போவதில்லை. பசுத்தோலால் உடலைப் போர்த்தியபடி படுத்துக் கிடந்தவன் மனதில் எண்ணங்கள் ஓடின. 'என்ன தவறு செய்து விட்டேன்? எப்போதும் போலத் தானே இருக்கிறேன்.' பலவாறு மூளையைக் குடைந்தவனுக்கு எதுவும் தட்டுப்படவில்லை. பின்டா தண்டனை கொடுக்கும் அளவிற்குக் கூட அவன் எந்தத் தவறும் செய்துவிடவில்லை. கடுமையான தவறு ஏதேனும் செய்தால் தான அப்பா குறுக்கிடுவார். ஒருவழியாகக் காலையில் நடக்க இருந்ததைப் பற்றிக் கவலைப்படுவதை விட்டு விட்டு உறங்கிப் போனான்.

மறுநாள் காலை உணவின் போது குண்டா மிகவும் அடக்கமாக நடந்து கொண்டான். தனது அங்கி பற்றிய குதூகலம் கூட தலை தூக்கவில்லை. குட்டிப்பயல் லேமின் அண்ணனின் அங்கியைப் பிடித்து இழுத்தான். கையால் அவனைத் தள்ளிவிட ஓங்கினான். அம்மாவின் முறைப்பு அவனைத் தடுத்தது. சாப்பிட்டு முடித்த பின் அம்மா மேலும் ஏதேனும் சொல்வாளோ என்று எதிர்பார்த்து குடிசைக்குள்ளேயே அங்குமிங்குமாகத் திரிந்தான். அவள் இரவு கூறியதையே மறந்துவிட்டவளைப் போல நடித்தாள். தயக்கத்துடன் குடிசையை விட்டு வெளியேறி தந்தையின் குடிசையை நோக்கி மெதுவாக நடைபோட்டான். கூப்பிய கரங்களுடன் குடிசைக்கு வெளியே நின்றிருந்தான்.

உள்ளிருந்து வெளிப்பட்ட ஓமோரோ அவனுடைய கையில் சிறிய கவண் ஒன்றைத் திணித்தார். மூச்சே நின்று விட்டதைப் போல குண்டா திக்கித்தான். குனிந்து கவணைப் பார்த்தான்; நிமிர்ந்து அப்பாவைப் பார்த்தான். என்ன சொல்வதென்றே தெரியவில்லை. "பெரிய பையனாகி விட்டதால் இது உனக்குத் தான். கண்டபடி கவணைக் கொண்டு கல் எறிந்து விடாதே! எதன் மீது எறிய வேண்டும் என்பதில் தெளிவாக இரு!"

"சரிப்பா!" என்ற குண்டாவின் நாக்கு மேல் அண்ணத்தில் ஒட்டிக் கொண்டது.

ஓமோரோ பேச்சைத் தொடர்ந்தார், "உனக்கு இப்போது ஐந்து வயதாகிவிட்டபடியால், ஆடுகளை மேய்ப்பதற்கும் பள்ளிக்கும் செல்ல வேண்டும். தௌமானி தௌரேயுடன் இன்றைக்கு ஆட்டுமந்தை மேய்ப்பதற்குப் போ! அவனும் மற்ற பெரிய பசங்களும் உனக்குச் சொல்லிக் கொடுப்பார்கள். அவர்கள் சொல்படி நட. நாளை காலையில் பள்ளித்திடலுக்குச் செல்ல வேண்டும்." ஓமோரோ குடிசைக்குள் சென்றுவிட்டார். குண்டா குதியாட்டம் போட்டுக் கொண்டே ஆட்டுப் பட்டிக்குச் சென்றான். அங்கே சிடாஃபாவும் அவன் வயதை ஒத்த தோழர்களும் அங்கிகளை அணிந்து கொண்டு காத்திருந்தனர். அவர்களுடைய கரங்களும் கல் எறியும் கவணைப் பற்றியிருந்தன. அப்பா இல்லாத பையன்களுக்கு சித்தப்பாவோ அண்ணனோ கவண் செய்து கொடுத்தனர்.

பெரிய பையன்கள் பட்டிகளின் அடைப்புகளைத் திறந்து விடவே அன்றைய

தின மேய்ச்சலுக்காகப் பசியுடன் காத்திருந்த ஆடுகள் கனைத்துக் கொண்டே வெளியில் தாவின. தனது பெற்றோரின் நண்பர்களுடைய மூத்த பையனான தௌமானியைக் கண்டதும் குண்டா அவனை நெருங்க எத்தனித்தான். அவனும் அவனுடைய தோழர்களும் புதிதாக வந்திருந்த பொடியன்கள் மீது ஆடுகளை ஏவிவிட்டனர். சிறுவர்கள் சிதறி ஓடியதைக் கண்டு நகைத்தபடி பெரிய பையன்கள் தமது வேட்டை நாய்களுடன் புழுதியைக் கிளப்பிக் கொண்டே முன்னே விரைந்த ஆட்டுமந்தையைத் துரத்திச் சென்றனர். செய்வதறியாத குண்டாவும் அவன் வயதை ஒத்த தோழர்களும் கையில் கவணைப் பற்றிக் கொண்டு, அங்கியில் படிந்த புழுதியையும் துடைத்துக் கொண்டே பின்னால் தொடர்ந்தனர்.

ஆடுகளைப் பற்றி குண்டா அறிந்திருந்த வரையில், அவை அவ்வளவு வேகமாக ஓடக் கூடியவை என்பதை அவன் ஒருபோதும் எண்ணிப் பார்த்ததில்லை. தன்னுடைய தந்தையுடன் சிறிது தூரம் நடந்து சென்றதைத் தவிர கிராமத்தை விட்டு நெடுந்தொலைவிற்கு நடந்து சென்று அவனுக்குப் பழக்கமில்லை. ஒருபுறம் காட்டுப் பகுதியாகவும் மறுபுறம் கிராமத்து உழவர்களுடைய வயல்வெளியுமாக இடைப்பட்ட தாழ்ந்த புல்வெளி பரந்து கிடந்தது. பெரிய பையன்கள் தத்தமது பொறுப்பில் விடப்பட்ட ஆட்டுமந்தைகளைத் தனித்தனி இடங்களில் மேய விட்டுக் கவனித்துக் கொண்டிருந்தனர். அங்குமிங்குமாக அலைந்த வேட்டை நாய்கள் ஆடுகளுக்குப் பக்கத்திலேயே படுத்துக் கிடந்தன.

விடாப்பிடியாகத் தன்னைப் பின் தொடர்ந்த குண்டாவை ஒருவழியாகக் கண்டு கொள்வதென தௌமானி முடிவெடுத்தான். ஆனால் பொடியனைப் பூச்சி புழுவைப் பார்ப்பது போல அலட்சியமாக நோட்டமிட்டான். “உனக்கு ஒரு ஆட்டோட மதிப்புத் தெரியுமா?” என்று கேட்டான். உறுதியாகத் தெரியவில்லை என்று குண்டா பதிலளிப்பதற்குள், “ஒன்னைத் தொலைத்துப் பார்! உங்கப்பா அதன் மதிப்பை உனக்குக் காட்டுவார்!” என்றான். ஆடு மேய்க்கும் போது கவனத்தில் கொள்ள வேண்டிய எச்சரிக்கைகளைப் பற்றி தௌமானி சண்டப்பிரசண்டம் செய்தான். பையன்களுடைய கவனக் குறைவாலோ சோம்பலாலோ ஆடு ஒன்று மந்தையை விட்டுத் தனித்துச் சென்றுவிட்டதென்றால் பெரிய பிரச்சினை ஆகிவிடும் என்றான். தூரத்தில் தெரிந்த அடர்ந்த காட்டைச் சுட்டிக் காட்டி அங்கிருந்து வெளிக்கிளம்பிய சிங்கம், புலிகள் உயரமான புல்வெளிக்குள் அரவமில்லாமல் அடிவயிற்றால் தவழ்ந்தபடி ஆடுகளை நெருங்கினவென்றால் ஒரே பாய்ச்சலில் ஆட்டைக் கடித்துக் குதறிவிடுவன. “பக்கத்தில் பையன்கள் இருந்தால், ஆடுகளை விட்டு விட்டு அவர்களை ருசி பார்த்துவிடுவன” தௌமானி பயமுறுத்துவது போல் கூறினான். குண்டாவின் அகல விரிந்த கண்களைக் கண்ட தௌமானிக்கு மனசு நிறைந்தது. தொடர்ந்து பேசினான், “பூச்சாண்டிகளும் அவர்களுடைய கூட்டாளிகளும் சிங்கம், புலிகளைக் காட்டிலும் பயங்கரமானவர்கள். உயரமான புல் மறைவில் தவழ்ந்து வந்து பசங்களைப் பிடித்து வெகு தொலைவுக்குச் சென்று தின்றுவிடுவர். நான் ஆடு மேய்க்கத் தொடங்கிய இந்த ஐந்து வருடத்திற்குள் ஜுஃப்யூர் கிராமத்திலிருந்து மட்டும் ஒன்பது பசங்களைத் தூக்கிச் சென்று விட்டனர். பக்கத்துக் கிராமங்களில் இன்னும் ஏராளமான பேரைக் காணோம்!” ஜுஃப்யூர் கிராமத்தில் யாரும் காணாமல் போனதாகக் குண்டா கேள்விப்பட்டதில்லை.

ஆனால், பூச்சாண்டிகளைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறான். அவர்களைப் பற்றிய பயத்தில் அடுத்த சில நாட்கள் அவன் அம்மாவின் குடிசைக்கு அப்பால் சிறு தொலைவு கூடச் சென்றதில்லை.

குண்டாவினுடைய மனத்தில் ஓடிய எண்ணங்களைக் கணித்துக் கொண்ட தௌமானி, “கிராம எல்லைக்குள் இருந்தாலும் கூட பாதுகாப்பில்லை. எனக்கு ஒரு ஆளைத் தெரியும். சிங்கக் கூட்டம் அவனுடைய ஆட்டு மந்தையை மொத்தமாகக் கொன்று தின்றுவிட்டதால் அவனிடமிருந்த எல்லாமே பறிபோய் விட்டது. ஆனால், அவன் குடிசையிலிருந்து பத்து வயதிற்கும் மேற்பட்ட பையன்கள் இருவர் காணாமல் போன மறுநாள் அவன் பூச்சாண்டியின் பணத்துடன் பிடிபட்டான். அதைக் காட்டில் கண்டெடுத்ததாகக் கூறினான். கிராமப் பெரிசுகள் பஞ்சாயத்தில் விசாரிக்கும் முன்பு அவனே காணாமல் போய்விட்டான். நீ ரொம்பச் சின்னப்பயல். உனக்கு இதுவெல்லாம் நினைவிருக்காது. அப்படியெல்லாம் இன்னமும நடந்து கொண்டு தான் இருக்கிறது. ஆகவே, உன்னுடைய நம்பிக்கைக்குரியவர்களை விட்டுத் தனியே எங்கேயும் சென்று விடாதே! உன்னுடைய மந்தையுடன் மேய்ச்சலுக்குச் செல்லும் போது ஆழமான பள்ளப்பகுதிகளுக்குள் ஆடுகளைத் துரத்தி விடாதே! அப்புறம் உன்னுடைய குடும்பத்தார் உன்னைப் பார்க்கவே முடியாது!”

நடுங்கிக் கொண்டிருந்த குண்டாவை மேலும் அச்சுறுத்தும் விதமாக தௌமானி தொடர்ந்தான், “சிங்கம், புலியிடமிருந்தும் பூச்சாண்டியிடமிருந்தும் தப்பித்துக் கொண்டால் கூட, இன்னும் கடுமையான அபாயம் இருக்கிறது. ஏதேனுமொரு ஆடு கூட்டத்தைவிட்டுத் தப்பிச் சென்று பக்கத்திலுள்ள வயல்களில் புகுந்து பயிர்களையோ, நிலக்கடலைச் செடிகளையோ மேய்ந்ததென்றால், நாயுடன் அதனைத் துரத்திக் கொண்டு செல்லும் வேளையில் மற்ற ஆடுகளும் விளை நிலத்திற்குள் புகுந்து விடுவன. குரங்குகளையும், மான்களையும், காட்டுப் பன்றிகளையும் விட ஆட்டு மந்தை மிக வேகமாக பயிர்களை நாசப்படுத்தி விடும்.

தௌமானியின் தாய் அவனுக்காகவும் குண்டாவிற்காகவும் மதியச் சாப்பாடு கொடுத்தனுப்பியிருந்தாள். அதனை இருவரும் பகிர்ந்து உண்டனர். மதியத்திற்குள், குண்டாவின் வயதை ஒத்த தோழர்களுக்கு அவர்கள் தமது வாழ்நாள் முழுவதும் தம்மைச் சுற்றிலும் பார்த்திருந்த ஆடுகள் மீது மதிப்பும் மரியாதையும் மிகுந்தது. சாப்பாட்டிற்குப் பிறகு, தௌமானியின் வயதை ஒத்தவர்களில் சிலர் மரத்தடியில் குட்டித் தூக்கம் போட்டனர். மற்றவர்கள் தமது மாணவர்களுடைய புதிய கவண்களால் கல் எறிந்து வீழ்த்துவதற்காக அருகாமையிலிருந்த சிறு பறவைகளைத் தேடிச் சென்றனர். குண்டாவும் அவனுடைய தோழர்களும் ஆட்டு மந்தைகளை ஒழுங்குபடுத்துவதற்குப் போராடிக் கொண்டிருந்த பொழுது, பெரிய பையன்கள் அவர்களை நோக்கி எச்சரிக்கைக் குரல் எழுப்பியபடியும் அவர்களுடைய திண்டாட்டத்தைக் கண்டு நகைத்தபடியும் மரநிழலில் அமர்ந்திருந்தனர். ஆடுகளைத் துரத்திச் செல்லாத வேளைகளில் குண்டா தூரத்துக் காடுகளிலிருந்து பெருவிலங்குகள் எதுவும் வெளிப்பட்டுத் தன்னைத் தின்றுவிடக் கூடாது என்கிற

அச்சவுணர்வில் அங்குமிங்குமாக நோட்டமிட்டுக் கொண்டிருந்தான்.

பிற்பகலின் நடுவில், ஆடுகள் தமது வயிறு புடைக்க மேய்ந்துவிட்ட போது, தௌமானி கண்டிப்பான குரலில் குண்டாவை அழைத்து, "என்ன, உனக்கும் சேர்த்து நான் விறகு பொறுக்க வேண்டுமா?" என்றான். அப்பொழுது தான் குண்டாவுக்கு நினைவிற்கு வந்தது. மாலை வேளைகளில் ஆட்டு மந்தைகள் வீடு திரும்பிய போதெல்லாம் இரவு நேரங்களில் கிராமத்தில் நெருப்பு மூட்டுவதற்காக அவர்கள் ஒவ்வொருவரும் தலையில் விறகுகளைச் சுமந்து சென்றதை அவன் பல முறை பார்த்திருந்தான். ஆடுகளின் மீதும் காட்டுப் பகுதிகளின் மீதும் நோட்டமிட்டவாறே, அங்குமிங்கும் ஓடி அலைந்து காய்ந்து விழுந்து கிடந்த மரக்கிளைகளையும் உலர்ந்த செடி கொடிகளையும் எரிப்பதற்கு ஏதுவாக குண்டாவும் அவனுடைய தோழர்களும் சேகரித்தனர். தன்னால் சுமந்து செல்ல முடியும் என்று எண்ணிய அளவிற்குத் திரட்டிய விறகுகளை ஒன்றாகக் குவித்தான். விறகின் அளவைப் பார்த்த தௌமானி வெறுப்புடன் மேலும் சில கட்டைகளை அவற்றுடன் சேர்த்தான். ஒரு பச்சைக் கொடியைக் கொண்டு அவற்றை ஒன்றாகச் சேர்த்துக் கட்டினான். அந்த விறகுக் கட்டினைத் தூக்கித் தனது தலையின் மீது வைக்க முடியுமா என்பதே அவனுக்குச் சந்தேகமாக இருந்தது. அதனைச் சுமந்து கொண்டு கிராமத்திற்குச் சென்றாக வேண்டுமே!

பெரிய பையன்கள் அவர்களுடைய திண்டாட்டத்தைப் பார்த்து நகைத்துக் கொண்டிருக்கையில், குண்டாவும் அவனுடைய தோழர்களும் ஒருவழியாகச் சிரமத்துடன் கட்டுகளைத் தூக்கித் தமது தலைகளில் சுமந்து கொண்டு, வேட்டை நாய்களுக்கும் ஆட்டு மந்தைகளுக்கும் பின்னால் நடக்கத் தொடங்கினர். தலையிலிருந்த சுமை நழுவி விழுந்துவிடாதபடி கைகளால் சரிசெய்து கொண்டே தொடர்ந்தனர். எலும்பு நோக சுமந்து சென்ற குண்டாவுக்கு எதிர்ப்பட்ட கிராமம் முன்னெப்பொழுதைக் காட்டிலும் மிகவும் அழகாகத் தோன்றியது. கிராமத்தின் வாயிலுக்குள் நுழைந்தவுடன் பெரிய பையன்களின் ஆர்ப்பாட்டம் மேலும் அதிகரித்தது. கிராம மக்கள் பார்வைக்கும் செவிகளுக்கும் அன்று முழுவதும் புதிய பசங்களுக்குப் பயிற்சி அளிப்பதற்கு அவர்கள் எவ்வளவு சிரமப்பட்டனர் என்பதை உணர்த்தும் விதமாக எச்சரிக்கையாகவும் அறிவுறுத்தலாகவும் பெருங்குரலெடுத்து மந்தைகளினூடே அங்குமிங்கும் தாவினர். குண்டாவின் தலைச்சுமை ஒருவழியாக கிராம ஆசான் பிரிமா செசேயினுடைய திடலுக்குப் பாதுகாப்பாகக் கொண்டு சேர்க்கப்பட்டது. அவர் தான் மறுநாள் அவனுக்கும் அவனுடைய வயதை ஒத்தவர்களுக்கும் பாடம் துவக்க இருந்தார்.

மறுநாள் காலைக் கஞ்சியைக் குடித்தவுடன், புதிய இடையர்கள் ஒவ்வொருவரும் மரத்தாலான பலகையுடனும் எழுதுகோலுடனும் எழுதுவதற்கான மை அடங்கிய மூங்கில் குழாயுடனும் பள்ளித் திடலுக்குள் அணிவகுத்து நுழைந்தனர். ஆடுகளைக் காட்டிலும் மடையர்கள் என்பது போல அவர்களை நடத்திய ஆசான் உட்காரும்படி பணித்தார். அந்த வார்த்தையைச் சொல்லி முடிப்பதற்குள் அவர் எதிர்பார்த்ததைக் காட்டிலும் தாமதமாக அவர்கள் வந்ததற்காக கீழ்ப்படியாமையின் பொருளை அவர்கள் மீது உரசிய அவருடைய கைப்பிரம்பு விளக்கியது. கடுகடுப்பான குரலில்

அவரும் விளக்கினார். அவரிடம் படிப்பதற்காக வருகின்ற காலம் முழுவதும் அவர் கேட்டால் ஒழிய யாரும் வாய் திறந்து பேசக் கூடாது. அவர்கள் மத்தியில் பிரம்பை அவர் ஆட்டிய விதம் மீறுபவர்களின் நிலையை உணர்த்தியது. தாமதமாக வருபவர்களுக்கும் அதே நிலை தான் என்றார். காலையில் கஞ்சி குடித்தவுடன், மாலையில் ஆட்டு மந்தைகளுடன் திரும்பியவுடன் பாடம் துவக்கப்பட்டது.

"நீங்களெல்லாம் இன்னமும் குழந்தைகள் அல்ல. உங்களுக்கென்று பொறுப்புகள் உண்டு. அவற்றை நிறைவேற்ற முயலுங்கள்!" ஒழுங்குமுறையை நிலைநாட்டியவுடன், அன்று மாலையில் அவர்களுக்குத் திருக்குரானிலிருந்து சில தொழுகைப் பாடல்கள் ஓதப்படும் என்றும் அவற்றை அவர்கள் மனப்பாடம் செய்து ஒப்பித்த பின்னர் அடுத்த பாடம் துவக்கப்படும் என்றும் தெரிவித்தார். அத்துடன் அவர்களை விட்டுவிட்டார். அவருடைய பள்ளியிறுதி வகுப்பு மாணவர்கள் வந்திருந்தனர். அவர்கள் புதிதாகச் சேர்ந்திருந்த குண்டாவின் வயதை ஒத்தவர்களைக் காட்டிலும் பெரிதும் அஞ்சி நடுங்கினர். அவர்களுக்கு அன்று இறுதித் தேர்வு. திருக்குரானை மனப்பாடம் செய்து ஒப்பிப்பதிலும் அரேபிய மொழியில் எழுதுவதிலும் தேர்வு நடத்தப்பட இருந்தது. அதில் அவர்கள் தேர்ச்சி பெறுவதைப் பொறுத்து அவர்கள் முறைப்படி அடுத்த பருவத்தை அடைந்து விட்டதாக அறிவிக்கப்பட்டனர்.

அன்று, தம்முடைய வாழ்க்கையில் முதன் முறையாக ஆட்டு மந்தைகளைத் தமது முழுமுயற்சியால் பட்டிகளிலிருந்து விடுவித்து குண்டாவும் அவனுடைய தோழர்களும் அரும்பாடு பட்டு மேய்ச்சல் பகுதிக்கு ஓட்டிச் சென்றனர். இன்னும் சில நாட்கள் ஆடுகளால் வழக்கம் போல மேய முடியாது! குறைவாகத் தான் தீனி கிடைக்கும்! புல் மீது வாய்வைத்துக் கடிப்பதற்குள் குண்டாவும் அவனுடைய தோழர்களும் அவற்றைத் துரத்துவதும் கத்துவதுமாக இருந்தனர். ஆட்டு மந்தைகளைக் காட்டிலும் குண்டா பெருங் கவலையில் ஆழ்ந்திருந்தான். ஒவ்வொரு முறையும் ஓய்வாக உட்கார்ந்த போது, அவனுடைய வாழ்க்கையில் ஏற்பட்ட மாற்றங்களால் ஏதேனும் பயனுண்டா என்று சிந்திக்கலானான். எப்பொழுது பார்த்தாலும் எதையாவது செய்ய வேண்டியிருக்கிறதே! எங்காவது செல்ல வேண்டியிருக்கிறதே! நாள் முழுவதும் ஆட்டு மந்தையைக் கட்டி மேய்க்க வேண்டியிருந்தது! காலையில் எழுந்து கஞ்சி குடித்தவுடனும் மேய்த்துத் திரும்பியவுடனும் ஆசான்! அதன் பின்னர் இருட்டுவதற்குள் முடிந்த அளவுக்குக் கவண் எறியும் பயிற்சி! வேறு எதைப் பற்றியும் சிந்திக்க நேரமே இருக்காது போலிருக்கிறதே!

# 11

நிலக்கடலை, சிறுதானியங்களின் அறுவடை நிறைவடைந்தது. அடுத்து, பெண்டிருடைய வயல்களில் நெல் கதிரறுப்பு. ஆடவர் யாரும் பெண்டிருக்கு அறுவடையில் உதவவில்லை. குண்டா, சிடாஃபா போன்ற பயல்களும் கூட ஒதுங்கிக் கொண்டனர். நெல் சாகுபடி தொடர்பான அனைத்துப் பணிகளும் பெண்டிருக்கு மட்டுமே உரியவையாம்! அன்று சூரியனின் முதலாவது கதிர் வயலில் குனிந்து பொன்னிறமான நெற்கதிர்களை அறுவடை செய்துகொண்டிருந்த பின்டா, ஜான்கே தௌரே மற்றும் ஏனைய பெண்களின் மீது தான் பட்டுத் தெரித்தது. அறுவடை செய்த நெற்கதிர்களை இரண்டு நாட்கள் நடைபாதையில் கிடத்தி உலர விட்டனர். நன்றாகக் காய்ந்த பிறகு பரிசல்களில் ஏற்றி கிராமத்திற்குக் கொண்டு சென்று, பெண்களும் அவர்களுடைய மகள்களும் அவற்றை தெளிவான கட்டுகளாகக் கட்டி அவரவர் குடும்பத்தின் வைப்பு அறைகளில் சேமித்தனர். நெல் அறுவடை நடந்து முடிந்த பின்னரும் பெண்களுக்கு ஓய்வென்பது கிடையாது. ஆடவருடைய பருத்திக் காடுகளில் பருத்திப்பூ பறிக்க வேண்டும். அவை நீண்ட நாட்களாக செடியோடு உலரும்படி விட்டு வைக்கப்பட்டிருந்தன. எவ்வளவு கூடுதலாக சூரிய வெப்பத்தில் உலர்கின்றதோ அந்த அளவு

சிறப்பான நூல் பெண்டிர் தைப்பதற்கு ஏற்ற வகையில் கிடைக்கும்.

ஜுஃப்யூர் கிராமத்து மக்களால் ஆண்டு தோறும் ஏழு நாட்கள் கொண்டாடப்பட்ட அறுவடைத் திருவிழாவிற்காகக் காத்திருந்த பெண்கள் தமது குடும்பத்தினருக்கான புத்தாடைகளை தைக்கும் பணியில் முனைப்பாக ஈடுபட்டனர். பின்டா பருத்தியில் நூல் நூற்றுக்கொண்டிருந்த வேளையில் பல மாலைப் பொழுதுகளில், குண்டாவிற்குப் பெரிதும் எரிச்சலூட்டக் கூடியதாக இருந்த போதிலும், வாய் ஓயாமல் மழலைக்குரலில் குழறிக் கொண்டும், அட்டை போல் தன்மீது ஒட்டிக் கொண்டும் தொல்லை கொடுத்த குட்டிப்பயல் லேமினைக் கவனித்துக் கொள்ள வேண்டி இருந்தது. ஆனாலும், அவனைத் தூக்கிக் கொண்டு பின்டாவுடன் கிராம நெசவாளி டெம்போ டிப்பாவின் குடிசைக்குச் சென்ற போது குண்டா மகிழ்ச்சி அடைந்தான். அந்த நெசவாளிப் பெண் கைகளையும் கால்களையும் வேக, வேகமாக அசைத்து நூற்கண்டுகளில் இருந்த நூலை நீண்ட துணியாக நெய்து கொண்டிருந்ததை வைத்த கண் வாங்காமல் அதிசயமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். குடிசைக்குத் திரும்பியவுடன் மரக்கட்டைகளை எரித்து உண்டுபண்ணிய சாம்பலில் நீரை வார்த்து அடர் கரைசலாக்கும்படி பணித்தாள். அதில் வண்ணமேற்றும் இலைகளை நன்றாக இடித்துக் கலந்தாள். வண்ணக் கரைசலில் துணிகளை நன்கு மூழ்கவைத்து அவற்றிற்கு நீல வண்ணமேற்றினாள். ஜுஃப்யூர் கிராமத்துப் பெண்கள் அனைவருமே அத்தகைய பணிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டிருந்தனர். தாழ்வான புதர்களில் துணிகளைப் பரத்தி உலர வைத்தனர். சிவப்பு, பச்சை, மஞ்சள், நீலம் என கிராமமே வண்ணக் கோலம் பூண்டு பொலிவுற்றது.

நூல் நூற்பதிலும் ஆடைகளைத் தைப்பதிலும் பெண்கள் ஈடுபட்டிருந்த வேளையில், ஆடவரும் தமக்கு நிர்ணயிக்கப்பட்டிருந்த பணிகளை அறுவடைத் திருவிழாவிற்கும், தமது வேலைகளை மேலும் கடுமையாக்கக் கூடிய கடுங்கோடைக்காலத்திற்கும் முன்பாக முடித்துவிட வேண்டும் என்கிற முனைப்புடன் செயல்பட்டனர். மூங்கில் கழிகளைக் கொண்டு அமைக்கப்பட்டிருந்த கிராமச் சுற்றுச் சுவர், ஆங்காங்கே ஆட்டு மந்தைகளும் மாட்டு மந்தைகளும் தமது முதுகை வைத்துத் தேய்த்ததால், சாய்ந்தும் உடைந்துமிருந்த பழுதுகளை நீக்கிச் சரிசெய்தனர். கனத்த மழையால் சீர்குலைந்திருந்த மண்குடிசைகளைப் பூசி உறுதிப்படுத்தினர். பழமையானவையும் சிதைந்து போனவையுமான கூரைகளைப் புதிதாகத் தைத்தனர். விரைவிலேயே மணம் முடிக்க வேண்டிய இணைகளுக்குப் புதிய குடிசைகள் எழுப்பப்பட வேண்டியிருந்தன. குண்டாவிற்குக் குதூகலமளிக்கக் கூடிய வாய்ப்புக் கிட்டியது. புதிய குடிசைக்கான சுவர்களை எழுப்புவதற்கு ஏற்ற கெட்டியான மண்ணில் நீரை வார்த்துக் கால்களால் மிதித்து உரியமுறையில் சகதியாகவும் சாந்தாகவும் மாற்றினர். அவ்வாறு மண் மிதித்த பெரியவர்களுடன் குண்டாவும் இணைந்து கொண்டான்.

கிணற்றிலிருந்து நீர் சேந்திய போது, வாளியில் கலங்கலான நீர் இருந்ததைக் கண்ட ஒருவர் கிணற்றிற்குள் இறங்கி சோதித்துப் பார்த்தார். புழு, பூச்சிகளைத் தின்பதற்காகக் கிணற்றிற்குள் விடப்பட்டிருந்த மீன் குஞ்சு பருத்துப் பெரிதாகி

கலங்கல் நீருக்குள் இறந்து கிடந்தது. உடனே புதிதான குடிநீர்க் கிணறு தோண்டுவதற்கு ஏற்பாடானது. கழுத்தளவு பள்ளத்தில் நின்று தோண்டியபோது, கோழிமுட்டை அளவிலான வெண்பச்சை வண்ணக் களிமண் கட்டிகளை வாரி வெளியில் எடுத்தனர். கிணறு தோண்டியதை குண்டா போன்ற பயல்கள் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர். அத்தகைய களிமண் கட்டிகளை உடனே எடுத்துச் சென்று கிராமத்தில் வயிறு பெருத்திருந்த பெண்களுக்குக் கொடுக்க அவர்களும் ஆவலுடன் அவற்றைச் சாப்பிட்டனர். அந்தக் களிமண் பிறக்கவிருந்த குழந்தைகளுடைய எலும்புகளுக்கு வலுவூட்டுமாம்! பின்டா சொன்னாள்!

கட்டுப்பாடில்லாமல் விடப்பட்ட குண்டா, சிடாஃபா மற்றும் அவர்களுடைய தோழர்கள் கவண் கல் எறிந்து பழகுவதிலேயே தமது ஓய்வு நேரத்தில் பெரும் பகுதியைக் கழித்தனர். கண்டவற்றின் மீதெல்லாம் கவணிலிருந்த கல் எறிந்த போதிலும், ஏதொன்றையும் தாக்கியதில்லை. இருந்தாலும், அவர்கள் எழுப்பிய ஆரவாரக் கூச்சல் காட்டு விலங்குகளையே ஓடி ஒளிந்து கொள்ளச் செய்தது. லேமின் வயது குட்டிப்பயல்கள் கூட கவனிப்பாரற்று விடப்பட்டனர். ஏனெனில், மற்றெவரைக் காட்டிலும் ஜுஃப்யூர் கிராமத்துப் பாட்டிகள் வரவிருந்த அறுவடைத் திருவிழாக் காலத்தில் மணமாகா கன்னியர் அணிந்து கொள்வதற்கான சிகை அலங்காரப் பொருட்கள் செய்வதில் முனைப்பாக இருந்தனர். இரவு நெடு நேரம் வரையிலும் கூட விழித்திருந்து கொண்டை வளையங்களையும், பின்னல் வேலைப்பாடுகளையும், முழுமையான பொய் மயிர்க் கவிகைகளையும் அழுகிய ஒருவகைச் செடிகளின் இலைகளிலிருந்தும் ஊறவைத்த ஒருவகை மரப்பட்டைகளிலிருந்தும் எடுக்கப்பட்ட நீண்ட இழைகளைக் கொண்டு தயாரித்தனர். இலைகளிலிருந்து எடுக்கப்பட்ட முரட்டு வகை இழைகளால் தயாரிக்கப்பட்ட பொருட்களைக் காட்டிலும் மரப்பட்டைகளிலிருந்து உரிக்கப்பட்ட மிருதுவான இழைகளைக் கொண்டு செய்யப்பட்ட பொருட்கள் கூடுதல் மதிப்புள்ளவை. ஒரு முழுப் பொய்மயிர் கவிகைக்கு மாற்றாக மூன்று ஆடுகள் கொடுக்க வேண்டியிருந்தது. வாடிக்கையாளர்கள் மணிக்கணக்கில் உரத்த குரலில் பேரம் பேசினர். நா வறள அப்படிப் பேசினால் தான் பாட்டிமார் விலையைக் குறைப்பர் என்பதை அறிந்திருந்தனர்.

முழுமையான சிகைக் கவிகைகளைச் செய்வதில் நியோ போட்டோ பாட்டி வல்லவள். அவளுடைய சிகை அலங்காரப் பொருட்களைப் போலவே அவளுடைய துணிச்சலான இரைச்சல் மிக்க பேச்சும் கிராமத்துப் பெண்களைப் பெரிதும் கவர்ந்தது. பெண்களைக் காட்டிலும் ஆடவர் தனிமதிப்புடையவர்கள் என்கிற தொன்று தொட்டு வந்த மரபுக் கட்டளையை எதிர்த்து அவள் வார்த்தையாடியதைப் பெண்கள் கேட்டு பெரிதும் மகிழ்ச்சியடைந்தனர். நாள்தோறும் காலையில் குடிசை முன்பு சட்ட, திட்டமாக இடுப்பு வரை ஆடையைத் தூக்கிச் செருகிக் கொண்டு தனது முதிர்ந்த முரட்டுத் தோலில் வெயில்படும்படி அமர்ந்து சிகை அலங்காரப் பொருட்களைப் பின்னிக் கொண்டிருந்தாள். அவ்வழியாகக் கடந்து சென்ற ஆடவரின் பார்வையைக் கவனிக்கத் தவறியதில்லை. “ஏய், அதையா பார்த்தாய்! இவனுகளெல்லாம் ஆம்பிளைன்னு சொல்லிக்கிறாங்க! எங்காலத்தில தான் ஆம்பிளைக ஆம்பிளைகளா இருந்தாக!” என்று அவர்களைக் கூப்பிட்டுக்

கூவினாள். அடுத்து அவள் பேசக் கூடிய வார்த்தைகளை அறிந்தவர்கள் என்பதால் ஆடவர் அவளுடைய நாக்கிற்குப் பயந்து தப்பித்து ஓடினர். மதியத்தில், பின்னல் பொருட்கள் அப்படியே மடியில் கிடக்க அயர்ந்து உறங்கிப் போகும் வரை அவளுடைய வாய் ஓயாது! அவளுடைய குறட்டை ஒலியைக் கேட்டு அவளுடைய பொறுப்பில் விடப்பட்ட தத்துநடையாளர்கள் நகைத்தனர்.

அதே சமயத்தில், ஐந்து வயதிற்கும் மேற்பட்ட பெண்கள் மருத்துவ குணம் கொண்ட வேர்களையும் சமைப்பதற்கான பொருட்களையும் மூங்கில் கூடைகளில் சேகரித்து அவற்றை வெயிலில் உலர்த்துவதற்கு தமது தாய்மார்களுக்கும் தமக்கையருக்கும் உதவினர். சிறுதானியங்களை உரலில் இட்டு இடித்த பொழுது அவற்றைப் புடைத்துத் தூற்றி உமியையும் தவிட்டையும் பிரித்தனர். குடும்பத்தினரின் துணிகளைத் துவைப்பதிலும் தம்மை ஈடுபடுத்திக் கொண்டனர். அழுக்கடைந்த ஆடைகளை கருங்கற்களின் மீது அடித்துத் துவைத்தும், கடுங்காரத்தையும் பனை எண்ணெயையும் சேர்த்து தாய்மார் குடிசைகளில் செய்த கட்டிகளைத் தேய்த்து நுரையில் ஊற வைத்தும் தூய்மைப்படுத்தினர்.

ஆடவர் தாம் ஆற்றவேண்டிய முகாமையானப் பணிகளை நிறைவேற்றிவிட்டனர். திருவிழாவிற்கு இன்னும் சில நாட்களே இருந்தன. அடுத்த இளம்பிறை நாளன்று கேம்பிய நாட்டுக் கிராமங்கள் அனைத்திலும் விழாத் தொடங்க இருந்தது. இசைக் கருவிகளின் ஓசை ஆங்காங்கே கேட்கத் தொடங்கிவிட்டது. இருபத்தி நான்கு நரம்புகள் கொண்ட தந்திக் கருவியையும், முரசுகளையும், அடியில் வெவ்வேறு நீளங்களில் மரக்கட்டைகள் பொருத்தப்பட்ட சுரைக்குடுக்கைகளாலான கருவிகளையும் கொண்டு கிராமத்து இசைக் கலைஞர்கள் இசைப் பயிற்சி செய்தனர். அவர்களைச் சுற்றிக் கூடிய சிறு கூட்டம் கைதட்டி ஆரவாரம் செய்தது. அவர்கள் அவ்வாறு இசைத்துக் கொண்டிருந்த வேளையில், மேய்ச்சலிலிருந்து திரும்பிய குண்டா, சிடாஃபா மற்றும் தோழர்கள் மூங்கிலிலிருந்து செய்யப்பட்ட புல்லாங்குழல்களை ஊதியும், மணிகளை ஒலித்தும், குடுக்கைகளை ஆட்டியும் இசையெழுப்பியபடி தெருக்களில் வலம் வந்தனர்.

பெரும்பாலான ஆடவர் அரட்டை அடித்தும் ஆலமர நிழலில் அமர்ந்திருந்தும் ஓய்வாகப் பொழுதைக் கழித்தனர். கிராம சபையைச் சேர்ந்த பெரிசுகளும் ஓமோரோவின் வயதை ஒத்தவர்களும் சற்றே இளையவர்கள் சிலரும் ஆண்டு தோறும் அறுவடைத் திருவிழாவிற்கு முந்தைய கிராமச் செயல்பாடுகளைத் தீர்மானித்தனர் அவர்கள் மரியாதை நிமித்தம் கேளிக்கைகளிலிருந்து ஒதுங்கியிருந்தனர். அவ்வப்போது, இரண்டு, மூன்று இளைஞர்கள் எழுந்து கைகளை அகல விரித்து சுண்டு விரல்களால் பிணைத்தபடி பழங்கால ஆப்பிரிக்க ஆடவர் ஆட்டத்தை ஆடியபடி கிராமத்தைச் சுற்றி வந்தனர்.

ஆனால், ஒரு சிலர் தனியாக நீண்ட நேரத்தைச் செலவிட்டனர். அவர்கள் மரப்பலகைகளில் பல்வேறு அளவுகளிலும் வடிவங்களிலும் உருவங்களைச் செதுக்கிக் கொண்டிருந்தனர். குண்டாவும் அவனுடைய தோழர்களும் தம்முடைய கவண்களை ஓரங்கட்டிவிட்டு சிற்பிகள் செதுக்கிக் கொண்டிருந்த புதிரானவையும் பயங்கரமானவையுமான முகமூடிகளைக் கவனித்துக் கொண்டிருந்தனர்.

அவை விழாக் காலத்தில் நடனமாடப் போகிற நடனக் கலைஞர்கள் அணிந்து கொள்வதற்கானவை. வேறு சிலர் புயங்களும் கால்களும் உடலுடன் ஒட்டியபடியும் பாதங்கள் தட்டையாகவும் தலை நிமிர்ந்து இருக்குமாறும் மனித உருவங்களையும் விலங்குகளின் உருவங்களையும் செதுக்கினர்.

பின்டாவும் பிற பெண்களும் கிராமத்தின் புதிய கிணற்றடியில் அவர்களுக்குக் கிடைத்த வழிகளில் ஓய்வாகப் பொழுது போக்கினர். அவர்கள் தினமும் அங்கே கூடி குளிர்ந்த நீர் இறைப்பதும் சிறிது நேரம் பழமை பேசுவதும் வழக்கம். விழா நெருங்கிக் கொண்டிருந்ததால் அவர்களுக்கு வேலைப் பளு அதிகமிருந்தது. ஆடைகள் தைக்கும் பணியை முடித்தாக வேண்டும். குடிசைகளைத் தூய்மைப்படுத்துவதும், உலர்ந்த உணவுப் பண்டங்களை ஊறவைப்பதும், இறைச்சி வருவலுக்காக ஆடுகளை வெட்டுவதும் அவர்களுடைய வேலை. அத்தனைக்கும் மேலாக விழாவின் போது தம்மை மிகவும் அழகாகக் காட்டிக் கொள்ள வேண்டும்!

பெண்கள் முரட்டுத்தனமாக மரங்களில் ஏறி விளையாடிக் கொண்டிருந்ததை குண்டா அடிக்கடி பார்த்திருந்தான். அவர்களெல்லாம் அடக்க ஒடுக்கமாக நடந்து கொண்டனர். அவர்கள் நிமிர்ந்து கூட நடக்கவில்லை. அவர்களைப் போய் பெரிய ஆட்களெல்லாம் திரும்பித் திரும்பிப் பார்க்கிறார்களே! வில் அம்பைக் கொண்டு குறிபார்த்துத் தெறிக்க அறியாத அப்பாவிப் பொண்ணுங்க! குண்டா வியந்தான்!

அத்தகைய பெண்களின் வாய் முட்டி அளவிற்கு வீங்கியிருந்தது. உதடுகளின் உட்பகுதி முட்களால் கீறப்பட்டு புகைக் கரி கொண்டு தேய்க்கப்பட்டிருந்தது. பின்டாவும், பன்னிரெண்டு வயதிற்கு மேற்பட்ட கிராமப் பெண்டிருடன் சேர்ந்து ஒருவித இலைகளை இடித்துக் காய்ச்சி குளிர வைத்து வடித்த சாற்றில் பாதங்களையும் உள்ளங்கைகளையும் நனைத்து மைவண்ணமாக்கிக் கொண்டாள். அம்மாவைப் பார்த்து குண்டா காரணம் கேட்டான். 'ஓடிப் போடா' துரத்தினாள். அப்பாவைக் கேட்டான். "பெண்கள் எவ்வளவு கறுப்பாக இருக்கிறார்களோ அவ்வளவு அழகாக இருப்பார்கள்!"

"அது தான் எதுக்கு?"

"நீயாகவே புரிந்து கொள்ளும் காலம் வரும்!"

# 13

அறுவடைத் திருவிழாவின் கடைசி நாள் காலையில் அலறல் ஓலம் கேட்டு குண்டா விழித்தான். அங்கியை இழுத்துக் கட்டிக் கொண்டு வெளியே ஓடினான். பேரச்சம் அடிவயிற்றைப் பிசைந்தது. அருகிலிருந்த பல குடிசைகளுக்கு முன்பு, முகத்தில் பயங்கரமான முகமூடிகளையும், தலையில் பெரிய, பெரிய முண்டாசுகளையும், உடலில் இலைகளையும் மரப்பட்டைகளையும் அணிந்த ஐந்தாறு முரடர்கள் கைகளில் ஈட்டிகளைச் சுழற்றியபடியும் காட்டுக் கூச்சல் எழுப்பியவாறும் அங்குமிங்குமாகத் தாவிப் பாய்ந்து கொண்டிருந்தனர். குடிசைக்கு ஒருவராக உறுமியவாறு பாய்ந்து நுழைந்தவர்கள் பத்து வயதிற்கு மேற்பட்ட நடுநடுங்கிய பையன் ஒருவனைக் கையைப் பிடித்துத் தரதரவென்று இழுத்துக்கொண்டு வெளியேறியதை குண்டா பீதியுடன் கவனித்தான்.

தன்னைப் போலவே பீதியடைந்திருந்த தன்னுடைய தோழர்களுடைய கூட்டத்தில் இணைந்து கொண்ட குண்டா ஒரு குடிசையின் மூலையில் ஒளிந்து கொண்டு குலை நடுக்கத்தால் அகல விரிந்த கண்களால் துழாவினான். குண்டா, சிடாஃபா, அவனுடைய தோழர்கள் மறைந்திருந்ததைக் கண்டு கொண்ட முகமூடி மனிதர்களில் ஒருவன் கையில் ஈட்டியைச் சுழற்றிக்

கொண்டு, பயங்கரமாகக் கத்தியவாறு அவர்களை நோக்கிப் பாய்ந்தான். சற்றுத் தூரத்திலேயே நின்றவன் தான் பிடித்து வைத்திருந்த பையனை நோக்கித் திரும்பிவிட்டான். ஆனாலும், பீதியால் நடுநடுங்கியவாறு பொடியன்கள் சிதறி ஓடிவிட்டனர். கிராமத்தின் பத்து முதல் பதினைந்து வயதுப் பயல்களையெல்லாம் திரட்டிய முரடர்கள் அவர்களைத் தமது அடிமைகளிடம் ஒப்படைத்தனர். அவர்கள் பயல்களைக் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு ஒவ்வொருவராகக் கிராமத்தின் நுழைவாயிலை விட்டு வெளியேறினர்.

குண்டா கேள்விப்பட்டிருந்தான். ஜுஃப்யூர் கிராமத்திலிருந்து பத்து முதல் பதினைந்து வயதுப் பயல்களை ஆம்பிளைகளுக்கான பயிற்சி அளிப்பதற்காகக் கூட்டிச் செல்லப் போகிறார்கள் என்று. ஆனால், அவ்வளவு பயங்கரமாக அது நடக்குமென்று அவன் நினைத்துப் பார்க்கவில்லை. ஆம்பிளைக்கான பயிற்சி அளிக்கின்ற முரடர்களுடன் அவர்கள் புறப்பட்டுச் சென்றதிலிருந்து ஒட்டு மொத்த கிராமமும் சோகத்தில் ஆழ்ந்திருந்தது. அடுத்த சில நாட்கள் குண்டாவும் தோழர்களும் தாம் கண்ட பயங்கர நிகழ்ச்சியைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தனர். அவர்கள் கேள்விப்பட்ட வரை அந்தப் பயல்களுக்கு அளிக்கப்படவிருந்த பயிற்சி முறை அதைக் காட்டிலும் பயங்கரமானது. காலையில், திருக்குரானை மனனம் செய்து ஒப்பிப்பதில் ஆர்வம் காட்டவில்லை என்று ஆசான் பொடியன்களுடைய தலையைப் பதம் பார்த்து விட்டார். பள்ளித் திடலை விட்டு வெளியேறி, ஆட்டு மந்தைகளை ஓட்டிக் கொண்டு மேய்ச்சல் பகுதிகளுக்குச் சென்றவர்கள் தங்களால் மறக்க முடியாததை நினைக்காமல் இருப்பதற்குத் தவியாய்த் தவித்தனர். எது எப்படியோ, அவர்களையும் ஒரு நாளைக்கு தலையில் முக்காடு போட்டு அந்த முரடர்கள் அடித்தும் உதைத்தும் கிராமத்து வீதி வழியே தர தரவென்று இழுத்துச் செல்லப் போகிறார்கள்!

அவர்கள் அனைவரும் நன்கு அறிந்திருந்தனர். அழைத்துச் செல்லப்பட்ட பயல்கள் கிராமத்திற்குத் திரும்புவதற்குள் முழுமையாகப் பன்னிரெண்டு மாதங்கள் கடந்து விடுவன. ஆனால், அதன் பிறகு அவர்கள் ஆம்பிளைகள். தனக்கு ஒருவர் தெரிவித்ததாக குண்டா கூறினான்: பயிற்சிக்குச் சென்ற பயல்களை தினந்தோறும் அடிப்பார்களாம்! கரமோ என்பவன் சொன்னான்: உணவுக்காக காட்டு விலங்குகளை வேட்டையாடப் பழக்கினார்கள். சிடாஃபா பயமுறுத்தினான்: இரவில் நடுக் காட்டில் கொண்டுபோய் விட்டு விடுவர். அவர்களாகவே வழியைக் கண்டு பிடித்துத் திரும்ப வேண்டும். ஆனால், அவர்கள் யாருமே குறிப்பிடாத, பொடியன்களுக்கு மிகவும் அச்சமளிக்கக் கூடிய செய்தி ஒன்று உண்டு. குண்டா அதைப் பற்றி நினைத்த போதெல்லாம் பெருமூச்செறிந்தான். பயிற்சிக் காலத்தில் அவர்களுடைய ஆண்குறியில் ஒரு பகுதி வெட்டியெடுக்கப்பட்டது. பயிற்சியைப் பற்றிப் பேசப் பேச பயம் அதிகரித்ததால் சற்று நேரத்தில் அதைப் பற்றிப் பேசுவதையே நிறுத்திவிட்டனர். ஒவ்வொருவரும் பயத்தைத் தனக்குள்ளேயே மறைத்துக் கொள்ள முயன்றனர். துணிச்சலற்றவன் என்று காட்டிக் கொள்ள விரும்பவில்லை!

குண்டாவும் அவனுடைய தோழர்களும் ஆடு மேய்ப்பதில் தேறிவிட்டனர்.

துவக்கத்தில் அவர்கள் புல்வெளிகளில் ஆடுகளுடன் எதிர்கொண்ட பிரச்சினைகளுக்கெல்லாம் தீர்வு கண்டு விட்டனர். . ஆனால், அவர்கள் இன்னமும் நிறையக் கற்றுக் கொள்ள வேண்டும். ஒருவழியாக ஒரு செய்தியைக் கண்டு கொண்டனர். காலை வேளைகளில் அவர்களுடைய வேலை மிகவும் கடினமாக இருந்தது. கடி வண்டுகள் கூட்டமாகப் பறந்ததால் ஆடுகள் கடி பொறுக்க மாட்டாமல் உடலைக் குலுக்கிக் கொண்டும் வால்களை முறுக்கிக் கொண்டும் அங்குமிங்குமாகச் சிதறி ஓடின. அவற்றை ஒன்று திரட்டுவதற்குப் பெரும் பாடு பட வேண்டியிருந்தது. மதியத்திற்குச் சற்று முன்னர் வெயிலின் கடுமை அதிகரித்ததால், வண்டுகள் கூட குளிர்ச்சியான இடங்களைத் தேடிச் சென்றன. களைப்படைந்த ஆடுகள் அமைதியாக மேய்வதி.ல் முனைந்துவிடுகின்றன. பொடியன்கள் தம்முடைய கேளிக்கைகளில் திளைப்பதற்கு நேரம் கிடைத்தது.

கவண்களைக் கொண்டும், அவர்கள் இரண்டாம் பருவத்தை அடைந்துவிட்டதை அங்கீகரித்து அவர்களுடைய தந்தையர் சமீபத்தில் கொடுத்த வில் அம்புகளைக் கொண்டும் சிறிய அளவில் வேட்டையாடுவதற்குத் தற்பொழுது கற்றுக் கொண்டனர். முயல்கள், அணில்கள், எலிகள், கரட்டோணான்கள் போன்றவற்றை ஒரு மணி நேரத்திற்கும் கூடுதலாக வேட்டையாடினர். ஒருநாள் குண்டா அடிபட்டுவிட்டதைப் போல பாசாங்கு செய்து சிறகினை இழுத்துக் கொண்டு நகர்ந்த புதர்ப்பறவை ஒன்றைக் கூட வேட்டையாடி விட்டான். வேட்டையாடியவற்றை மதியத்தில் உரித்துக் கழுவி தம்முடன் எப்பொழுதும் வைத்திருந்த உப்பைத் தடவி நெருப்பு மூட்டி சுட்டு உண்டனர்.

புல்வெளிகளில் நாளுக்கு நாள் வெப்பத்தின் கொடுமை அதிகரித்துக் கொண்டிருந்தது. கடிவண்டுகள் ஆடுகளைக் கடிப்பதை விட்டுவிட்டு முன்கூட்டியே நிழல் தேடிச் செல்லத் தொடங்கின. கோடையில் அருகிவிட்ட பசும்புல்லைக் காய்ந்து நின்ற பெருஞ்செடிகளுக்கடியில் தேடி ஆடுகள் மண்டியிட்டு மேய்வதில் முனைப்பாக இருந்தன. ஆனால், குண்டாவிற்கும் தோழர்களுக்கும் வெயிலின் கொடுமை அவ்வளவாகத் தட்டுப்படவில்லை. நாள்தோறும் விளையாடுவது அவர்களுக்கு எழுச்சியூட்டுவதாக இருந்தது. மதிய உணவிற்குப் பின் புடைத்திருந்த வயிறுகளுடன் மல்யுத்தத்தில் ஈடுபடுவதிலும் துரத்திப் பிடிக்க ஓடுவதிலும் சில சமயங்களில் ஒருவரைப் பார்த்து ஒருவர் கேலிக் கூச்சல் எழுப்புவதிலும் முகத்தைக் கோணிக் காட்டுவதிலும் பொழுதைக் கழித்தனர். அதே நேரத்தில் ஆடுகளின் மீது கண்களை ஓட்டுவதிலும் தவறவில்லை. தடிமனான தண்டுகளைக் கொண்டு போர் விளையாட்டில் ஈடுபட்டனர். ஒருவரை ஒருவர் அடிப்பதும் குத்துவதுமாக போர் முனைப்புடன் நிகழ்ந்தது. சமாதானத்தின் அடையாளமாக ஒரு பிடி புல்லைக் கையிலெடுத்தால் எதிரியை விட்டு விடுவர். பிறகு, தமது போர் வெறியை தாம் கொன்ற முயல்களின் வயிற்றிலிருந்தவற்றைக் கொண்டு பாதங்களைத் தேய்த்துத் தணித்துக் கொண்டனர். உண்மையான வீரர்கள் ஆட்டின் இரைப்பையைக் கொண்டு தமது பாதங்களைத் தேய்த்தனர் என்று பாட்டிகள் சொன்ன கதைகளில் கேட்டிருந்தனர்.

சில நேரங்களில், குண்டாவும் தோழர்களும் தம்முடைய வேட்டை நாய்களுடன்

கும்மாளம் போட்டனர். பல நூற்றாண்டுகளாக மண்டிங்கர் இனத்தவர் ஆப்பிரிக்காவிலேயே வேட்டையாடுவதற்கும் காவல் காப்பதற்கும் மிகச் சிறந்தவை எனக் கருதப்பட்ட அந்த வகை நாய்களை வளர்த்து வந்தனர். அந்த நாய்களின் குரைப்பொலியால் எத்தனையோ ஆடுகளும் மாடுகளும் வெறிகொண்ட கழுதைப்புலிகளிடமிருந்து இருண்ட இரவுப் பொழுதுகளில் காப்பாற்றப்பட்டன. ஆனால், வேட்டை விளையாட்டில் குண்டாவும் அவனுடைய தோழர்களும் ஈடுபட்ட போது அவர்களுடைய கற்பனைக்கு கழுதைப்புலி வேட்டை விலங்காகப் பட்டதில்லை. காண்டா மிருகம், யானை, சிறுத்தை, சிங்கம் போன்ற வேட்டை விலங்குகளாகக் கற்பனை செய்து கொண்டு சூரிய வெப்பம் தாளாமல் காய்ந்து நின்ற உயரமான புல்புதருக்குள் மறைந்து மண்டியிட்டபடி வீறுநடை போட்டனர்.

அவ்வப்போது, புல்லையும் நிழலையும் தேடி சுற்றுப்புறங்களில் அலைகின்ற ஆடுகளைத் தொடர்ந்து செல்லும் போது யாரேனும் ஒரு பொடியன் தனது கூட்டாளிகளிடமிருந்து பிரிந்து செல்ல நேர்ந்ததுண்டு. தொடக்கத்தில் தனக்கு நேர்ந்த அப்படிப்பட்ட தருணங்களில், தன்னால் இயன்ற அளவு வேகமாக ஆடுகளை ஒன்று திரட்டிக் கொண்டு சிடாஃபா இருந்த இடத்திற்கு அண்மையில் செல்ல முற்பட்டான். ஆனால், விரைவிலேயே அத்தகைய தருணங்களை விரும்பத் தொடங்கிவிட்டான். தனிமையில் அவனால் தன்விருப்பப்படி மிகப் பெரிய விலங்குகளை வேட்டையாடுவது போல பகற்கனவு காண வாய்ப்புக் கிட்டியது. சாதாரணமாக மான், சிறுத்தை, சிங்கம் கூட இல்லை; அனைத்து விலங்குகளிலும் பெரிதும் பயங்கரமானதாக அஞ்சப்பட்ட வெறிபிடித்த காட்டெருமையை வேட்டையாடியதாகப் பகற்கனவு கண்டான்.

அந்தப் பகுதி முழுவதும் பயங்கரமாகப் பீதியை ஏற்படுத்திக் கொண்டிருந்த காட்டெருமை ஒன்றை அவன் துரத்திச் சென்றான். அந்தக் கொடூர விலங்கைக் கொல்வதற்காக வேட்டைக்காரர்கள் பலர் ஏற்கனவே அனுப்பப்பட்டனர். அவர்களால் அதனைக் காயப்படுத்த மட்டுமே முடிந்தது. தன்னுடைய கொடிய கொம்புகளால் அவர்களை ஒவ்வொருவராகக் குத்திக் கிழித்து விட்டது. காயம் ஏற்பட்டதால் அதனுடைய ரத்தவெறி மேலும் அதிகரித்தது. கிராமத்திற்கு வெளியே வயல்களில் வேலையில் ஈடுபட்டிருந்த உழவர்களைத் தாக்கிக் கொன்றது. மாவீரன் குண்டா கின்டே நடுக்காட்டில் தன்னுடைய உடல் ஆற்றலைப் பெருக்கிக் கொள்வதற்காக மலைத்தேன் பருக எண்ணி தேன்கூட்டிற்குப் புகை போட்டு தேனீக்களைத் துரத்தியடித்துக் கொண்டிருந்தான். தான் பிறந்த கிராம மக்களைக் காப்பாற்றும்படி மன்றாடி தொலைவில் முரசறைந்து அறிவித்த ஓசை அவனுடைய காதுகளை எட்டியது. அவனால் மறுக்க முடியவில்லை.

காலடியில் மிதிபட்ட காய்ந்த புல்லின் இதழ் கூட ஓசை எழுப்பவில்லை. அவ்வளவு பதனமாக நகர்ந்து காட்டெருமை சென்றதற்கான சுவடுகளைத் தேடினான். தொன்மைக் கால வேட்டைக்கார மாவீரர்களுக்கு கொடிய விலங்குகள் செல்லக் கூடிய வழியைத் தெரிவித்த ஆறாவது அறிவைப் பயன்படுத்தினான். அவன் தேடிய வழித்தடங்கள் அவனுக்குப் புலப்பட்டன. அவ்வளவு பெரிய

பாதச்சுவடுகளை அவன் அதற்கு முன் பார்த்ததே இல்லை. அமைதியாகப் பின்தொடர்ந்தான். புத்தம் புதிய சாணத்தின் நெடி அவனுடைய மூக்கைத் துளைத்தது. தன்னுடைய நுணுக்கங்கள் திறமை அனைத்தையும் பயன்படுத்தி மாவீரன் கின்டே அந்தப் பூதாகரமான காட்டெருமையைக் கண்டு பிடித்து விட்டான். அடர்ந்து உயரமாக வளர்ந்திருந்த புல்புதர்களுக்கிடையில் இருந்த காட்டெருமையை சாதாரணமானவர்கள் கண்டுபிடிக்க முடியாது.

வில்லை வளைத்து, நாணைப் பின்னோக்கி இழுத்துக் காட்டெருமையைத் துல்லியமாகக் குறிபார்த்தான். விர்ரென்று விரைந்த அம்பு காட்டெருமையின் மார்புப் பகுதியில் ஆழப்பாய்ந்தது. படுகாயமடைந்த எருமை மேலும் ஆவேசமடைந்தது. அங்குமிங்குமாகத் தாவிப் பாய்ந்தது. அதனுடைய தாக்குதல் முயற்சிகள் கின்டேயிடம் பலிக்கவில்லை. தன்னைத் தாக்குவதற்காக விரைந்தோடி வந்த எருமையைக் கடைசிக் கணத்தில் எய்த அம்பு வீழ்த்தி விட்டது. மலை போன்ற காட்டெருமை சாய்ந்தது.

கின்டே சீழ்க்கை ஒலி திக்கித்து நடுங்கியபடி மறைந்திருந்த ஏனைய வேட்டைக்காரர்களை வரவழைத்தது. அவர்களால் முடியாத தீரச்செயலை குண்டா கின்டே சாதித்து விட்டான். அதனுடைய தோலையும் கொம்புகளையும் வெட்டி எடுக்கும்படியும் உடலைக் கிராமத்திற்குக் கொண்டு செல்வதற்காக மேலும் சில ஆட்களை அழைக்கும்படியும் ஆணையிட்டான். குதூகலம் பொங்க பெருங்கூச்சல் எழுப்பிய மக்கள் கிராமத்தின் நுழைவாயிலிலிருந்து உள்ளே நடைபாதையெங்கும் தோல்விரித்து வரவேற்கத் தவறவில்லை. கின்டேயின் பாதங்களில் தூசுபடியக் கூடாதல்லவா! ஓங்கி அறையப்பட்ட முரசின் ஒலி உரக்கப் பேசியது, “மாவீரன் கின்டே!” தலைகளுக்கு மேலே இலைகள் நிறைந்த சிறு கிளைகளை ஆட்டியபடி குழந்தைகள் கூவினர், “மாவீரன் கின்டே!” முண்டியடித்துக் கொண்டு மாவீரன் கின்டேயைத் தொடுவதற்கு மக்கள் எத்தனித்தனர். அவனுடைய வல்லமையில் கிஞ்சித்தேனும் அவர்களுக்கும் ஒட்டிக் கொள்ளும் அல்லவா! பூதாகரமான காட்டெருமையின் உடலைச்சுற்றி நடனமாடிய சிறுவர்கள் நீண்ட கழிகளைப் பற்றியவாறும் கூச்சல் எழுப்பியும் காட்டெருமை கொல்லப்பட்ட காட்சியை நடித்துக் காட்டுவதற்கு முற்பட்டனர்.

தற்பொழுது கூட்டத்திலிருந்து கட்டுறுதியும் நளினமும் வாய்ந்த ஜுஃப்பூர் கிராமத்திலேயே, ஏன்? காம்பியா நாட்டிலேயே கவின்மிகு கறுப்பழகி ஒருத்தி அவனை நெருங்கி மண்டியிட்டு குடுக்கை ஒன்றில் குளிர்ந்த நீரை நீட்டினாள். தாகமறியாத கின்டே கைவிரல்களை மட்டும் நனைத்துக் கொண்டான். ஆனந்தக் கண்ணீர் ஊற்றெடுத்தோட அவள் அந்த நீரைப் பருகினாள். தன்னெஞ்செங்கும் நிறைந்திருந்த காதலை அனைவருக்கும் மத்தியில் வெளிப்படுத்தினாள்.

முண்டியடித்து நெருக்கி நின்றிருந்த கூட்டம் விலகி வழிவிட்டது. உடலெங்கும் சுருக்கங்களோடும் முழுவதும் நரைத்த தலையுடனும் பின்டாவும் ஓமோரோவும் கைத்தடிகளை ஊன்றித் தள்ளாடியபடி அவனை நெருங்கினர். முதுமை எய்திவிட்ட தனது தாயை கின்டே ஆரத் தழுவினான். கண்களில் பெருமை மின்ன ஓமோரோ பார்த்துக்கொண்டிருந்தார். ஊர்மக்கள் “கின்டே! கின்டே!!” என்று

உரக்க ஒலித்துப் பாராட்டுத் தெரிவித்தனர். அவர்களுடைய பாராட்டொலியை ஆமோதிக்கும் விதமாக நாய்கள் குரைத்தன.

அவனுடைய வேட்டை நாய் கூட குரைத்தது போல் கேட்டதே! “கின்டே! கின்டே!!'' சிடாஃபா கூட நெடு நேரமாகக் கூவிக்கொண்டிருந்தான் போலிருக்கிறதே!! யாருடைய பண்ணையையோ நோக்கி விரைந்து கொண்டிருந்த தனது மந்தையைச் சரியான நேரத்தில் விழித்துக் கொண்ட குண்டா கவனித்தான். சிடாஃபாவும் அவனுடைய மற்ற தோழர்களும் நாய்களும் கூட பயிர்களுக்குச் சேதம் ஏற்படுவதற்கு முன்னர் ஆட்டு மந்தையை மீட்பதற்கு உதவினர். குண்டா ரொம்பவே வெட்கப்பட்டான். அடுத்த ஒரு மாதம் முழுவதும் ஏனோ அவனால் பகற்கனவில் லயிக்கவே முடியவில்லை!

# 14

எப்பொழுதும் போல சூரியன் சுட்டெரித்தது. நெடிய ஐந்து மாத வறண்ட பருவம் அப்பொழுது தான் தொடங்கியிருந்தது. வெப்பப் பூதங்கள் மங்கலாக ஒளிர்ந்தன; தூரத்துப் பொருட்கள் உருப்பெருக்கமடைந்து காட்சியளித்தன. குடிசைகளுக்குள் இருந்த போதும் வயல்வெளிகளில் வேலை செய்ததைப் போல வேர்த்துக் கொட்டியது. ஆடு மேய்ப்பதற்காக குண்டா காலையில் புறப்பட்ட போது அவனுடைய பாதங்களில் செம்பனை எண்ணெயைத் தேய்த்துக் கொள்ளும்படி பின்டா வற்புறுத்தினாள். ஆனாலும், மாலையில் புல்வெளிகளிலிருந்து திரும்பிய போது அவனுடைய பாதங்கள் உலர்ந்திருந்தன; பாதங்கள் வறண்டு நிலத்தின் சூட்டால் வெடித்திருந்தன. வீடு திரும்பிய போது சில பொடியன்களுக்குப் பாதங்களில் இரத்தம் வழிந்தது. இருந்த போதிலும் அதைப் பற்றியெல்லாம் சற்றும் குறைபட்டுக் கொள்ளாமல் தமது தந்தையரைப் போலவே மறுநாளும் தமது பணியைத் தொடர்ந்தனர். கிராமத்தைக் காட்டிலும் கூடுதலாக வறண்ட புல்வெளிகளில் வெப்பம் அனலாகத் தகித்தது.

சூரியன் உச்சியை அடைந்த போது பயல்கள், நாய்களுடனும் ஆடுகளுடனும் புதர் நிழலில் மூச்சிரைக்க சொரத்தின்றி அமர்ந்திருந்தனர். சிறு விலங்குகளை

வேட்டையாடி நெருப்பில் சுட்டு மதிய உணவு உண்ட காலம் மலையேறிவிட்டது. களைத்துப் போயிருந்தனர். பெரும்பாலும் வெறுமனே அரட்டை அடிப்பதிலும் ஓய்வாக அமர்ந்திருப்பதிலும் தம்மை உற்சாகப்படுத்திக் கொள்ள முயன்றனர். எப்படியோ வழக்கமாக ஆடுமேய்ப்பதிலிருந்த சாகசங்கள் தற்பொழுது தென்படவில்லை.

நாள்தோறும் அவர்கள் திரட்டிச் சென்ற விறகுகள் இரவில் அவர்களை வெம்மையாக வைத்துக் கொள்ளத் தேவைப்பட்டதாகத் தெரியவில்லை. ஆனாலும், பொழுது சாய்ந்தவுடன், குளிர்ந்த காற்று வீசத் தொடங்கிவிட்டது. பகலில் வெப்பம் அளவுக்கதிகமாக இருந்ததைப் போலவே இரவில் குளிரும் அதிகரித்தது. முன்னிரவு வேளைகளில் உணவுக்குப் பிறகு, ஜுஃப்பூர் கிராம மக்கள் எரிந்து கொண்டிருந்த நெருப்பைச் சுற்றிலும் குந்தினர். ஒமோரோ வயதை ஒத்தவர்கள் ஓரிடத்தில் எரிந்த நெருப்பைச் சுற்றிக் குத்தவைத்தனர். மற்றொரு இடத்தில் எரிந்த நெருப்பைச் சுற்றி வயசாளிகள் அமர்ந்தனர். பெண்டிரும் கன்னியரும் மற்றொரு இடத்திலும் சிறு பிள்ளைகளுக்குக் கதை சொல்லும் பாட்டிமார் வேறொரு இடத்திலுமாக நெருப்பைச் சுற்றி அமர்ந்தனர்.

குண்டாவும் அவனுடைய தோழர்களும் லேமின் போன்ற அம்மணப் பயல்களுடன் உட்கார்ந்தனர். தம்மிலும் பொடியன்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுகிற அளவுக்குத் தள்ளியும் பாட்டி சொன்ன கதை காதில் விழுமளவுக்கு நெருக்கமாகவும் இருந்தனர். பாட்டிகளின் கதை இன்னமும் அவர்களைக் கவர்ந்தது. குண்டாவும் தோழர்களும் மற்ற நெருப்பிடங்களில் பேசப்பட்டதையும் ஒற்றுக் கேட்டனர். உரையாடல்கள் பெரும்பாலும் கோடையின் வெப்பத்தைப் பற்றியே சுழன்றன. முந்தைய காலங்களில் வெப்பம் தாளாமல் பயிர் பச்சைகள் மடிந்ததையும் சருகாகக் காய்ந்து போன தவச, தானியப் பயிர்கள் எரிந்து சாம்பலானதையும் கிணறுகள் வற்றி வறண்டதையும் மக்கள் சாரமற்ற சடலங்களாக ஒட்டி உலர்ந்து போனதையும் முதியவர்கள் கதைத்தனர். அந்த வருடக் கோடை ரொம்பவே மோசம் என்றவர்கள் ஆனாலும் அவர்களுடைய நினைவுக்கு எட்டிய பழங்காலக் கோடையைக் காட்டிலும் மோசமானது அல்ல என்றனர். 'கிழடுகளுக்கு எப்போதும் கெட்டவை தான் ஞாபகம் இருக்கும் போல!' குண்டா மனத்திற்குள் எரிச்சலுற்றான்.

பின்னர், திடீரென்று ஒரு நாள் பகலில் வெப்பம் முன்னெப்பொழுதைக் காட்டிலும் அனலாகக் கொதித்தது. நெருப்புப் பிழம்பை மூக்கு வழி இழுத்தது போல தகித்தது. அன்றிரவு மக்கள் போர்வைக்குள் நடுங்கியபடி சுருண்டு கிடந்தனர். குளிர் எலும்பைத் துளைத்து ஊடுருவியது. மீண்டும் மறுநாள் காலையில் மக்கள் முகத்தைத் தேய்த்து விட்டு மூச்சை முழுமையாக உள்ளிழுக்கத் தவித்தனர். அன்று மதியம் வறண்ட காற்று வீசத் தொடங்கியது. அது பலமாகவோ சுழற்காற்றாகவோ வீசவில்லை. அப்படியிருந்தால் கூட பரவாயில்லை! மெதுவாக, ஒரே சீராக வீசிய அக்காற்று வறண்ட காற்று; புழுதி கலந்தது. பகலும் இரவும் விடாது தொடர்ந்து பதினைந்து நாட்கள் நீடித்தது. ஒவ்வொரு முறை அந்த வகைக் காற்று வீசிய போதும் மக்களுடைய நரம்பைப் பாதித்தது. பெற்றோர்கள் தமது பிள்ளைகள்

மீது எரிந்து விழுந்தனர். காரணமின்றி அடித்துத் துன்புறுத்தினர். மண்டிங்கர் இனத்தவர் தமக்குள் சண்டையிட்டுக் கொள்வது மிகவும் அரிது. ஆனால், இப்போதெல்லாம் பெரியவர்களுக்குள் சண்டை சச்சரவு இல்லாமல் ஒரு மணி நேரம் கூடக் கழிந்ததில்லை. குறிப்பாக, ஓமோரோ, பின்டா போன்ற கணவன் மனைவியரிடையே ஓயாத சண்டை. குடிசைக்கு வெளியில் கூடி நின்று ஊர் மக்கள் வேடிக்கை பார்க்க உள்ளே உக்கிரமான சண்டை நடந்தது. மனைவியின் பெற்றோர் அங்கே விரைந்தனர். சண்டை மேலும் வலுத்தது. தையற் கூடைகள், சமையல் பாண்டங்கள், குடுக்கைகள், துணிமணிகள் வெளியே வீசியெறியப்பட்டன. சற்று நேரத்தில் மனைவி அவளுடைய தாயுடன் உடமைகளை அள்ளிக் கொண்டு பிறந்த வீடு சென்றாள்.

இரண்டு மாதங்களுக்குப் பிறகு, தொடங்கியது போலவே வறண்ட காற்றுத் திடீரென்று நின்றது. ஒரு நாளுக்குள் வளிமண்டலம் அமைதியடைந்தது. வானம் பளிச்சென்று தெளிவடைந்தது. ஒரு இரவுப் பொழுதுக்குள் மனைவிமார் அணி அணியாக தம்முடைய கணவன்மார் குடிசைகளுக்கு அரவில்லாமல் திரும்பினர். சம்மந்திமார்கள் சிறு சிறு பரிசுப்பொருட்களைப் பரிமாறிக் கொண்டனர். கிராமம் முழுவதும் நிலவிய பிணக்குகள் சமாதானமடைந்தன. ஆனாலும், நீண்ட நெடிய ஐந்து மாத வறண்ட பருவத்தில் இன்னமும் பாதியைக் கடக்க வேண்டியிருந்தது. அடுக்குப் பானைகளில் தவச, தானியங்கள் நிறைந்திருந்த போதிலும், தாய்மார்கள் சமையல் செய்த அளவு குறைவாகவே இருந்தது. பேராவலுடன் ஒரு பிடி பிடிக்கின்ற குழந்தைகள் உட்பட யாருக்குமே சரியாகச் சாப்பிடத் தோன்றவில்லை. சூரியனின் கொடூரக் கரங்கள் வாட்டி வதைத்ததால் அனைவருமே வலுக்குன்றியிருந்தனர். மக்கள் தமக்குள் பேசிக் கொள்வது கூட குறைந்து போயிற்று. செய்தே தீர வேண்டி பணிகளை மட்டும் நிறைவேற்றியவாறு நாட்களைக் கடத்தினர்.

கிராமத்தின் முரட்டுக் காளைகளுடைய முதுகுகளில் கடிவண்டுகள் முட்டையிட்டிருந்ததால், தோலின் அப்பகுதிகள் புண்பட்டுப் பிளந்திருந்தன. குவாக் குவாக் என்று வழக்கமாகக் கிராமத்தைச் சுற்றித் திரிந்த கோழிகள் கூட அமைதியாக சுவர் ஓரங்களில் முடங்கிக் கிடந்தன. அலகுகள் விரித்தபடி சிறகால் வீசி ஆசுவாசப்படுத்திக் கொண்டன. குரங்குகள் கூட தட்டுப்படவில்லை. கிரீச் ஒலியைக் கேட்டு நாட்கள் பல ஆகிவிட்டன. அடர்ந்த நிழல் பகுதியைத் தேடிக் காட்டிற்குள் சென்றுவிட்டன போலும்! கொளுத்திய வெயிலில், ஆடுகள் மேய்வது கூடக் குறைந்து, மெலிந்து, பதட்டத்துடன் திரிந்ததை குண்டா கவனித்தான்.

சுட்டெரித்த வெயில் காரணமாகவா, அல்லது பொடியன்கள் வளர்ந்து விட்டார்களா என்று தெரியவில்லை! ஏதோ காரணத்தால், கடந்த ஆறு மாத காலமாக ஒன்றாகச் சேர்ந்து புல்வெளிகளில் ஆடுகளை மேய்ப்பதும் கும்மாளம் போடுவதுமாக இருந்த குண்டாவும் அவனுடைய தோழர்களும் தத்தமது மந்தைகளை ஓட்டிக் கொண்டு தனித்தனியே மேய்ச்சல் பகுதிகளைத் தேடிச் செல்லத் தொடங்கிவிட்டனர். அதற்கு முன்னர் சற்று நேரம் கூட மற்றவர்களிடமிருந்து முற்றாக ஒதுங்கி இருந்ததில்லை என்பதை குண்டா உணருவதற்குள் அவ்வாறு

நடந்து பல நாட்கள் ஆகிவிட்டன. சூரியன் வறுத்தெடுத்துக் கொண்டிருந்த புல்வெளியின் அமைதியினூடே தூரத்தில் ஆங்காங்கே சிதறி மேய்ந்து கொண்டிருந்த மந்தைகளையும் பயல்களையும் நோக்கிப் பார்வையை ஓட்டினான். அதற்கு அப்பால் வயல்வெளிகளில் உழவர்கள் அறுவடைக்குப் பின் மண்டிக் கிடந்த களைகளை வெட்டிக் குவித்துக் கொண்டிருந்தனர். உயரமாகக் குவிக்கப்பட்டிருந்த களைக் குவியல்கள் வெப்பத்தால் தள்ளாடி மினுக்கியது போல் தோன்றின.

நெற்றி வியர்வையைத் துடைத்துக் கொண்டிருந்த குண்டாவின் சிந்தனை மொட்டு அவிழ்ந்தது. அவனுடைய மக்கள் எப்பொழுதும் ஏதேனுமொரு வகையில் துன்ப, துயரங்களுக்கோ, இன்னல், இடர்ப்பாடுகளுக்கோ, அல்லல், அலைக்கழிப்புகளுக்கோ, அச்சுறுத்தல்களுக்கோ அல்லது உயிருக்கே உலை வைக்கக் கூடிய பயங்கரங்களுக்கோ ஆளாகிக் கொண்டே இருந்தனர். சுட்டெரித்த பகல் பொழுதுகளையும் அவற்றைத் தொடர்ந்து நடுக்கிய கடுங்குளிர் இரவுகளையும் எண்ணிப் பார்த்தான். அடுத்துத் தொடர்ந்த மழைக்காலம். கிராமத்துத் தெருக்களையெல்லாம் சேறும் சகதியுமாக்கிக் கடைசியில் வெள்ளத்தில் மூழ்கடித்தது. நடந்து சென்ற பாதைகளிலெல்லாம் பரிசல்களில் செல்ல நேர்ந்தது. வெயிலும் வேண்டும் மழையும் வேண்டும். அதற்காக இப்படியா? மழை பொழிந்தால் வெள்ளக் காடு! இல்லாவிட்டால் ஒரே வறட்சி! பகலில் வெயில் கொளுத்தினால் அனல் காடு!! இரவு வேளைகளில் எலும்பைத் துளைத்த கடுங்குளிரால் பெரும் பாடு!! ஆடுகள் நன்கு கொழுத்திருந்த போதிலும், மரங்கள் பூத்துக் குலுங்கி, காய்த்துக் கனிந்த போதிலும், கடந்த அறுவடைக்கு முன்பு குடும்பங்களில் அடுக்குப் பானைகள் காலியாகிப் பட்டினிக் காலம் வந்து சேர்ந்தது. மக்கள் பசியால் துடிதுடித்தனர்; சிலர் மாண்டு போயினர். அவனுடைய அன்புக்குரிய பாட்டி ஆயிசா நினைவுக்கு வந்தாள்.

அறுவடைக் காலம் குதூகலமாக இருந்தது; அடுத்தது அறுவடைத் திருவிழா! ஆனால், அனைத்தும் விரைவிலேயே நிறைவுற்றன. நீண்ட நெடிய வறண்ட காலம் தொற்றிக் கொண்டது; கூடவே வறண்ட காற்று வேறு! அம்மா எதற்கெடுத்தாலும் அவனையும் தம்பி லேமினையும் காரணமில்லாமலே அடித்தாள். பெரிய தொல்லை என்று எண்ணி வந்த தம்பிக்காகக் கூட அவன் வருத்தப்பட்டான். கிராமத்தை நோக்கி ஆட்டு மந்தையை ஓட்டிக் கொண்டிருக்கையில், குண்டாவிற்குச் சொல்லப்பட்டிருந்த அவனுடைய மூதாதையர் வாழ்ந்த கதைகள் நிழலாடின. அவர்களும் பேரச்சமூட்டியவையும் பெரும்பீதி ஏற்படுத்தியவையுமான சூழல்களில் தான் வாழ்ந்தனர். நினைவுக்கு எட்டிய காலத்திலிருந்து மக்களுடைய வாழ்க்கை கடினமாகத் தான் இருந்து வந்துள்ளது! எப்பொழுதுமே அப்படித்தான் இருக்கும் போலும்!

நாள்தோறும் மாலைப் பொழுதுகளில் ஹஜரத் மழை வேண்டித் தொழுகைகள் நடத்தினார். அதன் பின்னர் ஒரு நாள் ஊதற் காற்று புழுதியைக் கிளப்பிய போது மக்கள் மனத்தில் எழுச்சி ஏற்பட்டது. மழையின் அறிகுறியாகக் காற்றுத் தென்பட்டது. அடுத்த நாள் காலையில் உழவர்கள் தத்தமது வயல்களில் வெட்டிக் காயப் போட்டிருந்த களைக் குவியல்களுக்கு நெருப்பு மூட்டினர்.

வயல்வெளியெங்கும் அடர்ந்த கரும்புகை மண்டியது. தாளமுடியாத வெப்பத்தால் வேர்த்துக் கொட்டியபடி மக்கள் கும்மாளம் போட்டுக் குதூகலித்தனர். அம்மணக் குழந்தைகள் ஒருவரோடொருவர் போட்டி போட்டு முண்டியடித்து ஓடி சிதறிய சாம்பல் துண்டுகளை எடுப்பதற்கு முற்பட்டனர்.

அடுத்த நாள் வீசிய மெல்லிய காற்று எரிந்து தணிந்திருந்த சாம்பலை வயலெங்கும் தூவி அடுத்த சாகுபடிக்குத் தேவையான உரமூட்டியது. தற்பொழுது உழவர்கள் மண்கொத்தியைக் கொண்டு நிலங்களில் பார் பிடிக்கத் தொடங்கி விட்டனர். விதைகளை ஊன்றுவதற்கு ஆயத்தமாக வேண்டுமல்லவா! முடிவற்ற பருவச் சுழற்சியில் குண்டாவும் தன்னுடைய வாழ்க்கையில் ஏழாவது நடவுப் பருவத்தை எட்டிவிட்டான்.

# 15

இரண்டு மழைக் காலங்கள் கடந்து விட்டன. பின்டாவின் வயிறு மீண்டும் புடைத்திருந்தது. இப்பொழுதெல்லாம் வழக்கத்தைக் காட்டிலும் கூடுதலாக எரிச்சலடைந்தாள். அவளுடைய மகன்கள் இருவரையும் அடிப்பதற்கு கை விரைந்தது. ஆடுகளை மேய்க்கச் சென்று விட்டதால் சில மணி நேரமாவது அவளிடமிருந்து தப்பித்துக் கொள்ள வாய்ப்புக் கிடைத்ததென்று மகிழ்ந்தான். மாலை வேளைகளில் குடிசைக்குத் திரும்பிய பின் தன்னுடைய தம்பிக்காக வருத்தப்பட்டான். லேமினுக்கு குறும்பு செய்கிற வயது. அதனால் அம்மாவிடம் அடிக்கடி அடி வாங்கினான். அவனால் தனியே வெளியே சென்று விளையாடவும் முடியவில்லை. ஆகவே, ஒரு நாள் குடிசைக்குத் திரும்பிய போது தம்பி அழுது கொண்டிருந்ததைக் கண்டவன், லேமினை வெளியில் அழைத்துச் செல்ல அம்மாவிடம் அனுமதி கேட்டான். அவளும் சம்மதித்தாள். அண்ணன் காட்டிய பரிவைக் கண்டு லேமினுக்கு மகிழ்ச்சியை அடக்க முடியவில்லை. ஆனால், குண்டா வழக்கமான வெறுப்புடனே, அம்மாவுடைய காதுக்கு எட்டாத தூரம் சென்றவுடன் ஒரு உதை விட்டுக் குத்தினான். அதிர்ந்து போன லேமின் நாய்க்குட்டி போல அண்ணனுக்குப் பின்னால் அடக்கமாகச் சென்றான்.

பிற்பகல் தோறும் அண்ணன் வந்து தன்னை வெளியே அழைத்துச் செல்வான் என்கிற ஆவலுடன் லேமின் வாசலில் காத்திருந்தான். நாள்தோறும் குண்டாவும் அவ்வாறே செய்தான். ஆனால், விருப்பப்பட்டு தம்பியை அழைத்துச் செல்லவில்லை. அவர்கள் இருவரும் வெளியில் சென்ற வேளைகளில் அம்மா அவர்களுடைய தொந்தரவு இல்லாமல் ஓய்வெடுத்ததைக் கவனித்தான். இனிமேல் அவனைக் கூட்டிக் கொண்டு வெளியில் செல்லாவிட்டால் தனக்கு அடி விழுமோ என்று பயந்தான். தன்னுடைய முதுகில் நதியிலிருந்து தப்பி வந்த பூதாகரமான அட்டை ஒட்டிக் கொண்டது போல் லேமினைச் சுமந்து சென்ற போது உணர்ந்தான். ஆனால், விரைவிலேயே தன்னுடைய வயதை ஒத்த பையன்கள் அனைவரும் தமது முதுகுகளிலும் தம்பிமார்களைச் சுமந்து கொண்டிருந்ததைக் கவனித்தான். அவர்கள் தனியே விளையாடிய போதிலும் தம்முடைய அண்ணன்மார் மீது பார்வையை ஓட விட்டுக் கொண்டிருந்தனர். குண்டாவும் தோழர்களும் அவர்களைக் கண்டுகொள்ளவே இல்லை. சில சமயங்களில் பெரிய பையன்கள் அம்மணப் பொடியன்கள் மீது சாய்ந்தனர். அவர்கள் பிடிக்க முடியாமல் தவித்ததைக் கண்டு நகைத்தனர். அண்ணன்மார்கள் மரங்களின் மீது ஏறினர். பொடியன்கள் அவர்களைப் பின்தொடர்ந்து ஏறுவதற்கு முயன்று முடியாமல் சறுக்கிக் கீழே விழுந்தனர். அதைக் கண்ட போது பெரிய பயல்களுக்குக் குதூகலம் தாங்க முடியவில்லை. அப்படிப்பட்ட கேளிக்கைகளுக்காவது அவர்கள் தம்பிமார்களை நாள்தோறும் வெளியில் தூக்கிச் சென்று விளையாடினர்.

ஒரு சில நேரங்களில் லேமின் தனித்திருந்த போது குண்டா தம்பி மீது ஓரளவு பாசம் காட்டினான். விரல்களுக்கிடையே மிகச்சிறிய விதை ஒன்றைப் பற்றிக் கொண்டு தம்பிக்கு விளக்கினான். ஜுஃப்யூர் கிராமத்தின் மிகப்பெரிய இலவ மரங்களெல்லாம் அவ்வளவு சிறிய விதைகளிலிருந்து தான் வளருகின்றன. தேனீ ஒன்றைப் பிடித்து அதன் கொடுக்கைப் பற்றி விளக்கினான். அதனைத் திருப்பிப் போட்டு பூக்களிலிருந்து தேன் எடுப்பது பற்றியும் உயரமான மரங்களின் உச்சியில் கட்டப்பட்ட தேன்கூடுகளில் தேனைச் சேகரிப்பது பற்றியும் விவரித்தான். லேமின் ஏகப்பட்ட கேள்விகளை எழுப்பினான். குண்டா அனைத்திற்கும் பொறுமையாகப் பதிலளித்தான். அண்ணனுக்கு எல்லாம் தெரியும் என்கிற உணர்வு லேமினுக்கு ஏற்பட்டது. அதனைக் கண்ட குண்டா தன்னுடைய எட்டு வயதையும் மீறிய பெரியவனாகி விட்டதாக நினைத்தான். தொல்லை தரும் பிள்ளைப் பூச்சி என்று தம்பியைப் பற்றி அவன் கொண்டிருந்த எண்ணம் மெல்ல மெல்ல மாறியது.

குண்டா அத்தகைய உணர்வுகளை வெளிக்காட்டிக் கொண்டதில்லை. ஆனாலும், பிற்பகல் வேளைகளில் வீடு திரும்பிய போது, தம்பி தன்னை எதிர்பார்த்துக் காத்து நிற்கிறானா என்று அவன் எதிர்பார்க்கத் தொடங்கி விட்டான். அவர்கள் இருவரும் குடிசையை விட்டு வெளியேறுவதைக் கண்டு பின்டாவுக்கும் மகிழ்ச்சி தான் என்பதை உணர்ந்து கொண்டான். அவள் தன்னுடைய இளைய மகனைக் கண்டித்த போதெல்லாம் அவனிடம் அடிக்கடி சொன்னதுண்டு, "அண்ணனைப் பார்த்து நல்லபடி நடந்து கொள்!" ஆனால், அடுத்த கணமே குண்டாவையும் ஏதேனும் காரணத்திற்காக அடித்தாள். ஆனால், முன்பு போல அடிக்கடி அடிப்பதில்லை. "சொன்னபடி கேட்கா விட்டால் அண்ணனோட அனுப்ப

மாட்டேன்டா!" என்று கூட அவனை மிரட்டினாள். அதனைக் கேட்ட லேமின் அன்று பகல் முழுவதும் அடங்கியிருந்தான்.

இப்பொழுதெல்லாம் குண்டாவும் லேமினும் கைகோர்த்துக் கொண்டு மிகவும் அடக்க, ஒடுக்கமாக குடிசையை விட்டு வெளியேறினர். ஆனால், தெருவுக்கு வந்த பிறகு, குண்டா கூச்சலிட்டுக்கொண்டு ஓட்டம் பிடித்தான். லேமின் பின்தொடர்ந்து ஓடினான். விளையாடுமிடத்தில் லேமின் அம்மணப் பயல்களுடனும் குண்டா தனது தோழர்களுடனும் இணைந்து கொண்டனர். மதிய வேளையில் கும்மாளம் போட்டுக் கொண்டிருந்த போது, குண்டாவுடன் ஆடுமேய்த்த பயல் ஒருவன் லேமினைத் தாக்கினான். அவனுடைய முதுகில் ஓங்கிக் குத்திவிட்டான். உடனே அங்கு விரைந்து சென்ற குண்டா அந்தப் பயலைக் கீழே தள்ளிவிட்டுக் கோபமாகக் கத்தினான். "அவன் ஏந் தம்பிடா" அந்தப் பயலும் எதிர்த்து நின்றான். விட்டால் ரெண்டு பேரும் கட்டி உருளுவார்கள் போலிருந்தது. மற்ற பயல்கள் அவர்களைப் பிடித்துக் கொண்டனர். அழுது கொண்டிருந்த லேமினைத் தூக்கிக் கொண்டு வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த விளையாட்டுத் தோழர்களை விட்டு விசுக்கென்று புறப்பட்டு விட்டான். தன்னுடைய சக மேய்ப்பனுடன் தான் அவ்வாறு நடந்து கொண்டதை நினைத்து குண்டா மிகவும் வருத்தப்பட்டான்; எப்போதும் தான் வெறுப்புடன் ஒதுக்கி வந்த குட்டிப் பயலுக்காக மல்லுக்கட்டத் துணிந்ததை எண்ணி வியந்தான். ஆனால், அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு, லேமின் தன்னுடைய அண்ணன் செய்ததையெல்லாம் தானும் செய்து காட்ட முற்பட்டான். சில நேரங்களில் ஓமோரோவும் பின்டாவும் பார்த்துக் கொண்டிருந்த போது கூட அவனுடைய சேட்டைகளைத் தொடர்ந்தான். அவனுடைய குறும்புத்தனத்தைப் பிடிக்காதவன்போல நடித்தாலும், குண்டாவிற்கு ஓரளவு பெருமையாகத்தான் இருந்தது.

ஒரு மதிய வேளையில் தாழ்வான மரம் ஒன்றின் மீது ஏறுவதற்கு முயன்ற லேமின் கீழே விழுந்து விட்டான். குண்டா அவனுக்கு மரம் ஏறச் சொல்லிக் கொடுத்தான். பின்னொருநாள் மல்யுத்தம் கூட கற்றுக் கொடுத்தான். அவனை மற்ற விளையாட்டுத் தோழர்கள் மத்தியில் அவமானப்படுத்தியவனுக்கு வலிமையைக் காட்ட வேண்டுமல்லவா! வாயில் விரலை வைத்துச் சீழ்க்கை ஒலி எழுப்புவதற்குப் பழக்கினான். என்னதான் முயன்றாலும் லேமினால் குண்டாவைப் போல ஒலி எழுப்ப முடியவில்லை. அம்மா தேனீர் தயாரிக்கப் பயன்படுத்திய இலைகளை அடையாளம் காட்டினான். குடிசைக்குள் ஊர்ந்த சாண விட்டில்களைப் பிடித்து வெளியில் விட வேண்டும்; அவற்றைத் துன்புறுத்துதல் பாவம் என்றான். அதே போல சேவல்களின் கொண்டையைத் தொடுவது கூட அதைவிடப் பாவம்! ஆனால், எவ்வளவுதான் முயற்சியெடுத்துக் கற்றுக் கொடுத்த போதிலும் லேமினுக்கு சூரியனைப் பார்த்து நேரத்தைக் கணிக்கத் தெரியவில்லை. "நீ ரொம்பச் சின்னவன்! போகப் போகக் கற்றுக் கொள்வாய்!" சமாதானப்படுத்தினான். ஆனாலும், எளிமையான ஒன்றைக் கற்றுக் கொள்வதில் சுணக்கம் காட்டினாலோ ஓயாமல் நச்சரித்துக் கொண்டிருந்தாலோ லேமின் மீது கோபங் கொண்டு அடித்து விட்டான். உடனே, தம்பியை அடித்ததற்காக மிகவும் வருந்தினான். அவனைத் தேற்றும் விதமாகத் தன்னுடைய அங்கியை

அம்மணமாகத் திரிந்தவனுக்குக் கொடுத்து அணியச் செய்தான்.

ஜூஃப்பூர் கிராம ஆடவருக்கும் பெரிய பையன்களுக்கும் தனக்குமிடையே இருந்த இடைவெளியை நினைத்து குண்டா அடிக்கடி வருத்தப்பட்டதுண்டு. தம்பியுடன் சேர்ந்து விளையாடத் துவங்கிய பிறகு வருத்தம் சற்றே குறைந்திருந்தது. இன்னமும் பத்து வயது கூட நிரம்பாத பொடியன், அம்மாவின் குடிசையில் வசிப்பவன் என்பதை நினைவு படுத்தும் வகையில் ஏதேனும் ஒன்று நாள்தோறும் நடந்து கொண்டு தான் இருந்தது. ஆம்பிளையாவதற்கான பயிற்சி பெறுவதற்காகச் சென்றிருந்த பெரிய பையன்கள் குண்டா வயதுப் பயல்களைக் கண்டால் உறுமுவதும் உதைக்க வருவதுமாக இருந்தனர். ஒமோரோ வயதை ஒத்த ஆடவர் அவர்களை ஏதோ சகித்துக் கொள்ள வேண்டியவர்கள் என்பது போல நடத்தினர். அம்மாக்களும் கூட சரிவர மதிப்பதில்லை. புல்வெளிகளில் தனித்திருந்த போது பல முறை குண்டா கோபத்துடன் நினைத்ததுண்டு. பெரிய ஆளாக வளர்ந்த பின்னால் அம்மாவை ஒரு பொம்பிளை என்கிற விதத்தில் அவளுக்குரிய இடத்தில் வைக்க வேண்டும்! ஆயிரமிருந்தாலும் அம்மா அல்லவா! உடனே கனிவும் பாசமும் பொங்கி வழிந்தது!

அத்தகைய நிலைமைகள் அனைத்தையும் விட குண்டாவிற்கும் அவனுடைய தோழர்களுக்கும் மிகவும் கூடுதலான எரிச்சல் ஊட்டிய நிலைமை ஒன்றிருந்தது. அவர்களுடைய பருவத்தைச் சேர்ந்த, அவர்களுடன் ஆடித் திரிந்த பெண்கள் விரைவிலேயே தாங்கள் மனைவியராகும் தகுதியை அடையப் போவதை பறைசாற்றிக் கொண்டிருந்தனர். குண்டா ஆதங்கப்பட்டான். பெண்கள் பதினான்கு வயதில், அதற்கும் குறைந்த வயதில் கூட, மணம் முடித்து வைக்கப்பட்டனர். ஆண்களைப் பொருத்த வரை முப்பது வயதைக் கடந்த போதிலும் திருமணத்தைப் பற்றி நினைக்கவியலாது. பொதுவாக, ஐந்திலிருந்து பத்து வயதிற்குட்பட்ட பயல்கள் மிகுந்த புறக்கணிப்புகளுக்கு ஆளாக வேண்டியிருந்தது. அவர்களுக்கிருந்த ஒரே குதூகலம் பகல்பொழுதுகளில் ஆடுகளுடன் புல்வெளிகளில் தம் விருப்பம் போல கும்மாளமடித்தது மட்டுமே; குண்டாவுக்குப் புதிதாக லேமினுடைய உறவாடல்கள் இனிமை அளித்தது.

குண்டாவுடன் தனிமையில் நடந்து சென்ற போதெல்லாம், சில சமயங்களில் தந்தைமார் தமது மகன்களை அழைத்துச் சென்றது போல எங்கேயோ பயணம் செய்கின்ற களிப்பினை உணர்ந்தான். எப்படியோ, லேமின் தன்னை அறிவுக் களஞ்சியமாக மேல் நோக்கிப் பார்த்தபடி நடந்த போது, தன்னையும் பெரிய மனுசனாகப் பாவித்துப் பொறுப்பேற்றுக் கொள்வதற்கான வாய்ப்பு குண்டாவிற்குக் கிடைத்தது. அடியொற்றி நடந்து சென்ற லேமின் குண்டாவைக் கேள்விமேல் கேள்வி கேட்டுத் துளைத்தான்.

“இந்த உலகம் எப்படியிருக்கும்?”

“அதுவா? இது வரையில் யாருமே உலகம் முழுவதும் சுற்றி வந்ததில்லை. உலகத்தைப் பற்றி முழுமையாகப் புரிந்து கொண்டவர்கள் யாருமே இல்லை!”

“ஆசானிடமிருந்து என்ன கற்றுக் கொள்கிறாய்?”

குண்டா திருக்குரானிலிருந்து முதல் சுலோகங்களை அரேபிய மொழியில் ஒப்பித்தான். “இப்போ, நீ சொல்லு பார்க்கலாம்?” லேமின் முயன்ற போது ரொம்பவே குழம்பிப் போனான். குண்டாவிற்குத் தெரியும் அவனால் முடியாது என்று. உடனே, தந்தைப் பாசம் பொங்க “அதுக்கெல்லாம் இன்னும் கொஞ்ச நாளாகும்!” என்றான்.

“ஏன் யாருமே காகங்களைக் கொல்வதில்லை?”

“ஏனென்றால், நம்முடைய மூதாதையரின் ஆவிகள் காகங்களிடம் உள்ளன.” பிறகு, லேமினிடம் அவர்களுடைய பாட்டி ஆயிசா இறந்து போனதைப் பற்றிக் கூறினான். “நீ அப்போ ரொம்பச் சின்னக் குழந்தை! உனக்கு ஞாபகம் இருக்காது!”

“அந்த மரத்தில இருக்கிறது என்ன பறவை?”

“பருந்து!”

“அது எதைச் சாப்பிடும்?”

“எலிகள், சிறுபறவைகள்..எல்லாம்...”

“ஓ!”

தனக்கு அவ்வளவு விவரங்கள் தெரியும் என்று குண்டா ஒருபோதும் உணர்ந்ததில்லை. ஆனால், அவனுக்கே ஒன்றுமே தெரியாத ஏதேதோ பொருட்களைப் பற்றி லேமின் கேட்டுக் கொண்டே இருந்தான்.

“சூரியன் நெருப்பு மேலயா இருக்கு?” “அப்பா ஏன் நம்மோட தூங்குவது இல்லை?” அது போன்ற கேள்விகள் எழுந்த போது முறைத்துப் பார்த்து உறுமலுடன் பேசுவதை நிறுத்திக் கொண்டான். அவன் கேட்ட பல கேள்விகளுக்கு ஓமோரோ அப்படித்தானே செய்தார்?” லேமின் அதற்கு மேல் எதுவும் கேட்டதில்லை. மாண்டிங்கர் இனத்தவரின் குடும்பப் பயிற்சி பேச விரும்பாதவர்களிடம் ஒருபோதும் பேசக் கூடாது என்று கற்பித்திருந்தது. சில நேரங்களில் குண்டா ஏதோ தனிப்பட்ட சிந்தனையில் மூழ்கிவிட்டவனைப் போல பாவனை செய்தான். அது போன்ற தருணங்களில் லேமின் அவனருகில் அமைதியாக உட்கார்ந்திருந்தான். குண்டா எழுந்த போது அவனும் கூடவே எழுந்தான். வேறு சில சமயங்களில், லேமின் கேட்ட கேள்விக்குப் பதில் தெரியவில்லை என்றால் எதையாவது செய்து பேச்சை மாற்றிவிட்டான்.

லேமின் குடிசையை விட்டு வெளியே செல்லும் வாய்ப்புக்காகக் காத்திருந்து, அவனுடைய கேள்விக்கான பதிலைத் தந்தையிடமாவது தாயிடமாவது கேட்டுப் பெற்றான். அப்படிப்பட்ட கேள்விகளை எதற்காகக் கேட்டான் என்பதை அவன் அவர்களிடம் தெரிவித்ததில்லை. ஆன போதிலும், அதற்கான காரணம்

அவர்களுக்குத் தெரிந்திருந்தது. உண்மையில், குண்டாவைப் பெரிய பையனாக மதிக்கத் தொடங்கிவிட்டனர். அவனும் லேமினைப் பொறுத்தவரை நிறையப் பொறுப்புகளை ஏற்றுக் கொண்டான். வெகு விரைவிலேயே, லேமின் ஏதாவது தவறு செய்தால் பின்டா முன்னிலையிலேயே அவனைத் திட்டத் தொடங்கி விட்டான். அம்மா இட்ட வேலைகளைச் செய்வதில் அவன் சுணக்கம் காட்டினாலோ ஏடாகூடமாகப் பேசினாலோ திருத்தும் விதமாகக் கை நீட்டவும் துணிந்து விட்டான். பின்டா கண்டும் காணாமல் கேட்டும் கேளாதது போல இருந்து கொண்டாள்.

அம்மாவோ அண்ணனோ முறைத்துப் பார்ப்பதற்கு முன்பே லேமின் தனது கடமைகளைச் சரிவர நிறைவேற்றக் கற்றுக் கொண்டான். இப்போதெல்லாம் லேமினுடைய கேள்விகளை குண்டா அம்மா, அப்பாவிடம் கேட்ட போது உடனே பதில் கிடைத்தது.

"எருதுத் தோலாலான அப்பாவின் பாய் சிவப்பாக இருக்குது, எப்படி? எருது சிவப்பா இல்லையே?"

"கார நீரையும் வண்ணப் பொடியையும் கொண்டு நான் அதற்குச் சாயமேற்றினேன்" அம்மா கூறினாள்.

"அல்லா எங்கே இருக்கிறார்?"

"சூரியன் உதித்து வருகின்ற இடத்தில்!" ஓமோரோ பதிலளித்தார்.

# 16

"அடிமைகள்ன்னா யாருண்ணா?" ஒரு மதிய வேளையில் லேமின் குண்டாவைக் கேட்டான். நறநறவென்று பற்களைக் கடித்தவன் அமைதியாகிவிட்டான். நடந்து கொண்டே சிந்தனையை ஓட்டினான். 'யாரோ பேசியதை ஒட்டுக் கேட்டு விட்டு இப்படியொரு கேள்வியைக் கேட்கிறான்' என்று நினைத்தான். பூச்சாண்டிகளால் பிடித்துச் செல்லப்பட்டவர்கள் அடிமைகளாக்கப்பட்டனர் என்று அறிந்திருந்தான். ஜுஃப்யூர் கிராமத்திலும் சிலரிடம் அடிமைகள் இருந்ததாகப் பெரியவர்கள் பேசியதை குண்டா ஒட்டுக் கேட்டிருந்தான். ஆனால், உண்மையில் அடிமைகள் யார் என்பதை அவன் அறிந்திருக்க வில்லை. பல சந்தர்ப்பங்களில் லேமினுடைய கேள்விகள் அவன் மேலும் மேலும் தெரிந்து கொள்ள வேண்டிய கட்டாயத்தை ஏற்படுத்தின.

அடுத்த நாள் பின்டாவுக்காக புதிய உணவுக் கிடங்கு கட்டுவதற்காக பனை மரங்களை வெட்டிக் கொண்டுவர ஓமோரோ புறப்பட்டார். தானும் உடன் செல்வதற்கு குண்டா அனுமதி கேட்டான். ஓமோரோவுடன் எங்கு செல்வதாக இருந்தாலும் குண்டாவுக்கு ரொம்ப விருப்பம். ஆனால், அன்று இருளடர்ந்த குளுமையான பனங்காட்டை அடையும் வரை இருவருமே வாயைத் திறக்கவில்லை.

பின்னர், திடீரென்று குண்டா கேட்டான், "அடிமைகள்னா யாருப்பா?"

முதலில் நறநறத்த ஓமோரோ எதுவும் பேசாமல், காட்டிற்குள் பொருத்தமான மரத்தைத் தேடி பல நிமிடங்கள் அங்குமிங்குமாக அலைந்தார்.

"அடிமைகள் யாரு, யாரு அடிமைகளல்ல என்று பிரித்துச் சொல்வது அவ்வளவு எளிதல்ல" ஒருவழியாக உகந்த மரத்தைத் தெரிவு செய்து கோடாரியால் வெட்டிக் கொண்டே பதில் அளித்தார். "குடிசைகள் வேயப்பட்டுள்ள புல்லினத்தின் தன்மையை வைத்து அடிமைகளையும் சுதந்திர மனிதர்களையும் பிரித்துக் கொள்ளலாம்." குண்டாவிற்குத் தெரிந்திருந்தது. சுதந்திர மனிதர்களுடைய குடிசைகள் உயர்ந்த வகைப் புல்லால் வேயப்பட்டிருந்தது.

"ஆனால், அடிமைகள் முன்னிலையில் அடிமைகளைப் பற்றி யாரும் பேசிவிடக் கூடாது" ஓமோரோவின் பார்வையில் கண்டிப்பு தெறித்தது. குண்டாவிற்கு ஏன் பேசக் கூடாது என்பது புரியவில்லை. ஆனாலும், பேச மாட்டேன் என்பது போல தலையை ஆட்டினான்.

பனை மரம் விழுந்தது. ஓமோரோ அதன் மீதிருந்த தடித்த சொர சொரப்பான பகுதியைச் செதுக்கியெடுத்தார். பழுத்த பனம்பழங்கள் சிலவற்றைப் பறித்துக் கொண்டிருந்த குண்டாவிற்கு அப்பா அன்றைக்கு நல்ல மனநிலையில் இருந்ததாகப் பட்டது. லேமினுக்கு அடிமைகள் பற்றிய விளக்கங்கள் அளிப்பதற்குத் தேவையான விவரங்களைப் பெற்று விடலாம்!

"சிலர் மட்டும் அடிமைகளாக இருக்க, மற்றவர்கள் அப்படியில்லையே ஏன்?"

"பல்வேறு வழிகளில் மக்கள் அடிமைகள் ஆக்கப்பட்டனர். சிலர் அடிமைத் தாய்களுக்குப் பிறந்தனர்." ஜுஃப்பூர் கிராமத்தில் வாழ்ந்த அப்படிப்பட்ட அடிமைகள் சிலருடைய பெயர்களை ஓமோரோ குறிப்பிட்டார். அவர்களை குண்டா நன்கு அறிந்திருந்தான். அவர்களில் சிலர் அவன் வயதுத் தோழர்களுடைய பெற்றோர். வேறு சிலர் தம்முடைய தாயகக் கிராமங்களில் பஞ்சம் ஏற்பட்ட போது பட்டினி தாளாமல் ஜுஃப்பூர் வந்தடைந்து தமக்குப் பசியைத் தீர்த்தவர்கள் வசம் தம்மை அடிமைகளாக ஒப்படைத்தனர். இன்னும் சிலர் எதிரி இனத்திலிருந்து கைதிகளாகச் சிறைப் பிடிக்கப்பட்டவர்கள். அப்படிப்பட்ட முதியவர் சிலருடைய பெயர்களை ஓமோரோ குறிப்பிட்டார். "சாகத் துணிவில்லாமல் கைதிகளானதால் அடிமைகளாக்கப்பட்டனர்."

வெட்டிய மரத்தை சுமந்து செல்வதற்கு ஏற்ற விதத்தில் துண்டங்களாக்கினார். தந்தை குறிப்பிட்ட பெயர்களுக்குரியவர்கள் அடிமைகள் என்றபோதிலும் மரியாதைக்குரியவர்கள் என்றார். "நம்முடைய மூதாதையர் வகுத்துள்ள விதிகளில் அவர்களுக்கும் உரிமைகள் உறுதியளிக்கப்பட்டுள்ளன. அடிமைகளுக்கு, உணவு, உடை, தங்குவதற்கு குடிசை, விளைச்சலில் பாதிப் பங்கு என்கிற விதத்தில் உழைப்பதற்கு நிலம், உடன் வாழ்வதற்கு மனைவி அல்லது கணவன் ஆகிய அனைத்தையும் அடிமைகளுக்கு எஜமான்கள் வழங்க வேண்டும்."

கொலைகாரர்களாகவும் திருடர்களாகவும் வேறு குற்றங்கள் இழைத்ததற்காகத் தண்டனை விதிக்கப்பட்ட அடிமைகளைத் தான் எஜமானர்கள் அடிக்கவோ வேறு விதத்தில் தண்டிக்கவோ செய்தனர். அவர்கள் வெறுக்கத்தக்கவர்கள்.

"அடிமைகள் எப்போதுமே அடிமைகளாகத் தான் இருக்க வேண்டுமா?" குண்டா கேட்டான்.

"தேவையில்லை! வயல்களில் பாடுபட்டுப் பெறும் பாதிப் பங்கைச் சேமித்துத் தாம் பட்ட கடனை அடைத்துவிட்டு விடுதலைப் பெற்றுக் கொள்வர்." அவ்வாறு விடுதலை அடைந்த சிலருடைய பெயர்களையும் ஒமோரோ குறிப்பிட்டார். அடிமைகளாகத் தொண்டு செய்த குடும்பங்களிலேயே திருமணம் புரிந்து கொண்டு அடிமைத்தளையிலிருந்து விடுவித்துக் கொண்டவர்களும் உண்டு.

பனைத் துண்டுகளைச் சுமந்து செல்வதற்கு ஏதுவாக ஒமோரோ உறுதியானதும் தடிமனானதுமான பச்சைக் கொடியைப் பின்னினார். வேலை செய்து கொண்டே, தம்முடைய எஜமானர்களைக் காட்டிலும் வளமடைந்த அடிமைகள் சிலரைக் குறிப்பிட்டார். வேறு சில அடிமைகள் வாழ்க்கையில் வளமடைந்து தாமே சிலரை அடிமைகளாகக் கொண்டிருந்ததையும் இன்னும் சிலர் மிகப் பெரும் புகழ் பெற்றுத் திகழ்ந்ததையும் விளக்கினார்.

"சுந்தியதா!" குண்டா வியப்புடன் கூவினான். பாட்டிமாரும் கதைப்பாடல்கள் நிகழ்த்தியவர்களும் அந்த மாபெரும் அடிமை மூதாதையின் வீர தீரச் செயல்களைப் பற்றியும் பல எதிரிகளை வென்றதைப் பற்றியும் விவரித்திருந்தனர்.

ஒமோரோ பல்லைக் கடித்தபடி தலையாட்டி ஆமோதித்தார். அவன் அதனை அறிந்திருந்ததில் அவருக்கு மகிழ்ச்சி! அவனுடைய வயதில் அவரும் சுந்தியதா பற்றிய கதைகளைக் கேட்டிருந்தார். அவனைச் சோதிக்கும் விதமாக மேலும் ஒரு கேள்வி கேட்டார். "சுந்தியதாவினுடைய தாய் யார்?"

"சோகோலோன், எருமை மனுஷி!" குண்டா பெருமை பொங்கக் கூறினான்.

ஒமோரோ நகைத்தார். பின்னிய கொடியால் கட்டப்பட்ட இரண்டு பனை மரத் துண்டுகளைத் தூக்கித் தனது தோள்களில் சுமந்து கொண்டு நடந்தார். பனம்பழங்களைத் தின்றபடி குண்டா பின் தொடர்ந்தான். கிராமத்திற்குத் திரும்பிய வழி நெடுகிலும் முடவரான அறிவுத் திறமிக்க அந்த அடிமைத் தளபதி சதுப்பு நிலப் புதர்களுக்குள்ளும் பிற ஒளிவிடங்களிலும் மறைந்திருந்த அடிமைகளைக் கொண்டு படை நடத்தி மிகப் பெரிய மண்டிங்கர் பேரரசை வென்றெடுத்த வரலாற்றைக் கூறிக் கொண்டே நடந்தார்.

"ஆம்பிளைக்கான பயிற்சிக்குச் செல்லும் போது அவரைப் பற்றிய நிறைய செய்திகளைத் தெரிந்து கொள்வாய்!" அப்படியொரு காலம் வரப் போவதை எண்ணி குண்டா உடலெங்கும் நடுக்கம் ஏற்பட்டது. ஆனாலும், திகில் நிறைந்த ஆர்வமும் மீதூர்ந்தது.

வெறுக்கத் தக்க தன்னுடைய எஜமானனை விட்டு சுந்தியதா தப்பி ஓடியதாகவும் தம்முடைய எஜமானர்களைப் பிடிக்காத பலரும் அவ்வாறு செய்ததாகவும் ஓமோரோ கூறினார். தண்டனை விதிக்கப்பட்ட அடிமைகளைத் தவிர ஏனைய அடிமைகளை அவர்களுக்கு விருப்பமில்லாத எஜமானர்களிடம் விற்கலாகாது.

"நியோ போட்டோ பாட்டி கூட அடிமை தான்!" என்றார் ஓமோரோ. வாய் நிறைய மென்று கொண்டிருந்த பனம்பழத்தை குண்டா திகைப்பில் அப்படியே விழுங்கி விட்டான். அதனை அவனால் ஜீரணிக்கவே முடியவில்லை. பாசம் மிகுந்த பாட்டியைப் பற்றிய காட்சிகள் அவனுடைய மனத்திரையில் பளிச்சிட்டன. குடிசையின் வாசலில் காலை நீட்டி உட்கார்ந்து கொண்டு, கிராமத்தின் பன்னிரெண்டு பதினைந்து அம்மணப் பயல்களைக் கண்காணித்தவாறு பொய் மயிரால் தலைக் கவிகைகளை நெய்து கொண்டிருந்தவள்! வழியில் போவோரையெல்லாம் தன்னுடைய தடித்த வார்த்தைகளால் துளைத்தெடுத்தவள்! அவளுடைய மனத்தில் பட்டதென்றால் வயசாளிகளைக் கூட விட்டு வைத்ததில்லை! "அப்படிப்பட்டவள் யாருக்கும் அடிமையாக இருந்திருக்க முடியாதே!"

அடுத்த நாள் மாலையில், ஆடுகளைப் பட்டியில் அடைத்த பிறகு, லேமினைக் கூட்டிக் கொண்டு குடிசைக்குச் சென்ற போது, விளையாட்டுத் தோழர்கள் இருந்த வழக்கமான வழியை விடுத்து நியோ போட்டோ பாட்டியின் குடிசை முன்பு அமர்ந்தனர். சில நொடிகளில், வாசலில் ஆள் அரவம் தட்டுப்பட்டதால் பாட்டி வந்தாள். குண்டா அவளுக்கு ரொம்பப் பிடித்தமானவன். ஒரே பார்வையில் அவனுடைய மனத்தில் ஏதோ முக்கியமான எண்ணம் ஓடியது என்று உணர்ந்து கொண்டாள். பொடியன்களை உள்ளே அழைத்தவள் அவர்களுக்கு மூலிகைத் தேனீர் தயாரிப்பதில் முனைந்தாள். "அப்பா, அம்மாவெல்லாம் நல்லா இருக்காங்களா?" கேட்டாள்.

"நல்லா இருக்காங்க பாட்டி! நலம் விசாரித்ததற்கு நன்றி! நீங்க எப்படி இருக்கீங்க பாட்டி?" குண்டாவின் குரல் பணிவாக ஒலித்தது.

"நா ரொம்ப நல்லா இருக்கேன்!"

குண்டாவிற்கு அடுத்து வார்த்தைகள் வரவில்லை. தேனீர் குடுக்கைகள் வந்தன. ஒருவழியாக உளறிவிட்டான், "நீங்க எப்படி அடிமையானீங்க, பாட்டி?" இப்போது பாட்டிக்கு வார்த்தைகள் கிடைக்க சற்று நேரமானது. "சொல்றேன்!" கடைசியில் பாட்டியின் குரல் வெடித்தது.

"இங்கிருந்து நெடுந் தொலைவில் இருந்த நான் வாழ்ந்த கிராமத்தில் ரொம்பக் காலத்திற்கு முன்பு, அப்போ நான் இளம் மனைவியாக இருந்த சமயம், ஒரு ராத்திரி, அக்கம் பக்கத்தில் குடிசைகள் எரிந்து கூரைகள் நொறுங்கி விழுந்த பீதியில் மக்கள் எழுப்பிய கூக்குரல் கேட்டு விழித்தெழுந்தேன். என்னுடைய இரு பிள்ளைகளையும், ஒரு பையனும் ஒரு பெண்ணும், பற்றி இழுத்துக் கொண்டு அலறி அடித்துக் கொண்டு வெளியே ஓடினேன். என்னுடைய கணவர் அதற்கும் சில நாட்களுக்கு

முன் பழங்குடி மக்களிடையே நடந்த போரில் இறந்து விட்டார். வெளியே வெள்ளைக்கார அடிமை பிடிப்பவர்கள் தம்முடைய கறுப்புப் பணியாட்களுடனும் ஆயுதங்களுடனும் நின்றிருந்தனர். ஊர் மக்களுக்கும் அவர்களுக்குமிடையே கடும் போர் நடந்தது. தப்பியோட முடியாதவர்களையெல்லாம் மந்தைகளைப் போல ஒன்று சேர்த்தனர். படுகாயம் அடைந்திருந்தோரையும் அவர்களுடன் நடந்து செல்ல முடியாத குழந்தைகளையும் வயசாளிகளையும் மற்றவர்கள் கண்முன்பாகவே கொடூரமாக வெட்டிக் கொன்றனர்." சொல்லிக் கொண்டிருந்த பாட்டி வெடித்து அழுதாள், "என்னுடைய இரு குழந்தைகளையும் வயதான எனது தாயையும் கூட..."

லேமினும் குண்டாவும் ஒருவர் கையை மற்றவர் இறுகப் பற்றிக் கொண்டனர். பாட்டி தொடர்ந்தாள், "கைதிகளை கழுத்துடன் கழுத்து இரும்பு வளையங்களால் பிணைத்து கொளுத்திய வெயிலில் கரடுமுரடான பாதை வழி பல நாட்கள் அடித்துத் துன்புறுத்தியபடி ஓட்டிச் சென்றனர். வேகமாக நடக்கும்படி முதுகில் விழுந்த சவுக்கடி தாளாமல் பலர் சுருண்டு விழுந்தனர். அடுத்த சில நாட்களில் மேலும் பலர் பசியாலும் களைப்பாலும் கீழே விழுந்தனர். சிலர் முன்னோக்கி நடக்கப் பெரிதும் போராடினர். இயலாதவர்களை அங்கேயே காட்டு விலங்குகள் பார்த்துக் கொள்ளட்டும் என்று விட்டு விட்டு தமது பயணத்தைத் தொடர்ந்தனர். வழியில் எதிர்ப்பட்ட கிராமங்கள் எரிக்கப்பட்டு சிதைந்து கிடந்தன. ஒரு காலத்தில் குடும்பங்கள் வாழ்ந்த குடிசைகளின் கூரைகளும் மண் மதில்களும் சாம்பல் திட்டுக்களாக வயிற்றைப் பிசைந்தன. அவற்றிடையே கிடந்த மனிதர்களுடையதும் விலங்குகளுடையதுமான எலும்புகளும் மண்டையோடுகளும் குலை நடுங்கச் செய்தன. புறப்பட்ட போது இருந்த எண்ணிக்கையில் பாதிக்கும் குறைவானவர்கள் காம்பே நதிக்கரையிலிருந்து நான்கு நாள் பயண தூரத்திலிருந்த ஜுஃப்யூர் கிராமத்தில் அடிமைகளாக விற்கப்பட்டனர்.

"அங்கே இளம் கைதி ஒருத்தி ஒரு மூட்டை தானியத்திற்காக விற்கப்பட்டாள். அது தான் நான். அப்படித் தான் எனக்கு நியோ போட்டோ என்கிற பெயரும் ஏற்பட்டது" குண்டாவுக்குத் தெரியும்! அந்தப் பெயருக்கு ஒரு மூட்டை தானியம் என்று பொருள். "என்னை அடிமையாக விலைக்குப் பெற்ற ஆள் ரொம்ப நாளைக்கு முன்பு செத்துப் போனான். அப்போயிருந்து நான் இந்தக் குடிசையில் தான் வசிக்கிறேன்"

கதையைக் கேட்ட லேமின் உடல் பீதியில் உதறியது. குண்டா பாட்டியின் மீது வைத்திருந்த மதிப்பும் மரியாதையும் பரிவும் பாசமும் பல மடங்கு அதிகரித்தது. பாட்டி இரு பொடியன்களையும் அன்பொழுகப் பார்த்தபடி சிரித்துக் கொண்டிருந்தாள். ஒரு காலத்தில் அவர்களைப் போலவே அவர்களுடைய அம்மா, அப்பாவையும் தனது மடியில் வைத்து சீராட்டியவள்!

"ஒங்க அப்பா, ஓமோரோவுக்கு நான் இங்கே வந்த போது ஐந்து வயதுக்கும் குறைவாகத் தான் இருந்திருக்கும்! அவரோட அம்மா, ஆயிசா, அது தான் உங்க பாட்டி, எனக்கு ரொம்ப நெருக்கமான தோழி! பாட்டிய ஞாபகம் இருக்கா?" இருக்கு என்பது போல தலையை ஆட்டிய குண்டா தன்னுடைய தம்பிக்குப்

பாட்டியைப் பற்றிய செய்திகளையெல்லாம் கூறியதாகவும் பெருமை பொங்கத் தெரிவித்தான்.

"ரொம்ப நல்லது! இப்போ நான் என் வேலையைப் பார்க்கணும். ஓடுங்க!"

தேனீர் கொடுத்ததற்கு நன்றி தெரிவித்து விட்டு அங்கிருந்து புறப்பட்டு பின்டாவின் குடிசையை நோக்கி மெதுவாக நடந்தனர். இருவருடைய முகத்திலும் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்து விட்ட இறுக்கம் தெரிந்தது.

அடுத்த நாள் மாலை வேளையில், குண்டா ஆடுகளை மேய்த்துத் திரும்பிய போது, நியோ போட்டோ பாட்டி சொன்னை கதையைப் பற்றிய பல கேள்விகளுடன் லேமின் காத்திருந்ததைக் கண்டான். ஜுஃப்யூர் கிராமத்தில் எப்பவாவது அப்படி தீப்பற்றி எரிந்ததுண்டா? தெரிந்து கொள்ள விரும்பினான். குண்டா அது போல ஒருபோதும் கேள்விப்பட்டதில்லை என்றும் கிராமத்தில் அதற்கான அடையாளமே தெரிந்ததில்லை என்றும் கூறினான். 'அடிமை பிடிக்கிற வெள்ளைக்காரன்களைப் பார்த்திருக்கிறாயா?' "பார்த்ததே இல்லை! ஆனால், அப்பாவும் அவருடைய அண்ணன்மார்களும் ஆற்றில் வெகு தொலைவில் வெள்ளைக்காரர்களையும் அவர்களுடைய கப்பல்களையும் கண்டதாகக் கூறியிருக்கிறார்."

குண்டா உடனே பேச்சை மாற்றினான். அவர்களைப் பற்றி அவனுக்குச் சரிவரத் தெரியவில்லை. தெரிந்து கொள்ள விரும்பினான். அவர்களைப் பற்றிக் கேள்விப்பட்ட வரையில், அவர்களிடம் நெருங்காமல் இருந்த வரை பாதுகாப்பாக இருக்கலாம். ஆகவே, பாதுகாப்பான தூரத்தில் இருந்தபடி அவர்களுள் ஒருவரையாவது பார்த்துவிட ஆசைப்பட்டான்.

சமீபத்தில், கீரை பறிப்பதற்காகக் காட்டிற்குள் சென்ற பெண்ணையும் அதற்கு முன்பு வேட்டைக்குச் சென்ற ஆட்கள் இருவரையும் காணவில்லை. அடிமைகளாகப் பிடித்துச் செல்கிற வெள்ளைக்காரர்கள் தான் அவர்களைக் கவர்ந்து சென்றிருக்க வேண்டும் என்று ஊர் மக்கள் நம்பினர். அப்படிப்பட்ட வெள்ளைக்காரர்கள் ஆள் ஒருவரைப் பிடித்துச் சென்று விட்டதாகவோ, சுற்றுப்புறங்களில் தென்பட்டதாகவோ தெரிவித்து அண்டையிலிருந்த கிராமங்களில் முரசுகள் ஒலிக்கப்பட்டதையும், உடனே ஆடவரெல்லாம் ஆயுதங்களை ஏந்தியபடி காவலை இரட்டிப்பாக்கியதையும் பெண்டிர் தமது பிள்ளைகளை கிராமத்திலிருந்து நெடுந்தொலைவில் புதர்களுக்குள் பல நாட்கள், வெள்ளைக்காரர்கள் சென்றுவிட்டனர் என்று உறுதிப்படுத்திய வரை மறைத்து வைத்திருந்ததையும் குண்டா நினைவுகூர்ந்தான்.

மற்றொரு நிகழ்ச்சியும் குண்டாவிற்கு நினைவில் பட்டது. ஒருமுறை அமைதியான புல்வெளியில் ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்த போது, வழக்கமாக அமரும் மரநிழலில் உட்கார்ந்திருந்தான். மேலே இலைகள் அடர்ந்த கிளைகளில் வால்களை கீழ் நோக்கித் தொங்கவிட்டபடி இருபது, முப்பது மந்திகள் நெருக்கியடித்துக் கொண்டு சிலைபோல அமைதியாக உட்கார்ந்திருந்தது அவனுக்கு ஆச்சர்யமாக இருந்தது. மந்திகள் உரத்த கீச்சொலி எழுப்பியபடி அங்குமிங்குமாகத் தாவக்

கூடியவை என்று நினைத்திருந்தான். ஆனால் அவை அவனுடைய ஒவ்வொரு அசைவையும் பார்த்துக் கொண்டிருந்தன. அது போல தானும் உயரத்தில் மரக்கிளை ஒன்றில் அமர்ந்தபடி கீழே தரையில் வெள்ளைக்காரன் யாரேனும் சென்றால் கவனிக்கலாம் என்று நினைத்தான்.

லேமின் மனிதர்களை அடிமைகளாகக் கவர்ந்து சென்றவர்களைப் பற்றிய கேள்வி எழுப்பிய பிறகு, அன்று மாலை ஆட்டு மந்தைகளை ஓட்டிக் கொண்டு வீடு திரும்பிய வேளையில் குண்டா தன்னுடைய சக மேய்ப்பர்களிடம் அதே கேள்விகளைக் கேட்டான். உடனே ஒவ்வொரு பயலும் தான் கேள்விப்பட்டிருந்த செய்திகளைக் கொட்டினர். டெம்பா கோன்டே என்கிற பயல் சொன்னான். துணிச்சல் மிக்க அவனுடைய சித்தப்பா வெள்ளைக்காரன் ஒருவனிடம் மிகவும் நெருக்கமாகச் சென்றாராம். அவனிடமிருந்து கடுமையான நெடி அடித்ததாம். அவர்கள் கவர்ந்து சென்ற பயல்களையெல்லாம் தின்று விடுவர் என்பதை அனைத்துப் பயல்களும் தெரிந்து வைத்திருந்தனர். ஆனால், சிலர் மட்டும் தின்பதற்காக அல்ல; இழுத்துச் சென்று பெரிய பெரிய பண்ணைகளில் வேலை செய்யும்படி கட்டாயப் படுத்தினர் என்றனர். தன்னுடைய பாட்டனார் அதற்குச் சொன்ன பதிலை சிடாஃபா சில்லா வெறுப்புடன் உமிழ்ந்தான், “அது வெள்ளைக்காரம் பொய்!”

அடுத்த வாய்ப்புக் கிடைத்த போது, குண்டா ஒமோரோவிடம் கேட்டான், “அப்பா! நீங்களும் பெரியப்பாக்களும் ஆத்துல வெள்ளைக்காரங்களைப் பார்த்ததைப் பற்றிச் சொல்லுங்க! லேமினுக்குச் சொல்ல வேண்டியிருப்பதால் சரியாகத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம்!” அப்பா சிரித்ததைப் போல குண்டாவிற்குத் தோன்றியது. ஆனால், அவர் உண்மையில் பற்களைக் கடித்தார். அந்த நேரத்தில் அவர் பேசுவதற்கு விரும்பவில்லை என்று பட்டது. ஆனால், சில நாட்கள் கழித்து குண்டாவையும் லேமினையும் கிராமத்திற்கு அப்பால் சென்று அவருக்குத் தேவைப்பட்ட வேர்கள் சிலவற்றைப் பறித்து வர அழைத்தார். அம்மணப் பயல் லேமின் தனது தந்தையுடன் முதன் முறையாக வெளியே சென்றான். அளவுக்கதிகமான குதூகலத்தில் மிதந்தான். குண்டாவினுடைய செல்வாக்கால் தான் தனக்கு அப்படியொரு வாய்ப்புக் கிட்டியது என நினைத்தான். அண்ணனுடைய அங்கியின் பின் பகுதியை இறுகப் பற்றியபடி நடந்தான்.

ஒமோரோ தன்னுடைய இரு மகன்களையும் பார்த்துக் கூறினார். ஆம்பிளைகளுக்கான பயிற்சி முடித்தவுடன் அவருடைய அண்ணன்மார் ஜானேவும் சலோமும் ஜுஃப்பூரை விட்டுச் சென்று விட்டனர். காலப்போக்கில், அவர்கள் இருவரும் புதுமையான தொலை தூர இடங்களுக்கெல்லாம் செல்லக் கூடிய சிறந்த பயணிகளாகிவிட்டனர் என்கிற செய்தி எட்டியது. ஒமோரோவுக்கு முதல் மகன் பிறந்த செய்தி முரசறைந்து அறிவிக்கப்பட்ட போது அவர்களுக்கும் கிட்டியது. பெயர் சூட்டும் விழாவில் கலந்து கொள்வதற்காகத் தான் முதன் முறையாக ஜுஃப்பூர் திரும்பினர். நீண்ட நாள் கழித்து தாயகக் கிராமம் திரும்பியவர்கள் தமமுடைய பிள்ளைப் பருவத் தோழர்கள் சிலரை ஆரத்தழுவி ஆனந்தமடைந்தனர். அவர்கள் கிராமத்தை விட்டுச் சென்றவர்களையும் காணாமற் போனவர்களையும்

பற்றி அண்ணன்களுக்குத் தெரிவித்தனர். சிலர் எரிக்கப்பட்ட கிராமங்களில் கருகினர்; வேறு சிலர் கண்ணி வெடிகளில் சிக்கிக் கொல்லப்பட்டனர்; சிலர் கடத்திச் செல்லப்பட்டனர்; பண்ணைகளில் வேலை பார்த்துக் கொண்டிருந்த போதும், வேட்டைக்குச் சென்ற இடங்களிலும், பயணங்களின் போதும் மேலும் சிலர் காணாமற் போயினர். அவை அனைத்துமே வெள்ளைக்காரர்களுடைய கொடூரங்களால் நிகழ்ந்தன.

கோபங் கொண்ட அண்ணன்மார் ‘அவர்கள் என்னதான் செய்கின்றனர் என்று பார்த்து வருவோம், பிறகு என்ன செய்வதென்று யோசிப்போம்’ என்று கத்தியபடி ஒமோரோவையும் தம்முடன் வருமாறு அழைத்தனர். சகோதரர்கள் மூவரும் நதிக்கரையின் வழியாக, மிகுந்த எச்சரிக்கையுடன் புதர்களின் மறைவில் மறைந்தபடி, மூன்று நாட்கள் நடந்து சென்று கடைசியில் தாங்கள் தேடிச் சென்றதைக் கண்டு கொண்டனர். இருபதிற்கும் மேற்பட்ட மிகப் பெரிய பரங்கியர் படகுகள் ஆற்றில் ஊர்ந்து சென்றதைக் கவனித்தனர். ஜுஃப்பூர் மக்கள் அனைவரையும் உள்ளே அடக்கிக் கொள்ளும் அளவிற்கு ஒவ்வொன்றும் பெரியனவாக இருந்தன. ஒவ்வொன்றிலும் பத்து ஆட்கள் உயரத்திற்கு வெள்ளைத் துணி கட்டிய மரம் நிறுத்தப்பட்டிருந்தது. அருகாமையில் ஒரு தீவு இருந்தது. அதில் மிகப் பெரிய கோட்டை நிமிர்ந்து நின்றது.

பரங்கியரின் நடமாட்டம் தெரிந்தது. கோட்டையிலும் சிறு சிறு படகுகளிலும் கறுப்பு பணியாட்கள் தென்பட்டனர். உலர்த்தப்பட்ட சாயப் பொருட்கள், பருத்தி, தேன்மெழுகு, தோல்கள் போன்ற சரக்குகளை சிறிய படகுகளில் ஏற்றி பெரிய கலன்களுக்குக் கொண்டு சென்றனர். விவரித்துக் கொண்டிருந்த போது ஒமோரோவின் குரல் கம்மியது. பரங்கியர் கொண்டு செல்வதற்காகப் பிடித்து வைத்திருந்த அடிமைகளை அடித்துக் கொடுமைப் படுத்தி பெரிய கலன்களை நோக்கி இழுத்துச் சென்றனர்.

ஒமோரோ நீண்ட நேரம் அமைதியாக இருந்தார். அவர் எதையோ ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டிருந்தார் என்பதை குண்டாவால் உணர முடிந்தது. பிறகு தொடர்ந்தார். “முன்பு பிடித்துச் சென்ற அளவுக்குத் தற்பொழுது நம்முடைய மக்களை அவர்களால் கவர்ந்து செல்ல முடியாது. குண்டா குழந்தையாக இருந்த பொழுது, காம்பியா நாட்டின் இப்பகுதியை ஆண்ட பர்ரா மன்னர் தன்னுடைய மக்களுடைய கிராமங்களைக் கொளுத்திவிட்டு அவர்களைக் கவர்ந்து செல்லலாகாது என்று தடை விதித்தார். கோபங் கொண்ட பல மன்னர்கள் தமது படைவீரர்களைக் கொண்டு பரங்கியருடைய கலன்களுக்குத் தீவைத்து ஆற்றில் மூழ்கடித்தனர். கலன்களுடன் அவற்றிலிருந்த பரங்கியர் பலரும் மாண்டனர்.

“தற்பொழுது, கேம்பி நீர்வழிக்குள் நுழையும் ஒவ்வொரு பரங்கியர் கலனும் பர்ரா மன்னருக்கு மரியாதை செலுத்தும் வகையில் பத்தொன்பது துப்பாக்கிகளை முழங்குகின்றன. குற்றவாளிகளையும், பட்ட கடனை அடைக்க முடியாத கடனாளிகளையும், மன்னருக்கு எதிராகச் சதி செய்தோரையும் மன்னருடைய முகவர்களே பரங்கியருக்கு விற்கின்றனர். மன்னருக்கு எதிராக சிறு முணுமுணுப்புக் கேட்டாலும் உடனே அவர்கள் குற்றவாளிகளாக்கப்பட்டு விடுகின்றனர்.

அடிமைகளைத் தேடி பரங்கியருடைய கப்பல்கள் கேம்பி ஆற்றில் தென்பட்ட உடனே மிகுந்த எண்ணிக்கையில் பலரும் குற்றம் சுமத்தப்பட்டு அடிமைகளாக விற்கப்படுகின்றனர்.

''ஆனாலும், அவர்கள் தொடர்ந்து நமது மக்களை அவர்களுடைய கிராமங்களிலிருந்து கவர்ந்து செல்வதை மன்னர்களாலும் முற்றாகத் தடுத்துவிட முடியவில்லை. கடந்த சில மாதங்களில் மட்டும் நமது கிராமத்திலிருந்து மூன்று பேர் காணாமற் போனதையும் அதே போல காணாமற் போனவர்களைப் பற்றித் தெரிவித்துப் பக்கத்துக் கிராமங்களிலிருந்து முரசொலி எழுப்பப்பட்டதையும் கேள்விப்பட்டிருப்பீர்கள்." ஓமோரோ தன்னுடைய மகன்களை உற்று நோக்கினார். பிறகு, மெதுவாகப் பேசினார், "நான் இப்பொழுது சொல்லப் போகிற செய்திகளைக் கவனமாகக் கேட்டு மனதில் பதிய வைத்துக் கொள்ள வேண்டும். நான் சொல்கிறபடி நடந்து கொள்வீர்களானால், உங்களை பரங்கியர் ஒருபோதும் கவர்ந்து செல்லாமல் காப்பாற்றிக் கொள்ளலாம்!'' குண்டாவும் லேமினும் அச்சத்தின் உச்சத்தில் கேட்டுக் கொண்டிருந்தனர். ஓமோரோ தொடர்ந்தார், "முடிந்தவரையில் தனியாக இருக்காதீர்கள்! கூடுமானவரை இரவு நேரங்களில் வெளியில் செல்லாதீர்கள்! பகலாயினும் இரவாயினும் தனியே இருக்க நேர்ந்தால், புதர்களையும் உயரமாக வளர்ந்த புல் நிறைந்த பகுதிகளையும் தவிர்த்து விடுங்கள்!"

அவர்களுடைய வாழ்க்கை முழுவதும், பெரியவர்களாக வளர்ந்த பின்னரும் கூட பரங்கியரிடமிருந்து காப்பாற்றிக் கொள்வதில் கண்ணும் கருத்துமாக இருத்தல் அவசியம் என்றார். "பரங்கி நெருப்பு ஈட்டியைத் துப்பாக்கி வழியாகச் சுடுவான். அதன் சத்தத்தை தூரத்திலிருந்தே கேட்டு விடலாம். எங்கேயாவது கிராமப்புறங்களிலிருந்து பெரும் புகை மண்டலம் கிளம்பியதானால், அது பரங்கியருடைய சமையற்புகையாகத் தான் இருக்கும். அவை எப்பொழுதும் மிகப் பெரிய அளவில் காற்றில் மிதக்கும்! அவன் சென்ற பாதைகளின் அறிகுறிகளை அடையாளம் காண்பதற்குக் கற்றுக் கொள்ள வேண்டும். அவனுடைய பாதச்சுவடுகள் நம்முடையதைக் காட்டிலும் மிகப் பெரியவை; அவன் நடந்து சென்ற பாதையில் கொடிகளும் புற்களும் மிதிபட்டுச் சிதைந்து கிடப்பன. அவன் இருந்த இடங்களில் அவன் கடந்த பிறகும் அவனுடைய வாடையை நுகரலாம். பச்சைக் கோழிக் கறி வாடை மூக்கைத் துளைக்கும். அத்தகைய உணர்வு ஏதேனும் தென்பட்டால் உடனே அமைதியாகி விடுங்கள்! அண்மையில் எங்கேயோ இருக்கிறான் என்று அர்த்தம்!"

ஓமோரோ மகன்களிடம் விளக்குவதற்கு நிறையச் செய்திகள் இருந்தன. "பரங்கியர் இருப்பதைத் தெரிந்து கொண்டால் மட்டும் போதாது. நம்முடைய இனத்தவரில் பலர் அவர்களுடைய கையாட்களாகச் செயல்படுகின்றனர். இனத் துரோகிகள்! ஆனால், அவர்களைப் பற்றி அறிந்திருந்தால் ஒழிய அவர்களை அடையாளம் காண முடியாது. ஆகவே, புல்வெளிகளில் இருக்கும் போது நன்கு பழக்கமில்லாத யாரையும் நம்பிவிடாதீர்கள்!"

குண்டாவும் லேமினும் பயத்தால் உறைந்து போயினர். ஓமோரோ கூறினார், "இதையெல்லாம் உங்களுக்கு யாரும் வலியுறுத்திச் சொல்லியிருக்க மாட்டார்கள்.

பரங்கியரால் கவர்ந்து செல்லப்பட்டவர்களுக்கு நேர்ந்த கதியினை உங்களுடைய பெரியப்பாக்களும் நானும் நேரில் பார்த்தோம். அவற்றை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். நம்முடைய இனத்தவருக்குள்ளேயே அடிமைகளாக இருப்பதற்கும் பரங்கியர் அடிமைகளை நடத்துகின்ற விதத்திற்கும் நிறைய வேறுபாடு உண்டு. கவர்ந்து சென்ற மக்களை ஆற்றங்கரை நெடுகிலும் நீண்ட தடிமனான மூங்கில் கழிகளால் அமைக்கப்பட்ட பட்டிகளில் பலத்த காவலுடன் அடைத்து வைத்திருந்தனர். கப்பலிலிருந்து சிறு படகு மூலம் முக்கியமான பரங்கியர் வந்து சேர்ந்தவுடன் அவர்களைப் பட்டியிலிருநது இழுத்துச் சென்று மணல் வெளியில் விட்டனர்.

"அவர்களுடைய தலையை மொட்டையடித்து வழுவழுப்பான எண்ணெய்யை உடல் முழுவதும் பூசி மெருகேற்றினர். முதலில் அவர்களை உட்கார வைத்து மேலும் கீழும் குதிக்கச் செய்தனர். பரங்கியருக்கு அவ்வாறு குதித்ததில் மன நிறைவு ஏற்பட்ட பின்னர் வாயைத் திறந்து பற்களையும் தொண்டையையும் காட்டும்படி வற்புறுத்தினர்."

ஒமோரோ திடீரென்று குண்டாவினுடைய 'அதை'த் தட்டினார். அவன் துள்ளிக் குதித்தான். "ஆமாம்! 'ஆண்களுடையதை'ப் பிதுக்கிச் சோதித்தனர். பெண்களுடையதையும் கூட... பிறகு, மீண்டும் அவர்களைச் சுடுமணலில் உட்காரச் சொல்லி அவர்களுடைய முதுகிலும் தோள்களிலும் பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்புக் கம்பிகளால் சூடு போட்டனர். துடிதுடித்துக் கூச்சலிட்ட மக்களை நீருக்குள் தள்ளி, பெரிய கப்பல்களில் ஏற்றிச் செல்வதற்காக சிறிய படகுகளுக்கு நெட்டிச் சென்றனர்."

"எனது தமையன்மாரும் நானும் பலர் குப்புற விழுந்து தவழ்ந்து மணலை வாயால் அள்ளித் தின்றதைப் பார்த்தோம். கடைசியாக தம்முடைய தாய் மண்ணில் ஒரு பிடியை ருசிபார்க்க விரும்பினர் போலும்! ஆனால், அவர்கள் அடித்து இழுத்துச் செல்லப்பட்டனர். நீருக்குள் படகுகளில் ஏற்றப்பட்ட போதும் அடிமைகள் அடங்கிவிட வில்லை. சவுக்குகளையும் தடிகளையும் மடிக்கிப் பிடித்துப் போராடினர். நடந்த போரில் பலர் ஆற்றில் குதிக்க நேர்ந்தது. இளம் கறுப்பு நிற முதுகும் வெள்ளை வெளேரென்ற அடிவயிறும் கொண்ட பயங்கர மீன்கள் கூர்மையான பற்கள் நிறைந்த வளைவான வாயால் தம்முன் விழுந்தவர்களைக் கவ்வி ஆற்று நீரைச் செந்நீராக்கின."

குண்டாவும் லேமினும் நெருக்கியடித்து உட்கார்ந்து ஒருவருடைய கைகளை மற்றவர் இறுகப் பற்றிக் கொண்டனர். "உன்னுடைய அம்மாவும் நானும் ஒரு நாள் வெள்ளைச் சேவலைக் கொன்று தொழுகை நடத்துவதைக் காட்டிலும் நீங்கள் இந்தச் செய்திகளையெல்லாம் தெரிந்து கொள்வது நல்லது." ஒமோரோ தன்னுடைய மகன்களைப் பார்த்தார். "அப்படியென்றால் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா?"

ஒருவழியாகத் தன்னைச் சமாளித்துக் கொண்டு தெரியுமென்பதாக தலையை ஆட்டிய குண்டா, காய்ந்து வறண்டு போன தொண்டையைச் செருமியவாறு

கம்மிய குரலில் கூறினான், "யாராவது காணாமற் போன போது செய்வார்களே, அது தானப்பா?" காணாமற் போனவருடைய குடும்பத்தார் தொண்டை கீறப்பட்டு இரத்தம் வழிய சிறகுகளை அடித்துக் கொண்டிருந்த வெள்ளைச் சேவலைச்சுற்றி உட்கார்ந்து பலவாறாகப் புலம்பியவாறு அல்லாவைத் தொழுது கொண்டிருந்ததை அவன் பார்த்திருந்தான்.

ஓமோரோ மேலும் கூறினார், "வெள்ளைச் சேவல் குப்புற விழுந்து இறந்ததென்றால் போனவன் திரும்புவதற்கான நம்பிக்கை இன்னமும் இருக்கிறது. சிறகுகளை அடித்தபடி பின்னோக்கி செத்து விழுந்தால் அவ்வளவு தான்! கிராம மக்கள் அனைவரும் சேர்ந்து அல்லாவை நோக்கி ஓலமிட்டுத் தொழுவர்"

"...ப்பா!" அச்சத்தால் கிரீச்சிட்ட லேமினின் குரல் குண்டாவை நடுங்கச் செய்தது. "திருடப்பட்டவர்களை பெரிய கப்பல்கள் எங்கே கொண்டு போகும்பா?"

"ஜோங் சாங் தூ என்கிற இடத்திற்குக் கொண்டு போய் மனிதர்களைத் தின்னக் கூடிய மிகப் பெரிய பரங்கி அரக்கர்களிடம் விற்றுவிடுவார்களாம்! அவர்கள் நம்மைத் தின்பார்களாம்! பெரியவர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். அதற்கு மேல் யாருக்கும் எதுவும் தெரியாது!"

# 17

**த**ந்தை சொன்ன செய்திகள் லேமினைப் பெரிதும் பயமுறுத்தின. இரவு பல முறை கனவிலிருந்து விழித்துப் பயந்தவாறு குண்டாவை எழுப்பினான். அடுத்த நாள் குண்டா ஆடுமேய்த்துவிட்டுத் திரும்பிய பிறகு, லேமினுடைய எண்ணங்களையும் தன்னுடையவற்றையும் திசை திருப்பும் விதமாகத் தம்முடைய பெரியப்பாமார்களுடைய வீர தீரச் செயல்களைப் பற்றிப் பேசுவதென முடிவு கட்டினான்.

‘‘நம்முடைய அப்பாவின் தமையன்மார்களுக்கும் கைரபா குண்டா கின்டே தான் தந்தை. அவருடைய பெயரைத் தான் எனக்கு வைத்திருக்கிறார்கள். ஆனால், நம்முடைய பெரியப்பாக்கள் ஜானேவும் சலோமும் சைரெங்கிற்குப் பிறந்தவர்கள்.’’ லேமினுக்குக் குழப்பமாக இருந்தது. குண்டா விரிவாக விளக்க முற்பட்டான். “சைரெங் நம் தாத்தாவின் முதல் மனைவி. அவள் இறந்த பிறகு தாத்தா ஆயிஸா பாட்டியை மணந்து கொண்டார்.” மரத்திலிருந்து உதிர்ந்து கிடந்த பூக்களை தரையில் அடுக்கி தம்முடைய குலக்கொடியை விளக்குவதற்கு குண்டா முற்பட்டான். லேமினுக்கு எதுவும் புரிந்ததாகத் தெரியவில்லை. பெருமூச்செறிந்தவன், தன்னுடைய பெரியப்பாக்களின் சாகசங்களை விவரிப்பதெனத் தீர்மானித்தான். தனது தந்தை அவற்றை விவரித்ததைக்

கேட்டபோது அவனுக்குத் திகிலாக இருந்தது.

"நம்முடைய பெரியப்பாக்கள் திருமணம் செய்து கொள்ள வில்லை. அந்த அளவிற்குப் பயணம் செய்வதில் அவர்களுக்குப் பேரார்வம்! பல மாதங்கள் அவர்கள் பகலில் சுட்டெரித்த சூரியனுக்குக் கீழ் பயணம் செய்தனர்; இரவில் வெட்ட வெளியில் நட்சத்திரங்களுக்குக் கீழே உறங்கினர். அங்கே எங்கு பார்த்தாலும் வெறும் மணல் தான் நிறைந்திருக்குமாம். மழையே பொழியாதாம். வெயில் கொளுத்துமாம். பெரியப்பாக்கள் சென்ற வேறொரு இடத்தில் பெரிய பெரிய மரங்கள் அடர்த்தியாக இருந்தன. பகலில் கூட இரவு போலவே இருட்டாக இருந்தது. அங்கே வசித்த மக்கள் பெரியவர்களான பின்னரும் உன்னைக் காட்டிலும் குள்ளமாக இருந்தனர். உன்னைப் போலவே ஆடையின்றி அலைந்தனர். சிறிய விஷம் தோய்க்கப்பட்ட குத்தீட்டிகளைக் கொண்டு அவர்களால் யானைகளைக் கூடக் கொல்ல முடிந்தது. மற்றொரு இடத்தில் பெரியப்பாக்கள் பூதாகரமான மனிதர்களைப் பார்த்தார்கள். மாபெரும் வீரர்களான அம்மக்கள் மிகவும் வல்லமை வாய்ந்த மாண்டிங்கரைப் போல இரு மடங்கு தூரத்திற்கு ஈட்டி எறிய வல்லவர்கள். ஜுஃப்பூரிலேயே மிகவும் உயரமான ஒருவரைக் காட்டிலும் ஆறு முழம் கூடுதல் உயரமான அவர்கள் தமது தலைக்கு மேலே எழும்பி ஆடுகின்ற அளவுக்கு மிகச் சிறந்த நடனக் கலைஞர்கள்."

படுக்கைக்குச் செல்வதற்கு முன்பு, குண்டா தானறிந்த கதைகளில் தனக்குப் பிடித்த ஒன்றை லேமினுக்கு விளக்குகின்ற போக்கில், நடித்துக் காட்டவும் செய்தான். யானைத் தந்தங்கள், அரிய வகைக் கற்கள், தங்கம் போன்றவை அடங்கிய கனத்த மூட்டைகளைச் சுமந்தவாறு அவர்கள் கறுப்பர்களுடைய நகரமான ஜிம்பாப்வேக்குச் சென்ற வழியில் சண்டையிட்ட கொள்ளைக்காரர்களில் ஒருவனாக லேமினைக் கற்பனை செய்து கொண்டு மேலும் கீழுமாகத் தன் மீது வீசப்பட்ட வாளிலிருந்து தப்பித்துக் கொள்பவன் போல பக்கவாட்டில் துள்ளிக் குதித்தான்.

லேமின் மேலும் கதை சொல்லும்படி கேட்டான். குண்டா அவனைத் தூங்குமாறு பணித்தான். தன்னுடைய தந்தை கதை சொன்ன பிறகு தூங்குமாறு தன்னைப் பணித்த போது, அவன் இப்பொழுது அவனுடைய தம்பி படுத்திருந்ததைப் போல பாயில் கிடந்தபடி தன்னுடைய பெரியப்பாக்களின் சாகசங்களையெல்லாம் மனதிற்குள் படமாக ஓட்டிக் கொண்டிருந்தான். சில சமயங்களில் தன்னுடைய பெரியப்பாக்களுடன் புதுமையான இடங்களுக்கெல்லாம் பயணம் செய்து அங்கே மாண்டிங்கர்களைக் காட்டிலும் வித்தியாசமான தோற்றமும், செயல்களும், வாழ்க்கை முறையும் கொண்ட மக்களுடன் பேசிக் கொண்டிருந்தது போல கனவு கண்டான். தன்னுடைய பெரியப்பாக்களுடைய பெயர்களைக் கேட்ட மாத்திரத்தில் அவனுடைய இதயம் வேகமாகத் துடித்தது.

சில நாட்களுக்குப் பிறகு, குண்டா தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாத அளவிற்குக் குதியாட்டம் போடும் விதமாக அவனுடைய பெரியப்பாக்களைப் பற்றிய செய்தி ஜுஃப்பூர் கிராமத்திற்கு எட்டியது. வெள்ளை வெயில் வெளுத்துக் கட்டிய அமைதியான மதிய நேரம். கிராமத்து மக்கள் அனைவரும் தம்முடைய

குடிசைகளின் வாசல்களுக்கு வெளியிலும் ஆலமர நிழலிலும் அமர்ந்திருந்தனர். திடீரென்று அடுத்த கிராமத்திலிருந்து முரசுச் செய்தி தெளிவாக முழங்கியது. பெரியவர்களைப் போலவே குண்டாவும் காதைத் தீட்டிக் கொண்டான். மூளையைக் கசக்கி முரசொலியின் பேச்சைப் புரிந்து கொள்ள முற்பட்டான். தன்னுடைய அப்பாவின் பெயரைக் கேட்டவுடன் லேமின் மூச்சிரைத்தான். எஞ்சிய செய்தியைப் புரிந்து கொள்ள அவனுடைய வயது அனுமதிக்கவில்லை. ஆகவே, குண்டா முரசுச் செய்தியை முணுமுணுத்தான். சூரியன் உதிக்கும் திசையில் அங்கிருந்து ஐந்து நாள் நடைப் பயண தூரத்தில், ஜானேவும் சலோமும் புதியதொரு கிராமத்தை உருவாக்கியிருந்தார்களாம். அடுத்த இரண்டாவது பிறை நாளில் நடைபெறவிருந்த திறப்பு விழாக் கொண்டாட்டங்களில் கலந்து கொள்ள அவர்களுடைய தம்பி ஓமோரோவுக்கு அழைப்பு விடுக்கப்பட்டது.

முரசுப்பேச்சு நின்றது. லேமின் தனது கேள்விகளைத் தொடுக்கத் தொடங்கினான். "அவர்கள் தான் நம்முடைய பெரியப்பாக்களா? அந்த இடம் எங்கே இருக்கிறது? அப்பா அங்கே செல்வாரா?" தம்பியின் வார்த்தைகளை அவன் கேட்டதாகத் தெரியவில்லை. கிராமத் தெருக்களினூடே புகுந்து ஓடி கிராமக் கலைஞருடைய குடிசையை அடைந்தான். கிராமத்தின் ஏனைய மக்களும் அங்கே திரண்டிருந்தனர். பிறகு, ஓமோரோ வயிறு பெருத்திருந்த தனது மனைவியுடன் சென்று சேர்ந்தார். அவரும் கிராமக் கலைஞரும் பேசிக் கொண்டிருந்ததை அனைவரும் கவனித்துக் கொண்டிருந்தனர். ஓமோரோ அவருக்குப் பரிசளித்தார். நெருப்பு மூட்டப்பட்டிருந்தது. அதனருகில் செய்தி அறிவிக்கும் முரசு கிடந்தது. அதனுடைய ஆட்டுத் தோல் பகுதியை மிதமிஞ்சிய விரைப்பு அடையும் வரை நெருப்பில் வாட்டினார். அனைவரும் வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருக்க கலைஞருடைய கரங்கள் முரசு வழியாகப் பேசின. "இன்ஷா அல்லா! அடுத்த இரண்டாவது பிறைக்கு முன்பாக ஓமோரோ புதிய கிராமத்தில் இருப்பார்" அடுத்த சில நாட்கள் ஓமோரோ சென்ற இடங்களிலெல்லாம், கின்டே குலமரபு தோற்றுவித்ததாக வரலாற்றில் இடம்பெறப் போகிற புதிய கிராமத்தை வாழ்த்தியும் ஓமோரோவைப் பாராட்டியும் கிராம மக்கள் அனைவரும் புகழ்ந்தனர்.

ஓமோரோ புறப்படுவதற்குச் சில நாட்களுக்கு முன்பிலிருந்து நினைத்துப் பார்க்க முடியாத மிகப் பெரிய எண்ணம் குண்டாவின் மனத்தை ஆட்கொண்டது. 'பயணத்தின் போது என்னையும் உடன் அழைத்துச் செல்வதற்குச் சற்றேனும் வாய்ப்பிருக்கிறதா?' குண்டாவால் வேறு எதைப் பற்றியும் சிந்திக்க முடியவில்லை. வழக்கத்திற்கு மாறான அவனுடைய இறுக்கத்தைக் கண்டு கொண்ட அவனுடைய சக மேய்ப்பர்கள், சிடாஃபா உட்பட, அவனைத் தனியே விட்டு விட்டனர். பெரிதும் சீராட்டி வந்த தன்னுடைய தம்பியிடம் எரிந்து விழுந்தான். வேதனையுடன் குழப்பமடைந்த லேமின் கூட ஒதுங்கிக் கொண்டான். குண்டாவிற்கே அவனுடைய நடவடிக்கைகள் பிடிக்கவில்லை.ஆனாலும், அவனால் எதுவும் செய்ய முடியவில்லை.

கொடுத்து வைத்த பயல்கள் சிலர் தம்முடைய தந்தையுடனோ, சித்தப்பாவுடனோ, பெரியவனாகிவிட்ட அண்ணனுடனோ பயணம் சென்றதைப் பற்றி அவன்

அறிந்திருந்தான். ஆனால், அவர்கள் அவனைப் போல எட்டு வயது மட்டுமே நிரம்பிய பொடியன்களல்ல என்பதையும் அறிந்திருந்தான். அவர்களுடைய மூதாதையர் வகுத்த சட்டத்தில் தந்தையற்ற பொடியன்களுக்கு விதிவிலக்காகச் சில சலுகைகள் வழங்கப்பட்டிருந்தன. தந்தையற்ற பொடியன்கள் பெரியவர்களுடன் அவர்கள் செல்லுமிடங்களுக்கெல்லாம், பல மாத பயணம் என்ற போதிலும் செல்லலாம். அதற்குச் சில நிபந்தனைகள் உண்டு. அவர்களுடன் நடந்து செல்லுமளவுக்கு அவனுக்கு வலுவிருக்க வேண்டும். சொன்ன பேச்சைக் கேட்டு நடந்து கொள்ள வேண்டும். எதற்கெடுத்தாலும் புகார் செய்பவனாக இருக்கக் கூடாது. பேசும்படி பணித்தாலொழிய குறுக்கே பேசக் கூடாது.

தன்னுடைய எண்ணத்தை யாரும், குறிப்பாக அம்மா, தெரிந்து கொள்ளக் கூடாது என்பதில் கவனமாக இருந்தான். மறுப்புத் தெரிவிப்பதுடன் அந்தப் பேச்சையே மீண்டும் எழுப்பக் கூடாது எனத் தடை விதித்து விடுவாள். உடன் செல்வதில் தனக்கிருந்த அளவில்லாத ஆவலை அப்பா அறிந்து கொள்ள இயலாமலே போய்விடக் கூடும். ஆகவே, தனியாகச் சந்திக்க நேர்ந்த போது அப்பாவிடமே கேட்டுவிடலாம் என்று வாய்ப்பினை எதிர்நோக்கியிருந்தான்.

ஓமோரோ புறப்படுவதற்குச் சரியாக மூன்று நாட்கள் இருந்தன. அப்பாவுடன் பயணிக்கும் நம்பிக்கையை குண்டா கிட்டத்தட்ட இழந்து விட்டான். காலைக் கஞ்சியைக் குடித்த பிறகு ஆட்டு மந்தையை ஓட்டிக் கொண்டு புல்வெளிக்குப் புறப்பட ஆயத்தமாகிக் கொண்டிருந்த போது ஓமோரோ பின்டாவின் குடிசையைவிட்டு வெளியேறியதைக் கண்டான். உடனே ஆடுகளை முன்னும் பின்னும் நகரவிடாதபடி கட்டுப்படுத்தியவாறு, பின்டா காண முடியாத திசையில் ஓமோரோ சற்று தூரம் செல்லும் வரை கவனித்துக் கொண்டிருந்தான். பிறகு, அது தான் சரியான வாய்ப்பென்று, ஆடுகளைத் தனியே விட்டு விட்டு, ஒரே ஓட்டமாகப் பாய்ந்து சென்று மூச்சிரைக்க அப்பாவிடம் நின்றான். திகைத்து நின்ற ஓமோரோ அவனுடைய மன்றாடிய முகத்தைப் பார்த்தார். மென்று விழுங்கிய குண்டா தான் சொல்ல நினைத்த வார்த்தைகள் ஒன்று கூட நினைவுக்குத் தட்டுப்படாமல் தவித்தான்.

நீண்ட நேரம் மகனையே பார்த்துக் கொண்டிருந்த ஓமோரோ, “இப்போத்தான் உன் அம்மாவிடம் சொல்லிவிட்டு வருகிறேன்” என்றார். உடனே புறப்பட்டு விட்டார்.

அவர் சொன்ன வார்த்தைகளின் பொருளை உணர்ந்து கொள்வதற்கு சில நொடிகளானது. “ஐய்ய்...” கத்திவிட்டான். கூச்சலிட்டதைக் கூட அவன் உணரவில்லை. குப்புற விழுந்து தத்தித் தாவி ஆடுகளைச் சென்றடைந்தான். ஒரே குதூகலம்! புல்வெளியை நோக்கி ஆடுகள் நான்கு கால் பாய்ச்சலில் பறந்தன.

ஒருவழியாகத் தன்னைச் சுதாரித்துக் கொண்டு, நடந்தவற்றைத் தன்னுடைய தோழர்களிடம் கூறினான். சொரத்தின்றிக் கேட்டுக் கொண்டிருந்த நண்பர்கள் பொறாமையால் எதுவும் பேசாமல் நகர்ந்தனர். ஆனால், பகல் பொழுது நெருங்கிய போது, தமது நண்பனுக்குக் கிடைத்த அற்புதமான நல்வாய்ப்பு

ஏற்படுத்திய உளக்கிளர்ச்சியைப் பங்கிட்டுக் கொள்ள முனைந்தனர். அதற்குள், முரசுச் செய்தியைக் கேட்டதிலிருந்து தனது தந்தை தன்னைப் பற்றிய சிந்தனையிலேயே ஆழ்ந்திருந்தார் என்கிற எண்ணம் அவனை ஆட்கொண்டதால் அமைதியாகிவிட்டான்.

மாலையில் மிகுந்த மகிழ்ச்சியுடன் ஆடுகளை ஓட்டிக் கொண்டு திரும்பியவன் அவற்றைப் பட்டியில் அடைத்து விட்டு நேரே பின்டாவின் குடிசைக்குச் சென்றான். அவனைக் கண்டவுடன் அவனுடைய கைகளை இறுகப் பற்றியபடி ஓங்கி அறைந்தாள். வெளவெளத்துப் போன குண்டாவிற்குத் தன் தாயிடம் அடித்ததற்கான காரணத்தை வினவக் கூடத் துணிவில்லை. அத்துடன், ஒமோரோவிடம் அவள் நடந்து கொண்ட விதம் குண்டாவிற்கு மிகுந்த அதிர்ச்சி அளித்தது. லேமினுக்குக் கூட நன்றாகத் தெரியும்! கணவன் முன்பு மனைவி இரைந்து பேசி எதிர்ப்புத் தெரிவிப்பது மாண்டிங்கா் இனத்தில் வழக்கமில்லை. கேட்கக் கூடிய தூரத்தில் ஒமோரோ நின்றிருந்தது தெரிந்தும் பெருங்கூச்சலாகக் கத்தினாள். பக்கத்திலுள்ள பல கிராமங்களிலிருந்து புதிது புதிதாக ஆட்கள் காணாமல் போய் விட்டதாக அடிக்கடி முரசு ஒலித்து அறிவித்துக் கொண்டிருந்த வேளையில் குண்டாவை அழைத்துக் கொண்டு காட்டு வழியில் நெடுந்தூரம் பயணம் செல்லத் துணிந்த செயல் அவளுக்குப் பிடிக்கவில்லை. தானியத்தை உரலில் போட்டு உலக்கையால் அவள் இடித்த ஒலி அவளுடைய உணர்வுகளை எதிரொலித்தது.

அடுத்த நாள் குண்டா, மீண்டும் அம்மா தன்னை அடித்துவிடுவாளோ என்கிற அச்சத்தால், குடிசையை விட்டு வெளியே அவசரமாகக் கிளம்பிக் கொண்டிருந்த வேளையில், பின்டா லேமினை இழுத்து அணைத்துப் பாச முத்தம் பொழிந்தாள். அவன் குழந்தையாக இருந்த போது கூட அத்தனை முத்தங்கள் கிடைத்திருக்க மாட்டா. லேமின் குண்டாவைப் பார்த்தபடி நெளிந்தான். ஆனால் இருவராலும் எதுவும் செய்ய இயலாது.

தனது தாயினுடைய குடிசையை விட்டு குண்டா வெளியே சென்ற போது, எதிர்ப்பட்ட பெரியவர்கள் ஒவ்வொருவரும் ஜுஃப்பூர் கிராமத்திலேயே மிகச் சிறுவயதில் பெரியவர்களுடன் நீண்ட தூரப் பயணம் செய்யும் நல்வாய்ப்புப் பெற்றவன் என்கிற முறையில் வாழ்த்துக்களைத் தெரிவித்தனர். அவன் பணிவுடன் நன்றி தெரிவித்தான். அதில் அவனுடைய குடும்பப் பயிற்சியின் பாங்கு தொனித்தது. ஆனால், பெரியவர்களின் பார்வை படும் தூரத்திற்கு அப்பால் சென்றவுடன், தனது தலையில் வழக்கத்தைக் காட்டிலும் கூடுதலான சுமையைச் சுமந்து சென்றிருந்ததைத் தனது நண்பர்களுக்குக் காட்டும் விதமாகப் பின்னங்கால்களால் உந்திக் குதிக்கத் தொடங்கினான். அப்படியொரு சுமையுடன் தனது தந்தையுடன் பயணம் செய்யவிருந்ததை நண்பர்களுக்குக் காட்ட வேண்டாமா? அவன் இரண்டு எட்டு எடுத்து வைக்கும் முன் மூன்று முறை சுமை தலையிலிருந்து நழுவி கீழே விழுந்தது.

மேய்ச்சலிலிருந்து திரும்பிக் கொண்டிருந்த வேளையில் அடுத்த நாள் பயணத்திற்கு முன் அவன் கிராமத்தில் செய்யவிருந்த செயல்களை அசைபோட்டான்.

அவற்றுள் முகாமையாக நியோ பாட்டி குடிசைக்குச் செல்ல வேண்டும் என்கிற எண்ணம் வலுவடைந்தது. ஆடுகளைப் பட்டியில் ஒப்படைத்த பிறகு, பின்டாவின் குடிசையிலிருந்து இயன்ற அளவு விரைவாக வெளியேறி, நியோ போட்டோ பாட்டியின் குடிசை முன்பு அமர்ந்தான். சற்று நேரத்தில் பாட்டி வெளிப்பட்டாள். "உன்னை எதிர்பார்த்துக் கொண்டு தான் இருந்தேன்!" என்றவாறு அவனை உள்ளே அழைத்தாள். வழக்கமாக, குண்டா பாட்டியினுடைய குடிசைக்குத் தனியாகச் சென்ற போதெல்லாம், இருவரும் சற்று நேரம் அமைதியாக உட்கார்ந்திருப்பர். அத்தகைய உணர்வினை குண்டா எப்போதும் விரும்பினான்; எதிர்பார்த்தான். குண்டா ரொம்பப் பொடியன்; பாட்டி மிகவும் வயதான மூதாட்டி. ஆனாலும், இருவருக்குமிடையே நெருக்கமான பிணைப்பு நிலவியது. குடிசையின் மங்கிய ஒளியில் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டு அமைதியாக அமர்ந்திருப்பதில் தனி ஆனந்தம்!

ஒருவழியாக பாட்டி பேசினாள், "உனக்காக ஒன்று வைத்திருக்கிறேன்!" தனது படுக்கைக்கு அருகில் சுவற்றிலிருந்து தொங்கிய பதனிடப்பட்ட மாட்டுத் தோல் பையிலிருந்து புயத்தைச் சுற்றிக் கட்டிக் கொள்ளக் கூடிய மந்திரிக்கப்பட்ட கறுப்புத் தாயத்து ஒன்றை வெளியிலெடுத்தாள். "இந்த தாயத்தை உன்னுடைய பாட்டனார் உனது தந்தை ஒமோரோ ஆம்பிளைகளுக்கான பயிற்சிக்குச் சென்ற போது மந்திரித்துக் கொடுத்தது. ஒமோரோவின் முதன் மகனுடைய பயற்சியின் போது கொடுப்பதற்காகப் பாதுகாக்கப்பட்டது. உனக்கு அது கொடுத்துவைத்துள்ளது. நீ பயிற்சிக்குச் செல்லும் போது உனக்குக் கொடுக்கும்படி கூறி உனது பாட்டி என்னிடம் ஒப்படைத்திருந்தாள். உனது தந்தையுடன் நீ செல்கின்ற பயணம் தான் உன்னைப் பொறுத்தவரை பயிற்சியாக அமையப் போகிறது." பாசமிகு பாட்டியை குண்டா அன்பொழுகப் பார்த்துக் கொண்டிருந்தான். எவ்வளவு தூரம் சென்ற போதிலும், அவன் செல்லக்கூடிய இடங்களிலெல்லாம் பாட்டியும் தன்னுடன் இருந்ததாக அந்தத் தாயத்து உணர்த்தப் போவதை அவனால் வார்த்தைகளால் வெளிப்படுத்த முடியவில்லை.

அடுத்த நாள் காலையில்,மசூதியில் தொழுகையை முடித்து விட்டுத் திரும்பியதிலிருந்து, அவனுடைய தலைச்சுமையை பின்டா சரிசெய்து முடிக்கும் வரை குண்டா பொறுமையாக நின்று கொண்டிருந்தான். முந்தைய இரவு முழுக்க பயணத்தைப் பற்றிய உணர்வெழுச்சிகளில் திளைத்திருந்ததால் உறக்கம் பிடிக்காமல் விழித்தபடி படுத்திருந்தான். அருகில் அம்மாவின் தேம்பல் கேட்டது. திடீரென அவள் குண்டாவை இறுக்கி அணைத்தாள். அவளுடைய உடல் நடுங்கியதை அவனால் உணர முடிந்தது. தன்மீது தாய் கொண்டிருந்த உண்மையான பாசத்தின் ஆழத்தை அவனுடைய வாழ்நாளில் முன்னெப்பொழுதைக் காட்டிலும் அந்தத் தருணத்தில் அவனால் முழுமையாக உணர முடிந்தது.

குண்டாவும் அவனுடைய தந்தையும் தற்பொழுது செய்ததை, ஏற்கனவே அவன் தன்னுடைய நண்பன் சிடாஃபாவுடன் சேர்ந்து பலமுறை பயிற்சி எடுத்திருந்தான். முதலில் ஒமோரோவும் அடுத்து குண்டாவும் குடிசையின் வாசலிலிருந்து வெளியே தெருப்புழுதியில் இரண்டு எட்டு எடுத்து வைத்துத் திரும்பி கீழே குனிந்து

தமது முதல் பாதச் சுவட்டிலிருந்து புழுதியை வழித்து எடுத்துத் தம்முடைய வேட்டைப்பையில் பாதுகாத்தனர். அதன் மூலம் அந்த மண்ணை மீண்டும் மிதிப்பதற்காகத் திரும்புவர் என்பது உறுதிப்படுத்தப்பட்டது.

பின்டா குடிசையின் வாயிற் கம்பத்தை ஒருகையால் பிடித்தபடி, லேமினை மறு கையால் தனது பருத்த வயிற்றுடன் அணைத்துக் கொண்டு, ஓமோரோவும் குண்டாவும் நடந்து சென்றதைக் கவனித்துக் கொண்டிருந்தாள். கடைசியாகத் திரும்பிப் பார்த்துவிட குண்டா துடித்தான். ஆனால், தந்தை அவ்வாறு செய்யவில்லை என்று கண்டு கொண்டவன், உணர்ச்சிகளை வெளிப்படுத்துவது ஆம்பிளைகளுக்கு அழகல்ல என்பதை நினைவிற் கொண்டான்; உடனே கண்கள் முன்நோக்கிப் பார்வையைச் செலுத்தின; கால்கள் பீடுநடை போட்டன. கிராமத்தினூடே அவர்கள் நடந்து சென்ற போது எதிர்ப்பட்டோரெல்லாம் அவர்களுக்கு வாழ்த்துத் தெரிவித்தனர். தனது வயதை ஒத்த நண்பர்களைப் பார்த்து குண்டா கையசைத்தான். நண்பனை வழியனுப்புவதற்காக அவர்கள் ஆடு மேய்க்கச் செல்வதைக் கூடத் தள்ளிப் போட்டுவிட்டனர். அவர்கள் அவனை வாழ்த்திப் பேசிய போதிலும் பதிலுக்கு அவனால் பேச முடியாது என்பதை அவர்கள் புரிந்து கொள்வார்கள் என்பது அவனுக்குத் தெரியும். ஏனெனில், பேசக் கூடாது என்பது மரபு. பயணியர் மரத்தை அடைந்தவுடன் நின்றனர். மரத்தின் தாழ்வான கிளைகளில் ஏற்கனவே நூற்றுக்கணக்கான துண்டுத் துணிகள் கட்டிவிடப்பட்டு பருவ மாற்றங்களால் நிறம் மங்கிக் கிழிந்து தொங்கிக் கொண்டிருந்தன. அவ்வழியே சென்ற பயணிகள் தமது பயணம் பாதுகாப்புடன் நிறைவேறி தாயகக் கிராமம் திரும்ப ஆசியருள வேண்டுமெனத் தொழுது பிணைக்கப்பட்டவை. ஓமோரோவும் இரண்டு துணிப்பட்டைகளைக் கட்டிவிட்டுத் தொழுது கொண்டார்.

நடந்தவற்றை உண்மையென குண்டாவால் நம்ப முடியவில்லை. தன்னுடைய வாழ்நாளிலேயே முதன்முறையாகத் தாயின் குடிசைக்கு வெளியே இரவு நேரத்தைக் கழிக்கப் போகிறான்! ஜுஃப்பூர் கிராமத்தின் நுழைவாயிலுக்கு அப்பால், வழிதவறியோடிய அவனுடைய ஆடு ஒன்றைக் காட்டிலும் கூடுதல் தொலைவு முதன்முறையாகப் பயணிக்கப் போகிறான்!! அவ்வாறு பலவும் அவனுடைய வாழ்க்கையில் முதன்முறையாக நேரப் போகின்றன!!! அத்தகைய சிந்தனையில் குண்டா மூழ்கியிருந்த போது, ஒரு வார்த்தையும் பேசாமலும் பின்னோக்கிப் பார்க்காமலும் ஓமோரோ திரும்பி காட்டிற்குள் சென்ற ஒற்றையடிப் பாதையில் மிக வேகமாக நடையைக் கட்டினார். தலைச்சுமை கிட்டத்தட்ட கீழே விழுந்துவிடும் போலிருந்தது. அப்பாவைப் பின்பற்றி குண்டா விரைந்தோடினான்.

# 18

**அ**ப்பாவுக்குப் பின்னால் இரண்டு தப்படி தொலைவில் தொடர்ந்து செல்வதற்கு குண்டாவைப் பொறுத்தவரை ரொம்பவே கடினமாக இருந்தது. அப்பாவுடைய நீண்ட, சீரான ஒரு எட்டுக்கு அவன் தன்னுடைய சிறிய பாதங்களால் வேகமாக இரண்டு எட்டுகள் வைக்க வேண்டியிருந்தது. அரை மணி நேரத்திற்குப் பிறகு, அவனுடைய பாதங்களைப் போலவே அவனுடைய உத்வேகமும் குறையத் தொடங்கியது. தலைச் சுமை மேலும் மேலும் பளுவடைந்து விட்டதைப் போல உணர்ந்தான். படுபயங்கரமான எண்ணம் உதித்தது; ஒருவேளை, அப்பாவுடைய வேகத்திற்கு ஈடு கொடுக்க முடியாத அளவுக்குக் களைப்படைந்து விட்டால்? உடனே, தன்னைத் தானே மிகக் கடுமையாகக் கடிந்து கொண்டான். அப்படி ஏதாவது நேருவதற்குள் வழியிலேயே சுருண்டு விழுந்துவிட வேண்டியது தான்!

காட்டுப் பகுதியை அவர்கள் கடந்து சென்ற போது, ஆங்காங்கே, காட்டுப் பன்றிகள் புதர்களுக்குள் ஓடி ஒளிந்தன; தேன்சிட்டுக்கள் வானில் விர்ர்ரிட்டன; முயல்கள் ஒளிவிடங்களைத் தேடி ஓடின. ஓமோரோவுக்கு ஈடுகொடுத்து நடப்பதில் உறுதி பூண்டிருந்த குண்டா யானையே கடந்து சென்றிருந்தாலும் கவனித்திருக்க

மாட்டான். குண்டாவின் முழங்கால்களுக்குக் கீழே கண்டைச்சதைகள் சற்றே வலியெடுக்கத் தொடங்கின. தலை, முகமெல்லாம் வேர்த்துக் கொட்டியது. தலைச்சுமை அந்தப் பக்கமும் இந்தப் பக்கமுமாக நழுவிக் கொண்டே இருந்தது. தன்னுடைய இரு கரங்களையும் மேலே உயர்த்தி சமனப்படுத்திக் கொண்டே நடந்தான்.

சற்று நேரத்திற்குப் பின்னர், எதிரே ஏதோவொரு சிறிய கிராமத்தின் பயணியர் மரத்தை நெருங்கிக் கொண்டிருந்ததைக் கண்டான். அது எந்தக் கிராமமாக இருக்கும்? அதன் பெயரை அப்பா சொன்னால் தெரிந்து கொள்ளலாம்! ஆனால், அவரோ, ஜுஃப்யூரை விட்டுப் புறப்பட்டதிலிருந்து பேசவும் இல்லை; திரும்பிப் பார்க்கவும் இல்லை! சில நிமிடங்கள் கழித்து, தங்களை நோக்கிச் சில அம்மணப் பயல்கள் ஓடி வந்ததைக் கண்டான். தன்னுடைய கிராமப் பயணியர் மரத்தருகே அவனும் அவ்வாறு செய்தானல்லவா? அவர்களை வரவேற்பதைப் போல, கையசைத்துக் கூச்சலிட்டனர். பெரிய ஆளுடன் ஒரு பொடியன் பயணம் செய்ததைக் கண்ட அவர்களுடைய கண்கள் அகல விரிந்தன.

குண்டாவின் இருபுறமும் முண்டியடித்துக் கொண்டு கூடவே நடந்தவர்கள், பேச்சுக் கொடுத்தனர். "எங்கே போகிறாய்? அவரு ஓங்கப்பாவா? மாண்டிங்கர் இனமா? உன்னுடைய கிராமம் எது?'' களைப்படைந்திருந்த குண்டா தகப்பனாரைப் போலவே அவர்களுடைய கேள்விகளைப் புறக்கணித்தான். முதிர்ச்சியும் முக்கியத்துவமும் அடைந்துவிட்டானல்லவா?

ஒவ்வொரு பயணியர் மரத்திற்கு அருகிலும் ஒற்றையடிப் பாதை பிளவுண்டது. ஒன்று கிராமத்திற்குள் இட்டுச் சென்றது. மற்றொன்று கிராமத்தைக் கடந்து நீண்டது. அந்தக் கிராமத்தில் பணி எதுவும் இல்லாதவர்கள் தொடர்ந்து செல்ல ஏதுவாக இருந்தது. ஒமோரோவும் குண்டாவும் கிராமத்தைக் கடந்து சென்ற பாதையில் தமது பயணத்தைத் தொடர்ந்தனர். குழந்தைகள் ஏமாற்றத்துடன் பார்த்துக் கொண்டிருந்தனர். ஆல மரத்தடியில் அமர்ந்திருந்த பெரியவர்கள் சொரத்தின்றி நோட்டமிட்டனர். மாண்டிங்க இன மூதாதையரைப் போற்றி கதைப்பாடல்களைப் பாடுவோரைத் தான் வற்புறுத்திக் கேட்டுக் கொள்வர். குண்டாவும் அதுபோன்றோருடைய நிகழ்ச்சிகளை ஆர்வத்துடன் கேட்டிருந்தான். தனது பெரியப்பாக்களின் புதிய கிராமத்தினைப் போற்றிப் பாடுவதற்கும் இசைக்கலைஞர்கள் பலர் சென்றிருப்பர் என்று குண்டா நினைத்துக் கொண்டான்.

நெற்றி வழியே வழிந்த வியர்வை கண்களுக்குள் இறங்கியது. எரிச்சல் தாளாமல் கண்களைச் சிமிட்டினான். அவர்கள் பயணத்தைத் தொடங்கியதிலிருந்து சூரியன் தனது வானப்பாதையில் பாதி தூரம் மட்டுமே பயணித்திருந்தது. ஆனால், அவனுடைய கால்கள் கடுமையாக வலியெடுத்தன. பயணத்தைத் தொடர முடியுமா என்கிற அச்சவுணர்வு ஏற்படும் அளவிற்கு தலைச்சுமை கனத்தது. மனக்குழப்பம் உச்சத்தை அடைந்து கொண்டிருந்த நேரத்தில் அவனுடைய தகப்பனார் திடீரென நின்றார். பாதையருகில் தெள்ளிய குளக்கரையில் தலைச்சுமையை இறக்கித் தரையில் வைத்தார். தள்ளாடிய கால்களை கட்டுப்படுத்திக் கொள்ளும் முயற்சியில்

குண்டா ஒருகணம் நின்றான். தலைச்சுமையை கீழே இறக்குவதற்காக கைகளை உயர்த்தினான். விரல்களின் பிடி நழுவியதால் தொப்பென்று விழுந்தது. தலைச்சுமை விழுந்த சத்தம் அப்பாவிற்குக் கேட்டிருக்கும் என்றெண்ணி பீதியடைந்தான். ஆனால், ஓமோரோ, மகன் இருந்ததைக் கண்டு கொண்டதாகவே தெரியவில்லை; மண்டியிட்டு ஊற்று நீரைப் பருகிக் கொண்டிருந்தார்.

குண்டாவிற்குத் தனது தாகத்தை உணர்ந்து கொள்ளக் கூடச் சக்தியில்லை; மெல்ல நொண்டியபடி குளக்கரையின் விளிம்பினை அடைந்தான். நீர் குடிப்பதற்காக மண்டியிட முயன்றான்; அவனுடைய கால்கள் ஒத்துழைக்க மறுத்தன. மீண்டும் முயன்றும் பயனின்றிப் போனதால், குப்புற விழுந்து முழங்கைகளை ஊன்றித் தவழ்ந்து சென்று, ஒருவழியாக நீர்ப்பரப்பின் மீது வாயை வைத்தான்.

"கொஞ்சமாகக் குடி!", ஜுஃப்யூரிலிருந்து புறப்பட்டதிலிருந்து முதன்முறையாக அப்பா பேசியதைக் கேட்ட குண்டா அதிர்ந்தான். "கொஞ்சமாக விழுங்கிவிட்டு, சற்று பொறுத்து, மீண்டும் கொஞ்சம் குடி!" ஏதோ காரணத்திற்காக அப்பா மீது அவனுக்குக் கோபம் வந்தது. 'சரிப்பா!' என்று சொல்ல முயன்றான். சத்தம் வெளிவரவில்லை. குளிர்ந்த நீரில் சிறிதளவு குடித்து விட்டு, பொறுத்திருந்த போது, அப்படியே மயங்கி விழுந்துவிடத் தோன்றியது. மேலும் சிறிதளவு நீரைக் குடித்துவிட்டு, நிமிர்ந்து உட்கார்ந்து குளத்தருகிலேயே சற்று நேரம் ஓய்வாக இருந்தான். ஆம்பிளைகளுக்கான பயிற்சி கூட அப்படித்தான் இருக்கும் போல என்று எண்ணமிட்டான். நிமிர்ந்து உட்கார்ந்தவாறே உறங்கிவிட்டான்.

எவ்வளவு நேரம் தூங்கினானோ தெரியவில்லை. பரபரப்பாக விழித்துப் பார்த்த போது ஓமோரோவை எங்குமே காணவில்லை. துள்ளியெழுந்தவன், பெரிய தலைச்சுமையை அருகிலிருந்த ஒரு மரத்தடியில் பார்த்தான். ஆகவே, அப்பா ரொம்பத் தூரத்தில் இல்லை. சுற்றுமுற்றும் நோட்டமிட்ட போது அவனுடைய கால்கள் வீங்கியிருந்தது தெரிந்தது. உடலைக் குலுக்கி நீட்டி நெட்டுவிட்டான். தசை நார்கள் வலித்தன. ஆனால், சற்றே தெம்பாக இருந்தது. மண்டியிட்டு மேலும் சில மிடறு நீர் குடித்தான். குளத்தின் நீர்ப்பரப்பில் அவனுடைய முகம் தெரிந்தது. அகன்ற விழிகளுடனும் பருத்த வாயுடனும் ஒடுங்கிய கறுத்த முகம்! தன்னைப் பார்த்து குண்டா தானாக சிரித்தான். பிறகு, பற்கள் அனைத்தும் தெரியும்படி இழித்தான். பலத்த சிரிப்பை அவனால் அடக்க முடியவில்லை. மேலே பார்த்தபோது அப்பா அருகில் நின்றிருந்தது தெரிந்தது. உடல் நெளிய எழுந்தான். ஆனால், அவருடைய கவனம் வேறு ஏதோ ஒன்றில் பதிந்திருந்தது போல தோன்றியது.

மரங்களின் நிழலில், தலைக்கு மேலே, மந்திகள் உரத்த ஒலியுடன் தாவிக் கொண்டிருக்க, கிளிகள் கிரீச்சிட்டுக் கொண்டிருக்க, யாருமே ஒரு வார்த்தையும் பேசாமல், தலைச்சுமையுடன் கொண்டு வந்திருந்த உணவில் சிறிதளவை, அவன் உறங்கிக் கொண்டிருந்த போது ஓமோரோ வில்லம்புகளால் வீழ்த்தி நெருப்பில் சுட்டுத் தயாரித்த கொழுத்த காட்டுப் புறாக்களின் இறைச்சிச் சுவையுடன் உட்கொண்டனர். சாப்பிட்டுக் கொண்டிருந்த போதே, குண்டா எண்ணமிட்டான். முதன்முறையாக, தன்னுடைய அப்பாவிடம் தனக்கும் சிறு விலங்குகளையும்

பறவைகளையும் வீழ்த்தி நெருப்பில் வாட்டி உணவு தயாரிக்கத் தெரியும் என்பதைக் காட்டிக் கொள்ள வாய்ப்புக் கிடைக்கப் போகிறது! புல்வெளியில் தனது தோழர்களுடன் அதுபோன்ற ஆட்டங்களில் திளைத்திருந்தானல்லவா?

சாப்பிட்டு முடித்த போது வான்பாதையில் சூரியன் தனது பயண தூரத்தில் முக்கால் பங்கு முடித்திருந்தான். ஆக, வெப்பம் தணிந்திருந்தது. தலைச்சுமைகள் தலையிலேற்றப்பட்டு சமநிலைப்படுத்தப்பட்டன. மீண்டும் காட்டுப் பாதையில் அவர்களுடைய பயணம் தொடங்கியது.

நீண்ட தூரம் நடந்த பிறகு ஒமோரோ சொன்னார், "பரங்கியர் தமது கலன்களை கொண்டு செல்லும் இடம் இங்கிருந்து ஒரு நாள் நடைப்பயண தூரத்தில் உள்ளது. தற்பொழுது பகல் நேரம் என்பதால் நம்மால் பார்க்க முடியும். இருந்தாலும், புதர்களையும் உயரமான மறைவிடங்களையும் தவிர்க்க வேண்டும். அங்கே அவர்கள் ஒளிந்திருக்கக் கூடும்!" ஒமோரோவின் விரல்கள் வாளின் உறையையும் வில் அம்புகளையும் தடவின. "இன்றிரவு ஏதேனுமொரு கிராமத்தில் உறங்க வேண்டும்"

அப்பாவுடன் இருந்ததால் பயப்படத் தேவையில்லை. ஆனாலும், வாழ்க்கை முழுவதும் காணாமற் போனவர்களைப் பற்றியும் கவர்ந்து செல்லப்பட்டவர்களைப் பற்றியும் மற்றவர்கள் மூலமாகவும் முரசுச் செய்திகள் மூலமாகவும் கேட்டு வளர்ந்து விட்டபடியால், அவனை அறியாமலே அவனுடைய உடலெங்கும் பய உணர்வு மின்னல் கீற்றுப் போல ஓடிப்பரவியது. சற்றே விரைவாக நடந்து கொண்டிருந்த பொழுது, வழித்தடத்தில் கழுதைப்புலியின் சாணம் தென்பட்டது. முல்லைப் பூ போன்ற வெள்ளை நிறம்! ஏனென்றால் கழுதைப்புலிகளின் தாடைகள் எலும்புகளை மென்று நொறுக்கித் தின்றுவிடும் அளவிற்கு வலுவானவை. பாதையின் அருகில் கூட்டமாக மேய்ந்து கொண்டிருந்த மான்கள் மனிதர்கள் நெருங்கியதைக் கண்டு சற்றே நிறுத்தி அவர்கள் கடந்து சென்றதைக் கவனித்தவாறு சிலைகளாக நின்றிருந்தன.

சிறிது நேரம் கழித்து ஒமோரோ கத்தினார், "யானைக் கூட்டம்!" குண்டா சுற்றிலும் மிதிபட்ட புதர்களைக் கண்டான். இளம் மரங்கள் நார் நாராகக் கிழிக்கப்பட்டிருந்தன. உயரமான மரங்களின் உச்சியில் இருந்த தளிர்களைச் சுவைப்பதற்காக தும்பிக்கைகளைக் கொண்டு வளைத்ததில் பெரிய மரங்களின் வேர்கள் பாதி வெளிப்பட்டன. கிராமங்களுக்கு அண்மையில், மக்கள் கூட்டம் அதிகமிருக்கும் இடங்களில் யானைக் கூட்டம் இரை தேடுவதில்லை என்பதால், குண்டா தனது எட்டு வயது வாழ்நாளில் வெகு தொலைவி லிருந்தபடி, ஒன்றிரண்டு யானைகளை மட்டுமே பார்த்திருந்தான். குண்டா ரொம்பச் சின்னப் பையனாக இருந்த போது, ஒரு சமயம் காட்டுத் தீ பற்றி எரிந்தது. இடியோசை எழுப்பிக் கொண்டு ஆயிரக்கணக்கான விலங்குகள் பயந்தோடின. அவற்றிடையே அவன் யானைகளையும் தொலைவிலிருந்து பார்த்தான். அல்லாவின் கருணையால் மழை பொழிந்து தீ அணைக்கப்பட்டதால், ஜுஃப்யூர் போன்ற பல கிராமங்கள் காப்பாற்றப்பட்டன.

காட்டுப் பாதை வழியாக அவர்கள் முன்னோக்கிச் சென்று கொண்டிருந்த போது, குண்டாவின் மனத்தில் ஒரு செய்தி உருப்பெற்றது. மனிதர்கள் மிதித்து நடந்து சென்றதால் தடம் ஏற்பட்டு பாதை உண்டானது போல, சிலந்திகளும் தாம் சென்ற பாதை நெடுகிலும் மெல்லிய இழைகளை விட்டுச் சென்று பாதை காட்டுகின்றன. மனிதர்களுக்குப் போலவே புழு, பூச்சிகளுக்கும் விலங்குகளுக்கும் கூட அல்லா கருணை காட்டுகிறார் என்பதை உணர்ந்து குண்டா வியந்தான். அப்படிப்பட்ட சிந்தனை அவனுக்கு அதற்கு முன்பு உதித்ததில்லை. அவனுக்கு அப்பொழுது அப்பாவிடம் உடனே அது பற்றிக் கேட்டுவிட வேண்டும் போல தோன்றியது. பூச்சிகளைக் காட்டிலும் மிகச் சிறியவை பற்றியெல்லாம் கேள்விகள் எழுப்பிய லேமின் அதுபற்றி எதுவும் தன்னைக் கேட்காமலிருந்தது மேலும் வியப்பளித்தது. ஜுஃப்யூருக்குத் திரும்பிய பின்னர் தம்பியிடம் பேசுவதற்கு நிறையச் செய்திகள் கிடைத்து விட்டதாக எண்ணினான். அதே போல புல்வெளிகளில் மாதக் கணக்கில் சக மேய்ப்பர்களுடன் கதைப்பதற்கும் ஏராளமான செய்திகள் இருந்தன.

ஓமோரோவுக்கும் குண்டாவிற்கும் அவர்கள் வாழ்ந்த நாட்டிலிருந்து வித்தியாசமானதொரு நாட்டில் பயணித்துக் கொண்டிருந்ததாகப் பட்டது. அவர்கள் அதற்கு முன் கண்டிராத தடித்த புல்வெளிகளில் சூரியன் மறைந்து கொண்டிருந்தான். அவர்களுக்கு மிகவும் பழக்கமான பனை போன்ற மரங்கள் கூட மிகவும் பருத்தும் உயரமாகவும் தென்பட்டன. ஜுஃப்யூர் கிராமத்தைச் சுற்றிலும் கடி வண்டுகளுடன், பிள்ளை மொழி பேசிய கிள்ளைகளும் இன்னிசை பாடிய பறவைகளையும் கண்டிருந்தனர். ஆனால், தற்பொழுது அவர்கள் பயணித்துக் கொண்டிருந்த பகுதியில் அவற்றைக் காண முடியவில்லை. வான உச்சியில் வட்டமிட்டு இரை தேடிக் கொண்டிருந்த பருந்துகளும் செத்து அழுகியவற்றை வேட்டையாடிய வல்லூறுகளும் மட்டுமே கண்களில் தட்டுப்பட்டன.

செந்நிறச் சூரியப் பந்து பூமியைத் தொட்டு விளையாட முற்பட்ட பொழுதில், ஓமோரோவுக்கும் குண்டாவுக்கும் எதிரே உயரத்தில் அடர்ந்த புகைச் சுருள்கள் மேலெழும்பி கிராமமொன்று அண்மையில் இருந்ததை அடையாளம் காட்டின. பயணியர் மரத்தைச் சென்றடைந்த போது, அந்தக் கிராமம் ஏதோ ஒருவிதத்தில் சரியில்லை என்று குண்டாவிற்குக் கூட நன்கு புலனானது. மரத்தின் கிளைகளில் ஒரு சில துணிப்பட்டைகள் மட்டுமே தொங்கிக் கொண்டிருந்தன. இரண்டு செய்திகள் தெளிவாயின. அந்தக் கிராமத்தில் வாழ்ந்த ஒரு சிலரும் ஊரைவிட்டு வெளியே பயணப்பட்டதில்லை. ஏனைய கிராமத்திலிருந்து பயணப்பட்டு அந்த இடத்தை அடைந்தவர்களும் கிராமத்திற்குள் நுழையாமல் கடந்து சென்றுவிட்டனர். அந்தோ! அவர்களை எதிர்கொள்ள குழந்தைகளும் கூட ஆவலுடன் ஓடிவரவில்லை.

கிராமத்தின் ஆலமரத்தைக் கடந்த போது அது ஒரு பகுதி எரிந்து காணப்பட்டது. கண்களில் பட்ட மண்குடிசைகளில் பாதிக்கு மேல் வெறிச்சோடிக் கிடந்தன. முற்றங்களில் குப்பைகள் நிறைந்திருந்தன. முயல்கள் ஓடிப்பிடித்து விளையாடிக் கொண்டிருந்தன. புழுதியில் குளித்தெழுந்த பறவைகள் சிறகுலர்த்திக்

கொண்டிருந்தன. குடிசைகள் வாயில்களில் சாய்ந்திருந்தோரும் படுத்துக் கிடந்தோரும் கிழவர்களாகவும் நோயாளிகளாகவும் இருந்தனர். குழந்தைகள் என்கிற பெயரில் ஒரு சில சிசுக்கள் அழுதுகொண்டிருந்தன. குண்டாவின் வயதை ஒத்தவர்களோ, ஓமோரோ அளவிற்கு இளமையானவர்களோ கூட தட்டுப்படவே இல்லை.

வற்றி வறண்டு சுருக்கங்கள் நிறைந்து வலிமையற்றுப் போன வயசாளிகள் பலர் பயணிகளை வரவேற்றனர். அவர்களுள் மிகவும் வயதான ஒருவர் தன்னுடைய கைத்தடியைத் தட்டியவாறு, பல்லிழந்த கிழவி ஒருத்தியிடம் பயணியருக்கு நீரும் கஞ்சியும் கொண்டு வரும்படி ஆணையிட்டார். அவள் ஓர் அடிமையாக இருக்க வேண்டும். குண்டா நினைத்தான். பின்னர், கிராமத்தில் நடந்ததை விவரிப்பதற்கு வயசாளிகள் ஒருவரை ஒருவர் முந்திக் கொண்டு முற்பட்டனர். ஒருநாள் இரவில் அடிமைகளைக் கவர்ந்து செல்வோர் படையெடுத்து இளைஞர்களையெல்லாம் கொன்றனர் அல்லது இழுத்துச் சென்றனர். முதலில் ஓமோரோவையும் அடுத்து குண்டாவையும் சுட்டிக் காட்டிய கிழவர் ஒருவர் கூறினார், “உன்னுடைய வயது முதல் இவனுடைய வயதுவரை அனைவரையும்... கிழவர்களாகிய எங்களை மட்டும் விட்டு வைத்தனர். நாங்கள் காடுகளுக்குள் சென்று பதுங்கிக் கொண்டோம்”

பயந்து ஓடியவர்கள் திரும்பிச் செல்வதற்குள் கிராமம் பலவாறு சிதிலமடைந்து விட்டது. அவர்களால் சாகுபடி செய்யவும் இயலாது; தவச, தானியங்களும் இல்லை; உடலில் வலிமையுமில்லை. “எங்களுடைய இளைஞர்கள் இல்லாமல் நாங்கள் சாகத் தான் போகிறோம்” அவர்களுள் ஒரு வயசாளி கூறினார். அவர்கள் கூறியவற்றைப் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்த ஓமோரோ மெதுவாக மென்மையான குரலில் பேசினார். “இங்கிருந்து நான்கு நாள் பயண தூரத்தில் உள்ள என்னுடைய அண்ணன்மாரின் கிராமத்திற்கு வந்து விடுங்கள், பாட்டய்யா! உங்களை நன்கு கவனித்துக் கொள்வார்கள்”

அனைவரும் ஒருசேரத் தலையைக் குலுக்கினர். மிகவும் வயதான அந்தப் பெரியவர் வாய் திறந்தார், “இது எங்களுடைய கிராமம். எந்த ஊர்த் தண்ணீரும் எங்க கிணத்துத் தண்ணியைப் போல இனிக்காது. எங்க ஊர் மரநிழல் போல எந்த ஊரிலும் இதமாக இருக்காது. எங்களுடைய பெண்களின் அடுக்களைகளிலிருந்து பரவும் மணத்திற்கு இணையாக எங்கேயும் கிடைக்காது.”

விருந்தினர்களுக்குத் தனியே குடிசை அளிக்க முடியாததற்கு வருத்தம் தெரிவித்தனர். விண்மீன்களுக்குக் கீழே உறங்குவது தங்களுக்குப் பிடிக்குமென்று ஓமோரோ கூறினார். தலைச்சுமையில் வைத்திருந்த உணவுப் பண்டத்தில் ஓரளவு எடுத்து கிராமத்தாருடன் பகிர்ந்து உண்டனர். இலை தழைகளைப் படுக்கையாக்கிப் படுத்தனர். குண்டா தான் கேட்ட செய்திகளையெல்லாம் அசை போட்டபடி படுத்திருந்தான். ஜுஃப்யூர் கிராமத்தில் அது போல நடந்து, ஓமோரோ, பின்டா, லேமின், அவனும் கூட கொல்லப்படவோ, பிடித்துச் செல்லப்படவோ நேர்ந்திருந்தால்...? ஆலமரம் பாதி எரிந்து கிடக்கவும் முற்றங்களில் குப்பை கூழங்கள் நிறைந்திருக்கவும் நேரிட்டால்...? வேறு ஏதாவது பற்றிய எண்ணத்தை வரவழைத்துக் கொள்ள குண்டா மிகவும் அல்லாடினான்.

பிறகு, இருட்டில், எங்கிருந்தோ கொடிய விலங்கு ஒன்று எளிய காட்டு விலங்கைக் கவ்வியதால் எழுப்பப்பட்ட அவலக் குரல் கேட்டது. மனிதனும் மனிதனைக் கவர்ந்து செல்கிறான். தொலைவில் கழுதைப்புலி ஊளையிட்டது கேட்டது. மழையாயினும், வெயிலாயினும், அறுவடைக் காலமானாலும் பசி, பட்டினிக் காலம் என்ற போதிலும் இரவுதோறும் கழுதைப்புலியின் ஊளைச் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. அன்றிரவு பழக்கப்பட்ட அந்த ஒலி கூட ஆறுதல் அளித்ததாக நினைத்தபடி உறங்கிப் போனான்.

# 19

**பொ**ழுது புலரத் தொடங்கியவுடன் குண்டா விழித்துக் கொண்டான். துள்ளி எழுந்தான். அவனுடைய படுக்கைக்கு அருகே விநோதமானதொரு கிழவி உரத்த, உடைந்த குரலில் இரண்டு மாதங்களுக்கு முன்பு அவனுக்கு அவள் அனுப்பி வைத்த உணவு என்னாயிற்று என்று வினவினாள். குண்டாவிற்குப் பின்னால் நின்றிருந்த ஓமோரோ மெல்லிய குரலில் பேசினார், "என்ன ஆச்சுன்னு தெரியலையே, பாட்டி"

காலைக் கடன்களை முடித்து சாப்பிட்டு விட்டு அந்தக் கிராமத்திற்கு அப்பால் விரைந்து சென்று கொண்டிருந்த போது, குண்டாவிற்கு நினைவில் பட்டது. ஜுஃப்பூர் கிராமத்தில் அலைந்துகொண்டிருந்த கிழவி ஒருத்தி எதிர்ப்பட்டோர் கண்களை உற்றுப் பார்த்து, "நாளை என் மகள் வந்து சேருவாள்" என்று மகிழ்ச்சி பொங்க சொல்லித் திரிந்தாள். அவளுடைய மகள் பல ஆண்டுகளுக்கு முன்பு காணாமல் போனாள் என்பது அனைவருக்கும் தெரியும். அவள் திரும்பி வருவாளா என்பதைச் சோதிக்க வெட்டிய வெள்ளைச் சேவல் பின்புறமாக விழுந்து செத்தது. ஆனாலும், அவள் நிறுத்திக் கேட்ட ஒவ்வொருவரும், "ஆமாம், பாட்டி, நாளைக்கு" என்று பொறுமையாக ஒத்துக் கொண்டனர்.

உச்சிப் பொழுதுக்குச் சற்று முன்பாக அந்த ஒற்றையடிப் பாதையில் தனித்ததோர் உருவம் அவர்களை நோக்கி நெருங்கியதைக் கண்டனர். முந்தைய நாள் கூட இரண்டு மூன்று பயணியர் புன்னகையையும் வாழ்த்துக்களையும் பரிமாறியபடி அவர்களைக் கடந்து சென்றனர். ஆனால், அன்றைக்கு எதிர்ப்பட்ட கிழவர் அவர்களுடன் பேச விரும்பினார் என்பது புலப்பட்டது. அவன் வந்துகொண்டிருந்த திசையைக் காட்டி, “அங்கே ஒரு பரங்கியைக் காண்பீர்கள்!” என்றார். ஓமோரோவுக்குப் பின்னால் நடந்துகொண்டிருந்த குண்டாவுக்கு மூச்சு நின்றுவிட்டது. கிழவர் தொடர்ந்தார், “அவனுடைய சுமைகளைத் தலையில் சுமக்கும் பலர் அவனுடன் இருந்தனர். என்னைப் பார்த்ததும் நிறுத்தி, ஆற்று நீர்வழி தொடங்கும் இடத்தைக் காண உதவும்படி கேட்டான். ஆறு முடியும் இடத்திலிருந்து வெகு தொலைவில் தொடங்குகிறது என்றேன்”

“உங்களுக்குத் தொல்லை தர வில்லையா?”

கிழவர் கூறினார், “என்னிடம் என்னவோ நட்பாகத் தான் நடந்து கொண்டான். ஆனால், எப்போதுமே பூனைக்குத் தான் விளையாடுவதற்கு ஏற்ற எலிக்குட்டியைத் தானே பிடிக்கும்!”

“அதுவென்னவோ உண்மை தான்”

ஆட்களைத் தேடாமல் ஆற்றைத் தேடிய அந்தப் புதுமையான பரங்கியைப் பற்றித் தந்தையிடம் குண்டா வினவ எண்ணினான். ஆனால், கிழவரிடமிருந்து விடை பெற்றுக் கொண்ட ஓமோரோ குண்டா தன்னைத் தொடர்ந்து வருகின்றானா என்பதைக் கூடக் கண்டுகொள்ளாமல் ஒற்றையடிப் பாதை வழியே விரைந்தார். இந்த முறை குண்டாவுக்கு மகிழ்ச்சி தான்! தனது மகன் தலைச்சுமையை இரு கைகளாலும் தாங்கியபடி தனக்கு ஈடு கொடுக்கும் விதமாக வலியையும் பொருட்படுத்தாமல் தொடர்ந்து சென்றதை அவர் பார்த்திருக்கக் கூடும். குண்டாவின் பாதங்களில் குருதி கொட்டத் தொடங்கியது. ஆனால், அதனைக் கண்டு கொள்வது ஆண்மகனுக்கு அழகில்லை என்பதை அறிந்திருந்தான். அது பற்றித் தனது தந்தையிடம் வெளிப்படுத்தவில்லை.

அன்று பின்நாளில், ஒரு வளைவில் திரும்பிய போது, பாதைக்கு மிகவும் அண்மையில் புல்வெளியில், பெரியதொரு ஆண்சிங்கம், அழகிய பெண்சிங்கம், இரண்டு சிங்கக்குருளைகள் அடங்கிய சிங்கக் குடும்பம் ஒன்று எதிர்ப்பட்ட போதிலும் குண்டா தனது பேரச்சத்தை விழுங்கிக் கொண்டதற்குக் கூட அதுவே காரணம். குண்டாவிற்குச் சிங்கங்கள் என்றால் ரொம்பப் பயம். ஆடுகளை மேய்க்கும் போது, ஏதேனும் வெள்ளாடு தப்பியோடிவிட்டதென்றால் ஒளிந்து மறைந்திருக்கும் சிங்கம் ஒரே பாய்ச்சலில் நார் நாராகக் கிழித்துவிடும்.

ஓமோரோ மெதுவாக நடை போட்டார். மகனுடைய அச்சத்தை உணர்ந்தவராக, சிங்கங்களின் மீது பதித்த பார்வையை விலக்கிக் கொள்ளாமல் மெதுவாகக் கூறினார், “பசியாக இல்லாவிட்டால், இந்த வேளையில் அவை வேட்டையாட மாட்டா. அவை கொழுத்துக் கிடக்கின்றன” ஆனாலும், வில்லில் ஒரு கையும்

அம்பறாத்தூணியில் மறுகையும் வைத்தபடி அவற்றைக் கடந்து சென்றார். குண்டா மூச்சைப் பிடித்துக் கொண்டு நடந்தான். கண்பார்வைக்கு மறையும் வரை அவனும் சிங்கங்களும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்தனர்.

சிங்கங்களைப் பற்றியும் பரங்கியைப் பற்றியும் அத்தகைய எதிரிகளால் விளையக் கூடியவை பற்றியும் அவன் தொடர்ந்து சிந்தனையில் ஆழ்ந்திருக்கக் கூடும். ஆனால், அவனுடைய கால்வலி எதைப்பற்றியும் சிந்திக்கவிடவில்லை. அன்று இரவு உறங்குவதற்காக ஓமோரோ தேர்ந்தெடுத்திருந்த இடத்தைச் சுற்றிலும் இருபது சிங்கங்கள் வேட்டையாடிக் கொண்டிருந்தால் கூட அவன் அதனைப் பொருட்படுத்தியிருக்க மாட்டான் . இலை, தழைகளை விரித்துப் படுக்கைத் தயாரான உடனே அதன்மீது விழுந்தவன் ஆழ்ந்து தூங்கிவிட்டான். விடிகாலைப் பொழுதில் அவனுடைய தந்தை அவனை உலுக்கி எழுப்பிய பிறகு தான் கண் விழித்தான். போதிய நேரம் உறங்கவில்லை என்கிற எண்ணம் உறைந்திருந்த போதிலும், இரவில் அவனுடைய தந்தை வேட்டையாடிய இரண்டு முயல்களின் தோலை உரித்துப் பக்குவப்படுத்தி வறுத்துக் காலை உணவு தயாரித்திருந்ததைக் கண்டவுடன் திகைத்துப் போனான். சம்மணமிட்டு உட்கார்ந்து சுவைமிக்க இறைச்சியைச் சாப்பிட்டுக் கொண்டிருந்த குண்டாவின் மனத்தில் தனது ஆடுமேய்க்கும் தோழர்களுடன் அதேபோன்ற வேட்டையில் ஈடுபட்டு சமைத்து உண்ட காட்சிகள் நிழலாடின. கூடவே, தனது தந்தையும் அவரை ஒத்த வயதினரும் அவர்களுக்கிருந்த பலதரப்பட்ட பணிகளுக்கு இடையே நேரத்தை ஒதுக்கி அதுபோன்ற வாழ்க்கைக்குத் தேவையான அனைத்து வேலைகளையும் கற்றிருந்ததை எண்ணி வியந்தான்.

மலைப்பாதையில் மூன்றாவது நாளாகப் பயணம் தொடர்ந்த போது, அவனுடைய வெடித்துப் போன பாதங்களும், கால்களும், முதுகும், கழுத்தும் வேதனை செய்தன. உண்மையைச் சொல்வதென்றால் உடல் முழுவதும் ஒரே வலி! ஆனால், குண்டா தனக்கு பெரிய மனிதனாவதற்கான பயிற்சி தொடங்கிவிட்டதாகவும் அப்பயிற்சியில் அவனை ஒத்த வயதினருள் வலியைப் பொறுத்துக் கொள்வதில் அவன் அனைவரையும் விஞ்சி நிற்க வேண்டும் என்றும் எண்ணிக் கொண்டான். மதிய வேளைக்குச் சற்று முன்பு கூரிய முள்ளை மிதித்து விட்டான். ஆனால், துணிச்சலுடன் பற்களைக் கடித்துக் கொண்டு வலியைப் பொறுத்தான். ஆனால், நொண்டியடித்தபடி நடந்ததால் ஓமோரோவுக்கு மிகவும் பின்தங்கி விட்டான். பாதை ஓரத்தில் சற்று நேரம் ஓய்வெடுத்துக் கொண்டே மதிய உணவை முடித்துவிட ஓமோரோ தீர்மானித்தார். காயத்தின் மீது அவனுடைய தந்தை தேய்த்துவிட்ட களிம்பு சற்றே இதமளித்தது. ஆனால், நடக்கத் தொடங்கிய உடனே வலியெடுத்து பாதத்திலிருந்து இரத்தம் கொட்டியது. இருப்பினும், விரைவிலேயே புழுதி காயத்தை அடைத்துக் கொண்டதால் குருதி கொட்டுவது நின்றுவிட்டது. தொடர்ந்து நடந்ததால் வேதனையும் மரத்துப் போய் தந்தைக்கு ஈடுகொடுத்துப் பின் சென்றான். குண்டாவால் சரியாக உணர முடியவில்லை; அவன் பொருட்டு அவனுடைய தந்தை தனது நடையின் வேகத்தைக் குறைத்துக் கொண்டார். இரவு பயணம் நிறுத்தப்பட்ட போது, காயத்தைச் சுற்றிலும் வீங்கிப் போய் மோசமடைந்து விட்டது. அவனுடைய தந்தை வேறொரு மருந்தைப்

பூசினார். காலையில் காயம் குணமடைந்து சுமையைத் தாங்கி நடந்தபோது வலியெடுக்கவில்லை.

அடுத்த நாள் பயணத்தின் போது, கல்லும் முள்ளும் நிறைந்த முந்தைய நாள் பயணித்த அருஞ்சுரத்தைக் கடந்து, ஜுஃப்பூர் கிராமத்தைப் போல மரங்கள் நிறைந்த பூச்செடிகள் அடர்ந்த செழிப்பான நாட்டுப்புறப் பாதையில் சென்றதைக் கவனித்தான். குரங்குகளின் இரைச்சலும், அதற்கு முன் அவன் பார்த்திராத பலவண்ணப் பறவைகளுடைய கீச்சொலியும் அவனுக்கு இதமளித்தன. நறுமணத்தைச் சுமந்து வந்த காற்றை நுகர்ந்த போது, தமது நெல்வயல்களில் பணிகளை முடித்துவிட்டு பரிசல்களில் திரும்பிய பெண்டிருள் தனது தாயை வரவேற்பதற்காக லேமினுடன் காத்திருந்த கால்வாய்க் கரையில் அவனுடன் நண்டு பிடித்து ஆடிய காட்சிகள் நினைவிற் பட்டன.

மலைப்பாதையின் போக்கில் கிராமம் இருந்ததை அடையாளம் காட்டிய பயணியர் மரம் தென்பட்ட ஒவ்வொரு இடத்திலும் கிராமத்திற்குச் சென்ற பிரிவுப்பாதையை விட்டு நேர்பாதையில் ஓமோரோ தனது பயணத்தைத் தொடர்ந்தார். ஆனால், ஒவ்வொரு கிராமத்தினுடைய முதல் பருவப் பிள்ளைகள் ஓடோடிச் சென்று புதிதாகத் தென்பட்ட பயணியிடம் அந்தக் கிராமத்தில் நடந்த முக்கியச் செய்திகளைத் தெரிவித்தனர். ஒரு கிராமத்தில் குட்டித் தூதுவர்கள் “மம்போ ஜம்போ! மம்போ ஜம்போ!” என்று கத்திக் கொண்டே அவர்களை நோக்கி ஓடிச் சென்று, பின், வந்த வேலை முடிந்து விட்டதைப் போல, கிராமத்திற்குள் விரைந்தனர். அருகில் சென்று பார்த்த போது, அவ்வூர் மக்கள் சூழ்ந்து நின்றிருக்க, ஒரு பெண்ணை மற்ற பெண்கள் இறுக்கிப் பிடித்துக் கொள்ள, முகமூடியுடன் விநோத ஆடை அணிந்த ஒருவன், அந்தப் பெண்ணின் வெற்று முதுகில் இரும்புக் கழியால் அடிக்க அவள் ஓவென்று அலறிக் கொண்டிருந்தாள். ஒவ்வொருமுறை அடி விழுந்த போதும் சூழ்ந்திருந்த பெண்கள் அனைவரும் வீரிட்டுக் கத்தினர். தனது சக மேய்ப்பர்களுடன் அளவளாவிக் கொண்டிருந்த காலத்தில் குண்டா ஒரு செய்தியைத் தெரிந்து வைத்திருந்தான். ஏறுக்கு மாறாக நடக்கக் கூடிய மனைவியின் தொல்லையைப் பொறுக்க மாட்டாத கணவன் வேறொரு கிராமத்திற்குச் சென்று மம்போ ஜம்போ என்கிற ஒருவனைக் கூலிக்குப் பிடித்து வர, அவன் முதலில் மறைந்திருந்து காட்டுக் கூச்சல் போட்டு அச்சுறுத்துவானாம். பின்னர், பொது மக்கள் மத்தியில் அவளை அடித்துச் சீர்ப்படுத்துவானாம். அதனைப் பார்த்துப் பிற பெண்டிரும் சிறிது காலத்திற்குத் தமது கணவன்மாரிடம் சரிவர நடந்து கொள்வார்களாம்!

மற்றொரு பயணியர் மரத்தடியில் குழந்தைகள் ஒருவருமில்லை. கண்ணுக்கெட்டிய தூரம் வரை எவரும் தென்படவில்லை. பறவைகள், குரங்குகளின் இரைச்சலைத் தவிர ஆளரவமின்றி அமைதி நிலவியது. அங்கேயும் மக்களை அடிமைகளாகப் பிடித்துச் செல்லும் ஆட்கள் வந்து சென்றனரோ என்றெண்ணி குண்டா அஞ்சினான். புரியாத அந்தப் புதிரை ஓமோரோ விளக்குவார் என்று காத்திருந்தான்; பயனில்லை. ஆனால், அடுத்த கிராமத்துக் குழந்தைகள் தெரிவித்தனர். மலைப்பாதையைப் பின்னோக்கிச் சுட்டிக் காட்டி, அந்தக் கிராமத்தின் தலைவன் மக்களுக்கு

ஒவ்வாத தீச்செயல்களில் தொடர்ந்து ஈடுபட்டு வந்ததாகவும், விரைவிலேயே ஊர் மக்கள் ஒரு நாள் இரவில் தமது உடமைகளையெல்லாம் எடுத்துக் கொண்டு பிற கிராமங்களில் வாழ்ந்த தமது நண்பர்களையும் உறவினர்களையும் நாடிச் சென்று விட்டதாகவும் அவன் "வெற்றுத் தலைவனாகிப்" போனதாகவும் கூறினர். தற்பொழுது அவன் தனது மக்கள் திரும்பி வரும் பட்சத்தில் முறையாக நடந்து கொள்வதாக உறுதியளித்து மன்றாடிக் கொண்டிருந்தானாம்.

இரவு நெருங்கிக் கொண்டிருந்தமையால் ஒமோரோ அந்தக் கிராமத்தில் தங்குவதென முடிவெடுத்தார். ஆலமரத்தடியில் திரண்டிருந்த மக்கள் பக்கத்துக் கிராமத்தில் நடந்தவை பற்றி அளவளாவிக் கொண்டிருந்தனர். தமது தலைவனுக்குப் பாடம் கற்பிக்கும் விதமாக மேலும் சில நாட்களுக்கு வெளியூர்களில் தங்கியிருந்து விட்டு மக்கள் திரும்பிவிடுவர் என்று பலர் உறுதியாக எண்ணினர். வேர்க்கடலை சேர்த்து வேக வைக்கப்பட்ட சோற்றைக் குண்டா தனது வயிற்றில் நிரப்பிக் கொண்டிருந்த போது, ஒமோரோ கிராமத்திற்குள் சென்று கிராமக் கலைஞரைத் தேடிப் பிடித்து, மறுநாள் பொழுது சாயும் நேரம் தன்னை எதிர்பார்க்கலாம் என்றும் தன்னுடன் தனது மூத்த மகனும் வருகை தருவதாகவும் தமையன்மார்களுக்குப் பறையறைந்து செய்தி தெரிவிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்தார்.

சிறிது காலமாகவே குண்டா தனது பெயர் அந்த மலைக்கிராம மக்களிடையே பறையறைந்து தெரிவிக்கப்பட வேண்டுமென ஆவல் கொண்டிருந்தான். தற்பொழுது அது நிறைவேறிவிட்டது. அந்த ஒலி அவனுடைய காதுகளில் ரீங்காரமிட்டுக் கொண்டிருந்தது. எலும்புகள் நோகும் அளவுக்குச் சோர்ந்து போயிருந்த போதிலும் அவர்கள் தங்கியிருந்த விருந்தினர் குடிலின் மூங்கில் படுக்கையில் கிடந்தபடி, தனது பெரியப்பாக்கள் ஊருக்குச் செல்லும் வழியில் இருந்த கிராமங்களில் எல்லாம் அடுத்தடுத்து கிராமக்கலைஞர்கள் தனது பெயரை ஒலிப்பர் என்கிற எண்ணம் அவனுடைய நெஞ்சாங் கூட்டில் குதூகலத்துடன் கும்மாளமிட்டது.

தற்பொழுது, அவர்களுடைய வருகை பறையறைந்து தெரிவிக்கப்பட்டு விட்டபடியால், அடுத்தடுத்த கிராமங்களின் பயணியர் மரத்தடியில் வழக்கமான அம்மணக் குழந்தைகளுடன் சில பெரியவர்களும் இசைக் கலைஞர்களும் அவர்களை வரவேற்று தமது கிராமத்தில் சற்று நேரமாவது தங்கிச் செல்லும்படி வற்புறுத்தினர். பெரியவர்களுடைய வேண்டுகோளை மறுக்க முடியாமல் ஒமோரோ ஒவ்வொரு கிராமத்தின் விருந்தினர் குடில்களிலும், ஆல மரங்கள், இலவ மரங்களின் நிழல்களிலும் அமர்ந்து அளவளாவி உண்டும் பருகியும் புத்துணர்வு பெற்றார். அவர்கள் எழுப்பிய எண்ணற்ற கேள்விகளுக்கு அன்பொழுக விடையளித்தார். முதலாவது, இரண்டாவது, மூன்றாவது பருவத்துப் பிள்ளைகள் அனைவரும் குண்டாவைச் சூழ்ந்து கொண்டனர்.

முதல் பருவத்துக் குழந்தைகள் அவனை வியப்புடன் அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்தனர். அவனுடைய வயதை ஒத்த பிள்ளைகளும் அவனுக்கு மூத்தவர்களும் அவனுடைய தாயகக் கிராமத்தைப் பற்றியும் அவன் செல்லவிருந்த இடத்தைப் பற்றியும் தம்முள் எழுந்த பொறாமை உணர்வை மறைத்தபடி மதிப்புடன் வினவினர். அவனுடைய தந்தை அவர்களுடைய தகப்பன்மார்களுக்கு

விடையளித்துக் கொண்டிருந்ததைப் போலவே அவனும் பெரியமனிதத் தொனியில் உரிய மதிப்புடன் பதிலளித்தான். அவர்கள் புறப்பட்ட சமயத்தில், குண்டாவின் மனதில் பெருமை பொங்கியது. அவ்வளவு இளம் பருவத்தில் ஒரு பொடியன் தனது தந்தையுடன் காம்பியா மலைப்பகுதிகளின் கரடு முரடான பாதைகளின் வழியே நீண்ட தூரம் பயணம் செய்ததாக அவர்கள் நினைத்துக் கொள்வார்கள் அல்லவா!

# 20

**த**மது பயண வழியின் கடைசிக் கிராமத்தில் அவர்கள் நீண்ட நேரம் தங்கிவிட்டனர். ஓமோரோ தனது தமையன்மார்களுக்கு உறுதியளித்தபடி பொழுது சாய்வதற்குள் சென்று சேர வேண்டுமெனில், எட்டி நடைபோட்டு வேகமாகச் செல்ல வேண்டும். வியர்த்து ஒழுகி கால்கள் வலியெடுத்த போதிலும் குண்டாவிற்குத் தலைச்சுமையைச் சரிப்படுத்திக் கொண்டு விரைந்து நடப்பது எளிதாகப் பட்டது. விழாவிற்கு வருகை தந்த கதைசொல்லிகள், கலைஞர்கள், பெரியவர்கள் ஆகிய ஒவ்வொருவருடைய வருகையையும் பறையறைந்து தெரிவித்த ஒலி காற்றை நிறைத்தது. அவற்றைக் கேட்ட போது குண்டாவின் உடம்பில் புதுத் தெம்பு பாய்ந்தது. காரண்டாபா, கூடாகுண்டா, பிசானியா, ஜோன்காகொண்டா போன்ற பல்வேறு தொலை தூரக் கிராமங்களிலிருந்தும் பிரதிநிதிகள் திரண்டிருந்தனர். அவற்றுள் பல கிராமங்களின் பெயரை குண்டா அதற்கு முன்னர் கேள்விப்பட்டதில்லை. வூலி ஆட்சிப் பகுதியிலிருந்து ஒரு கதைசொல்லி வந்துவிட்டதாகவும், பர்ரா மன்னர் தனது மகன் இளவரசரை அனுப்பி வைத்திருந்ததாகவும் பறை ஒலி அறிவித்தது. குண்டாவின் பாத வெடிப்புகளை மலைப்பாதையின் புழுதிப் படலம் நிறைத்து மூடியது. தனது பெரியப்பாக்களுடைய புகழ்

மலைப்பகுதியெங்கும் பரவியிருந்ததை அறிந்து குண்டா வியப்பில் ஆழ்ந்தான். மிக வேகமாக முன்னால் சென்று கொண்டிருந்த தந்தையைப் பின்தொடர்வதற்காக மட்டுமின்றி சில மணி நேரத்தில் நெடிய பயணம் முடிவுக்குவரப் போவதை எண்ணியும் அவன் ஓட்டமும் நடையுமாக பாய்ந்து கொண்டிருந்தான்.

மேற்கே சூரியன் தொடுவானத்தின் கீழ் கருஞ்சிவப்பு வண்ணத்தில் பளபளக்கத் தொடங்கினான். எதிரே அண்மையில் ஒரு கிராமத்தில் மேலெழும்பிக் கொண்டிருந்த புகைப் படலம் குண்டாவின் கண்களில் பட்டது. அகன்ற வட்டமான வடிவமைப்புகளைக் காட்டிய புகைப்படலங்கள், கொசுக்களை விரட்டுவதற்காகக் காய்ந்த பொருக்குகளை எரித்துக் கிளப்பப்பட்டவை எனத் தெளிவானது. அப்படியென்றால் கிராமத்தில் முக்கியத்துவம் வாய்ந்த விருந்தினர்கள் உபசரிக்கப்படுகின்றனர் என்று பொருள். அவனுடைய மனத்தில் குதூகலம் கொப்பளித்தது. அவர்கள் வந்துவிட்டனர் போலும்! ஒவ்வொரு பெரும்புள்ளியும் கிராமத்தின் நுழைவாயிலைக் கடந்த போது விழாக்காலப் பறையொலி இடிமுழக்கமிட்டது. அத்துடன் இணைந்து நாட்டியக்காரர்களின் ஆரவாரமும் மத்தள ஒலியும் முழங்கின. மலைப்பாதையில் ஒரு வளைவு. திரும்பியவுடன் கிராமம் பளிச்சிட்டது. பாதை ஓரத்தில் புதர் அருகே நின்றிருந்த ஆள் ஒருவன் அவர்களைக் கண்டவுடனே கையசைத்து வரவேற்றான். பையனுடன் எதிர்ப்படக் கூடிய நபரை வரவேற்பதற்காகவே அவன் நியமிக்கப்பட்டிருந்தான் போலும்! ஓமோரோவும் பதிலுக்குக் கையசைத்தார். உடனே அவன் தனக்கருகில் இருந்த பறையை ஒலித்து “ஓமோராவும் அவருடைய மூத்த மகனும்....” என்று அறிவிக்கத் தொடங்கினான்.

குண்டாவின் பாதங்கள் தரையில் பதியவில்லை! வெகு விரைவில் கண்ணில் பட்ட பயணியர் மரத்தில் தோரணங்கள் தொங்கின. ஒற்றையடிப் பாதையாக இருந்த தடம் அகலப்படுத்தப்பட்டு கிராமம் ஏற்கனவே விழாக்கோலம் பூண்டுவிட்டதைப் பறைசாற்றியது. மத்தள முழக்கங்கள் மேலும் மேலும் உரக்க ஒலிக்கத் தொடங்கின. நாட்டியக்காரர்களும் இணைந்து கொண்டனர். இலை, தழைகளையும் மரப்பட்டைகளையும் ஆடைகளாகத் தரித்திருந்த அவர்கள் தாவி ஆடியும், சுழன்றாடியும், குதித்தாடியும் கூட்டத்தினருக்கு முன்பாக கிராம நுழைவாயிலை நோக்கி விரைந்தனர். அவர்கள் அனைவருமே தனிச்சிறப்பு வாய்ந்த விருந்தினர்களை வரவேற்கச் சென்றனர். கூட்டத்தைக் கிழித்துக் கொண்டு முன்னோக்கி ஓடிய போது மத்தள முழக்கங்கள் உச்ச தொனியை அடைந்தன. குண்டாவிற்கு முன் ஓமோரோவின் தலைச்சுமை கீழே விழுந்தது; அவர் அவ்விருவரையும் நோக்கி ஓடினார். குண்டா இன்னதென்று உணர்வதற்கு முன்பே அவனுடைய தலைச்சுமையும் கீழே விழுந்தது. அவனும் தந்தையைத் தொடர்ந்து ஓடினான்.

இருவரும் தந்தையை ஆரத் தழுவி ஆர்ப்பரித்ததையும் கூட்டத்தினருக்குத் தன்னைச் சுட்டிக் காட்டி “இது எங்க தம்பி மகன்” என்று பெருமைப்பட்டதையும் குண்டா வியந்தான். அவனைத் தலைக்கு மேல் தூக்கி அணைத்துக் கொண்டு மகிழ்ச்சியில் கூச்சலிட்டனர். அவர்களை வரவேற்பதற்காகத் திரண்ட மக்கள்

வெள்ளத்தின் குதூகல வாழ்த்தொலிகளுடன் அவர்கள் கிராமத்திற்குள் மிதந்து சென்றனர். குண்டா வேறு எவருடைய ஆர்ப்பரிப்பையும் கேட்கவுமில்லை; பார்க்கவும் இல்லை. தனது தந்தையை உருவத்தால் ஒத்திருந்த அவ்விருவரையும் வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தான். அவர்கள் இருவரும் அவனுடைய தந்தையைக் காட்டிலும் சற்றே குட்டையாகவும் உருவத்தில் பருத்தும் கட்டுறுதியாகவும் இருந்தனர். பெரியப்பா ஜானேயின் கண்கள் தூரத்தில் உள்ளவற்றைப் பார்த்த போது சற்றே ஒருபுறமாகச் சாய்ந்தன. ஆனால், இருவருமே அசுர வேகத்தில் நடை போட்டனர். அவனுடைய தந்தையைக் காட்டிலும் வெகு வேகமாகப் பேசினர். ஜுஃப்யூர் கிராம மக்களையும் பின்டாவைப் பற்றியும் கேள்வி மேல் கேள்வியாகக் கேட்டனர்.

பெரியப்பா சலோம் குண்டாவின் தலையில் குட்டினார். "பேர் சூட்டு விழாவில் பார்த்தது! அதற்குப் பிறகு சந்திக்கவே இல்லை! எவ்வளவு வளர்ந்து விட்டான்? உன் வயது என்ன?, குண்டா?"

பணிவாகப் பதிலளித்தான், "எட்டு, பெரியப்பா!"

"ஆம்பிளைக்கான பயிற்சிக்குத் தயாராகி விட்டாய்!" பெரியப்பா வியந்தார்.

கிராமத்தைச் சுற்றிலும் அமைக்கப்பட்டிருந்த மூங்கில் தடுப்புச் சுவரையொட்டி காய்ந்த முட்புதர்கள் குவிக்கப்பட்டிருந்தன. அவற்றிற்குள் கூரிய முனை கொண்ட குத்தீட்டிகள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. தொல்லைதரக் கூடிய விலங்குகளிடமிருந்தும் மனிதர்களிடமிருந்தும் பாதுகாத்துக் கொள்வதற்காகவே அத்தகைய ஏற்பாடு. ஆனால், குண்டா அவற்றையெல்லாம் கவனிக்கவில்லை. சுற்றிலுமிருந்த அவனுடைய வயதை ஒத்த பிள்ளைகளைக் கூட அவன் ஓரக் கண்ணால் மட்டுமே பார்த்தான். அந்தப் புதிய அழகிய கிராமத்தைச் சுற்றிக் காட்டுவதற்காக அவனுடைய பெரியப்பாக்கள் அவனை அழைத்துச் சென்ற போது, தலைக்கு மேல் விர்ரிட்ட கிளிகளையோ, குரங்குகளையோ, கால்களுக்கடியில் குரைத்தோடிய வேட்டை நாய்களையோ அவன் கவனிக்கவில்லை. சலோம் விளக்கினார், "ஒவ்வொரு குடிசைக்கும் தனிப்பட்ட சதுக்கம் அமைக்கப்பட்டிருந்தது. அடுக்களையில் அடுப்படிக்கு மேலே உலர்ந்த தவச, தானியங்களைப் பாதுகாப்பதற்கான பரண் இருந்தது. சமையலின் போது வெளிப்படுகின்ற புகை தானியங்களில் வண்டுகள் தாக்காமல் பாதுகாக்கப்படுவதற்காக அத்தகைய ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

மனதிற்கு எழுச்சியூட்டிய காட்சியைக் கண்ட போதும், மணத்தை நுகர்ந்த போதும், ஒலியைக் கேட்ட போதும் சொக்கிப் போன குண்டா இப்படியும் அப்படியுமாகத் தலையை ஆட்டிக் கொண்டிருந்தான். மாண்டிங்கா வட்டார வழக்கு மொழியில் அவர்கள் பேசியதைக் கேட்ட போது அவனுக்கு வியப்பாகவும் குழப்பமாகவும் இருந்தது. ஓரிரு சொற்களுக்கு மேல் அவனால் புரிந்து கொள்ள இயலவில்லை. கிராமத்து ஆசானைப் போன்ற கல்வியறிவு பெற்றவர்களைத் தவிர ஏனைய மாண்டிங்கா இனத்தவரைப் போலவே குண்டாவால் தமது குழுஇனத்தைத் தவிர, மிகவும் அண்மையில் வாழ்ந்த இனத்தவர் உட்பட, ஏனைய

மலைவாழ் இனத்தவர் பேசிய மொழியைப் புரிந்து கொள்ள முடிந்ததில்லை. ஆனால், பல்வேறு இனத்தவரையும் இனங்கண்டு கொள்ளும் முயற்சியில் பயணியர் மரத்தைச் சுற்றிலும் அவன் நீண்ட நேரத்தைச் செலவிட்டான். நீள்வட்ட முகமும், நீண்ட தலைமுடியும், மெல்லிய உதடுகளும், கூர்மையான மூக்கும், நெற்றிப் பொட்டுகளில் நீண்ட தழும்புகளும் கொண்டவர்கள் ஃப்யுலா இனத்தவர். வோலோஃப் இனத்தவர் அட்டக் கறுப்பாகவும் கட்டுப்பெட்டியாகவும் இருந்தனர். செராகுலி இனத்தோர் மெல்லிய புறத்தோல் கொண்ட குள்ளமானவர்கள். ஜோலா இனத்தவரை எளிதில் கண்டு பிடித்து விடலாம். உடல் முழுவதும் தழும்புகளுடன் எப்பொழுதும் முகத்தில் ஆவேச வெளிப்பாட்டுடன் தோற்றமளித்தனர்.

அந்தப் புதிய கிராமத்தில் திரண்டிருந்த இனங்கள் அனைத்தையும் குண்டா அடையாளம் கண்டு கொண்டான். ஆனாலும், அவனால் அடையாளம் கண்டு கொள்ள இயலாத இனக் குழுக்கள் மேலும் பல இருந்தன. சிலர் தமக்குத் தேவையான பொருட்களை விலைக்குப் பெறுவதற்காக வணிகர்களிடம் உரக்கக் கத்திப் பேரம் பேசுவதில் முற்பட்டிருந்தனர். முதிய பெண்டிர் சிலர் பதனிடப்பட்ட தோல்களைப் பெற ஆவல் கொண்டனர். இளம் பெண்டிருக்கு தலையணிகளை வாங்குவதில் முனைந்தனர். “கோலா! நயமான செம்பளுப்பு கோலா!” என்கிற கூவல் பலருடைய கவனத்தைக் கவர்ந்தது. அவர்களுடைய பற்கள் ஏற்கனவே அதுபோன்ற பாக்குகளை மென்று காவி ஏறிக்கிடந்தன.

மக்கள் நெருக்கடியால் நட்புணர்வுடன் ஒருவரை ஒருவர் முட்டி மோதிக் கடந்தனர். அதற்கிடையே ஒமோரோ எண்ணற்ற விருந்தினர்களுக்கு அறிமுகப்படுத்தப்பட்டார். அவர்கள் பேசிய விநோதமான மொழிகளில் எல்லாம் தனது பெரியப்பாக்கள் சரளமாகப் பேசியது குண்டாவிற்கு வியப்பளித்தது. கூட்ட நெரிசலில் குண்டா அவர்களிடமிருந்து நழுவினான். தேவைப்பட்ட போது தனது தந்தையையும் பெரியப்பாக்களையும் எளிதில் கண்டுவிடலாம் என்பது அவனுடைய எண்ணம். நடனமாட விரும்பியோருக்கு ஏற்ப இசைத்துக் கொண்டிருந்த இசைக்கலைஞர்களிடம் குண்டா சென்றான். அடுத்ததாக, வறுத்த மான், ஆட்டிறைச்சி, அவித்த வேர்க்கடலை போன்றவற்றைச் சுவைத்தான். ஆல மர நிழலடியில் மேஜைகளின் மீது அவ்வகை உணவுப் பண்டங்கள் ஏராளமாகக் குவிக்கப்பட்டு வேண்டுவோருக்கு கிராமப் பெண்களால் பரிமாறப்பட்டன. உணவுப் பண்டங்கள் சாப்பிடுவதற்கு உகந்தவையாக இருந்த போதிலும், அறுவடைத் திருநாள் கொண்டாட்டத்தின் போது ஜுஃப்யூர் தாய்மார்கள் சமைத்தளித்த உணவிற்கு ஈடாக மாட்டா என்று குண்டா நினைத்தான்.

சில பெண்கள் கிணற்றடியில் எதையோ மிகவும் சுவாரஸ்யமாகப் பேசிக் கொண்டிருந்ததைக் கண்டு, அவர்களை நோக்கிச் சென்றான். அவனுடைய விழிகளைப் போலவே செவிகளும் அகன்றவை. அவர்கள் காணாதவாறு அவர்கள் பேசியதைக் கேட்டான். மிகப்பெரிய ஞானி ஒருவர் புதிய கிராமத்தின் தொடக்க விழாவில் கலந்து கொள்ள தனது பரிவாரங்களுடன் அங்கிருந்து அரை நாள் பயண தூரத்தில் வந்து கொண்டிருந்ததாகச் செய்தி அறிந்தான். முன்னாளையப் புனிதரான கைரபா குண்டா கின்டேயின் மகன்களால் நிறுவப்பட்ட கிராமம்

அல்லவா! தனது பாட்டனாரைப் பற்றிப் புதிய இடத்தில் பெண்கள் மிகுந்த மதிப்புடன் பேசியதைக் கேட்ட குண்டாவிற்குப் பெருமை பிடிபடவில்லை. அவர்கள் அறிந்து கொள்ள இயலாத விதத்தில் தனது பெரியப்பாக்களைப் பற்றி அவர்கள் அடுத்துப் பேசியதைக் கேட்டான். அவர்கள் மேலும் பயணத்தில் ஈடுபடுவதைக் குறைத்துக் கொண்டு மனைவி, மக்கள் என்று குடும்பம் அமைத்துக் கொள்ள வேண்டிய தருணம் வந்து விட்டது என்றாள் ஒருத்தி. மற்றொருத்தி கூறினாள், “அவர்களை மணந்து கொள்ள நிறையப் பெண்கள் முன்வருவர் என்பது தான் அவர்களுக்குள்ள ஒரே பிரச்சினை!”

இருட்டிவிட்டது. அதற்கு மேலும் தனது பெரியப்பாக்களைப் பற்றிய பேச்சைக் கேட்பதில் சற்றே வெட்கமடைந்த குண்டா தனது வயதை ஒத்த பையன்கள் சிலரை நெருங்கினான். அதுவரையிலும் அவன் பெரியவர்கள் மத்தியில் உலா வந்தான் என்பதை அவர்கள் பொருட்படுத்தவில்லை. அவர்களுடைய புதிய கிராமம் உருவான விதத்தை அவனிடம் விளக்குவதில் பெரிதும் ஆர்வம் கொண்டனர். “எமது குடும்பத்தினர் அனைவரும் உனது பெரியப்பாக்களைத் தமது பயணங்களின் போது எங்கெங்கோ சந்தித்து நண்பர்களாகினர்”, என்றான் ஒருவன். ஏதேதோ காரணங்களால் அவர்கள் தாம் வாழ்ந்து வந்த பகுதிகளில் நிம்மதியில்லாமல் இருந்துள்ளனர். மற்றொருவன், “எனது தாத்தா தனது குடும்பத்துடனும் தனது பிள்ளைகளுடைய குடும்பத்துடனும் நெருக்கமாக வசிப்பதற்குப் போதிய இடவசதியில்லாமல் தவித்தார்”, என்றான். “நாங்கள் வாழ்ந்த பகுதியில் நெல் விளைச்சல் நன்றாயில்லை”, என்றான் இன்னொருவன்.

அவ்வாறு அல்லலுற்ற தனது நண்பர்களிடம் குண்டாவின் பெரியப்பாக்கள் அனைவருக்கும் ஏற்ற விதத்தில் உள்ளதோர் இடத்தைத் தாம் அறிந்திருந்ததாகவும் அங்கே ஒரு கிராமத்தை உருவாக்க அவர்கள் எண்ணியிருந்ததாகவும் கூறினாராம். உடனே, ஜானே, சலோமுடைய நண்பர்கள் தமது வெள்ளாடுகளுடனும், கோழிகளுடனும், பிற வளர்ப்பு விலங்குகளுடனும், தொழுகை விரிப்புகளுடனும், இன்ன பிற உடமைகளுடனும் மலைப்பாதைகளில் நடந்து அங்கே சென்று சேர்ந்தார்களாம்.

இருட்டிவிட்டபடியால், அன்றைய பகல் பொழுதில் தன்னுடைய புதிய நண்பர்கள் திரட்டி வைத்திருந்த காய்ந்த குச்சிகள், இலை,தழைகளைக் கொண்டு புதிய கிராமத்தில் நெருப்பு மூட்டப்பட்டதைக் குண்டா கவனித்தான். வழக்கமாக, மாலை வேளைகளில் ஆடவரும், பெண்டிரும், குழந்தைகளும் வெவ்வேறு நெருப்பு மூட்டங்களைச் சுற்றி அமர்ந்தனர். ஆனால், அன்று விழாக் கொண்டாட்டங்கள் தொடங்கவிருந்தபடியால், கிராமத்தினர், விருந்தினர் அனைவரும் பல்வேறு நெருப்பு மூட்டங்களைச் சுற்றிலும் இணைந்து அமர்ந்திருந்ததாக குண்டாவிடம் பயல்கள் கூறினர். கிராம மதகுரு கூட்டத்தினரை வாழ்த்திய பிறகு, ஜானேவும் சலோமும் வட்டத்திற்குள் சென்று தமது பயணங்களையும், சாகசங்களையும் பற்றிய கதைகளைக் கூறுவர் என்றும் தெரிவித்தனர். தொலை தூரத்திலுள்ள ஃபுல்லாடு நதிக்கரையிலிருந்து அக்கிராமத்திற்கு வந்திருந்த வயதில் மூத்தவர் ஒருவர் அந்த வட்டத்தில் அமர்ந்திருந்தார். நூறுக்கு மேற்பட்ட வயதினரான

அவருடைய அறிவுரைகளை விருப்பம் உள்ளவர்கள் கேட்கலாம் என்றும் கூட்டத்தில் முணுமுணுப்பு எழுந்தது.

மதகுருவின் தொழுகையைச் செவிமடுப்பதற்காக குண்டா சரியான சமயத்தில் ஓடிப்போய் தனது தந்தையுடன் இணைந்து கொண்டான். அதன் பின்னர் சற்று நேரம் யாருமே பேசவில்லை. பூச்சிகளின் இரைச்சல் உரக்க ஒலித்தது. புகையுடன் எழுந்தாடிய நெருப்பின் நிழல்கள் வட்டத்தைச் சுற்றியிருந்த முகங்களில் அபிநயம் பிடித்தன. ஒருவாறாக, எலும்புந் தோலுமாகக் காட்சியளித்த அந்த முதியவர் பேசத் தொடங்கினார். "பல நூறு ஆண்டுகளுக்கு முன்பு மலைப் பகுதிகளில் பெரிய அருவிகளுக்கிடையே தங்கமலை ஒன்று இருந்ததாகப் பேச்சு அடிபட்டது. அதனைக் கேள்விப்பட்டுத் தான் முதன் முதலாக பரங்கியர் ஆப்பிரிக்காவிற்குள் நுழைந்தனர். தங்கமலை என்று எதுவுமில்லை. ஆனால், விவரிக்க இயலாத அளவு தங்கம் நீர்வழிகளில் காணப்பட்டது. வட கனியாவில் தங்கம் தோண்டி எடுக்கப்பட்டது. பின்னர், கானா காடுகளில் தங்கச் சுரங்கங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. தங்கம் கிடைத்தது பற்றி பரங்கியரிடம் யாரும் தெரிவிக்கவில்லை. ஒருத்தனுக்குத் தெரிந்தால் அனைவருக்கும் தெரிந்து விடும்."

பிறகு, ஜானே பேசினார். "தங்கத்திற்கு இணையான மதிப்புள்ள உப்பு பல இடங்களில் கிடைத்தது. தங்கமும் உப்பும் சம எடையில் பரிமாற்றம் செய்து கொள்ளப்பட்டதை நானும் சலோமும் நேரடியாகக் கண்டுள்ளோம். ஒரு சில தொலை தூர மணற்பகுதிகளில் பருமனான பாளங்களாக உப்பு கிடைத்தது. உப்புப் பாங்கான நிலத்தில் நீர் வற்றிய பிறகு சூரிய வெப்பத்தால் உப்பு உறைந்து கட்டிகளாக வடிவம் பெறுகிறது."

முதியவர் சொன்னார், "ஒரு காலத்தில் உப்பு நகரம் என்று ஒன்றிருந்தது. தகாஸா நகரம். அந்நகரில் மக்கள் தமது வீடுகளையும் மசூதிகளையும் உப்புப் பாளங்களால் கட்டினர்."

தொன்மை வாய்ந்த கிழவி ஒருத்தி துணிச்சலுடன் குறுக்கிட்டுக் கேட்டாள், "முன்பெல்லாம் முதுகில் மூட்டையுள்ள ஒரு வகை விலங்குகளைப் பற்றிச் சொல்வீர்களே! இப்பொழுது அதைப் பற்றி விவரியுங்கள்!" அவளைப் பார்த்ததும் குண்டாவிற்கு நியோ போட்டோ பாட்டியின் நினைவு வந்தது.

இரவின் இருளைக் கிழித்துக் கொண்டு எங்கோ கழுதைப்புலி ஊளையிடும் சத்தம் கேட்டது. மக்கள் அனைவரும் எரிந்து கொண்டிருந்த நெருப்பை நோக்கிப் பாய்ந்தனர். சலோம் தனது பேச்சைத் தொடங்கினார், "அந்த வகை விலங்குகளுக்கு ஒட்டகங்கள் என்று பெயர். எல்லையற்ற மணற்பரப்பு விரிந்து பரந்து கிடக்கும் பகுதிகளில் அவற்றைக் காணலாம். சூரியன், விண்மீன்கள், காற்றடிக்கும் திசை ஆகியவற்றைக் கொண்டு அவை அந்த முடிவில்லாத மணல் வெளியில் தமது பாதையைக் கண்டு கொள்கின்றன. ஜானேயும் நானும் மூன்று மாத காலம் தொடர்ந்து அவற்றின் மீது பயணம் செய்தோம். இடையில் நீருக்காக ஒரு சில இடங்களில் தங்கினோம்."

ஜானே குறுக்கிட்டார், "ஆனால், பல இடங்களில் கொள்ளையர்களுடன் போரிட்டோம்"

சலோம் தொடர்ந்தார், "ஒருமுறை பன்னிரெண்டாயிரம் ஒட்டகங்களைக் கொண்ட மிகப் பெரிய பாலைவனப் பயணியர் கூட்டத்துடன் சென்றோம். உண்மையில், அது பல சிறிய பாலைவனப் பயணியர் குழுக்கள் அடங்கியது. கொள்ளையர்களிடமிருந்து பாதுகாத்துக் கொள்வதற்காக இணைந்து சென்றோம்."

சலோம் பேசிக்கொண்டிருந்த போது, ஜானே பதனிடப்பட்ட பெரியதொரு தோல் மடிப்பை விரித்துக் கொண்டிருந்தார். அதற்கிடையில் எரிந்துகொண்டிருந்த நெருப்பில் காய்ந்த விறகுகளைப் போடுவதற்கு இரு இளைஞர்கள் முன்னோக்கிப் பாய்ந்தது கண்டு ஜானே எரிச்சலடைந்தார். புதுவிதமான வரைபடத்தில் அவருடைய விரல் சுட்டிக் காட்டியவற்றை நெருப்பின் ஒளியில் குண்டாவும் கூட்டத்திலிருந்தோரும் உற்றுக் கவனித்தனர். அவர் விவரித்தார், 'இது தான் ஆப்பிரிக்காவின் வரைபடம். மேற்கே மிகப் பெரிய அருவிகள் நிறைந்துள்ளன. படத்தின் இடது பக்கம் கீழ்ப்பகுதியில் காம்பியாவைப் போல பல மடங்கு பெரிதான மணற்பரப்பு விரிந்து கிடக்கிறது."

"ஆப்பிரிக்காவினுடைய வடக்குக் கடற்கரையில் பீங்கான் பாண்டங்கள், வாசனைத் திரவியங்கள், துணிகள், குதிரைகள் மற்றும் மனிதரால் செய்யப்பட்ட எண்ணற்ற பொருட்களைப் பரங்கியருடைய கப்பல் கொண்டு சென்று இறக்குகின்றன. பிறகு, ஒட்டகங்கள், கழுதைகளில் அவற்றை ஏற்றி சிஜில்மசா, காதேம்ஸ், மராகெச் போன்ற உட்பகுதிகளுக்கு சரக்குகள் கொண்டு செல்லப்படுகின்றன", சலோம் விளக்கினார். ஜானேயினுடைய விரல்கள் வரைபடத்தின் மீது ஊர்ந்து அந்நகரங்களைச் சுட்டிக் காட்டின. சலோம் தொடர்ந்தார், "நாம் இங்கே உட்கார்ந்திருக்கின்ற இந்த இரவு நேரத்தில் கூட ஆப்பிரிக்க நாட்டுப் பொருட்களான தந்தம், தோல்கள், ஆலிவ், கோலா, பருத்தி, தாமிரம், விலையுயர்ந்த கற்கள் போன்ற எண்ணற்ற சரக்குகளைப் பலர் தலைச்சுமையாக உள்ளடங்கிய காடுகளிலிருந்து பரங்கியருடைய கப்பல்களுக்குக் கொண்டு செல்லலாம்"

அவர் விளக்கியவற்றைக் கேட்ட போது, குண்டாவின் மனம் நிலை கொள்ளாமல் சுழன்றது. அத்தகைய இடங்களுக்கு ஒருநாள் துணிந்து சென்று தீர வேண்டும் என்று மனதிற்குள் சூளுரைத்துக் கொண்டான். "ஞானி வருகிறார்!" தொலைவில் எங்கிருந்தோ பறையொலி எழுப்பப்பட்ட ஓசை கேட்டது. கிராமத்தின் நிறுவனர்கள் என்கிற முறையில் ஜானே, சலோம், கிராமத்தின் மூத்தோர் பேரவையினர், கிராம மதகுரு, கிராம ஆசான், ஓமோரோ உட்பட ஏனைய கிராமங்களிலிருந்து வந்திருந்த பிரதிநிதிகள், ஆகியோர் முறையான வரவேற்பிற்காக அணிவகுக்கப்பட்டனர். குண்டா அவனுடைய வயதை ஒத்த பையன்களுடன் நிறுத்தப்பட்டான். இசைக்கலைஞர்கள் முன்னே முழக்கமிட்டு வழிநடத்த அந்தப் புனிதரை வரவேற்பதற்கு ஏற்ற தருணத்தைக் கணித்தபடி அவர்கள் பீடு நடை போட்டனர். நீண்ட, மிகவும் களைத்துப் போன குழுவிற்குத் தலைமை ஏற்று வந்த

அந்த வயதான, மிகவும் கறுத்த மேனியும் வெண்தாடியும் கொண்ட 'ஞானி'யை குண்டா வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தான். ஆடவரும், பெண்டிரும், குழந்தைகளும் மிகப் பெரிய தலைச்சுமைகளைத் தூக்கிச் சென்றனர். சிலர் ஆட்டு மந்தைகளை ஓட்டிச் சென்றனர். குண்டாவின் கணிப்பின்படி நூறு வெள்ளாடுகளுக்கு மேல் இருந்தன.

தனக்கு முன்னால் முழந்தாளிட்டு வணங்கிய மக்களை ஞானி மிக விரைவாக வாழ்த்தி எழுந்து கொள்ளும்படி வேண்டினார். ஜானேவுக்கும் சலோமுக்கும் சிறப்பாக ஆசி வழங்கினார். ஓமோரோ அறிமுகம் செய்து வைக்கப்பட்டார். சலோம் குண்டாவை அழைத்தார். சூழ்ந்திருந்தோரை முட்டி மோதிக் கொண்டு அவன் முன்னோக்கிச் சென்றான். "இவன் எனது மூத்தமகன். அவனுக்கு அவனுடைய பாட்டனார் பெயர் வைத்திருக்கிறோம்", என்றார் ஓமோரோ.

ஞானி அவனிடம் அரபுமொழியில் பேசினார். அவனுடைய பாட்டனார் பெயர் குறிப்பிடப்பட்டதைத் தவிர வேறொன்றும் அவனுக்குப் புரியவில்லை. ஞானியின் விரல்கள் பட்டாம்பூச்சியின் சிறகுகளைப் போல அவனுடைய தலையை கனிவுடன் வருடின. பிறகு, அவன் தனது வயதை ஒத்தவர்களுடன் இணைந்து கொள்வதற்காகக் கூட்டத்தினரை இடித்துக் கொண்டு சென்றான். ஞானி சாதாரண மனிதரைப் போல வரவேற்புக் குழுவில் இருந்த ஏனைய மக்களுடன் அளவளாவினார். குண்டாவின் குழுவைச் சேர்ந்த பொடியன்கள் நழுவிச் சென்று ஊர்வலத்தின் பின்பகுதியில் அணிவகுத்திருந்த அவருடைய மனைவியர், குழந்தைகள், சீடர்கள், அடிமைகள் ஆகியோரை வேடிக்கை பார்த்தனர்.

ஞானியினுடைய மனைவியரும் குழந்தைகளும் விருந்தினர் குடில்களுக்கு ஓய்வெடுக்கச் சென்றனர். சீடர்கள் ஆங்காங்கே தரையில் அமர்ந்து, தலைச்சுமையாகக் கொண்டு வந்திருந்த மூட்டைகளைப் பிரித்து தமது ஆசானின் உடமைகளான நூல்கள், கையெழுத்துப் பிரதிகளிலிருந்து, கேட்பதற்கு ஆவலாகத் தம்மைச் சூழ்ந்திருந்தோருக்கு படித்துக் காட்டினர். அடிமைகள் ஏனையோருடன் கிராமத்திற்குள் நுழையாததை குண்டா கவனித்தான். கிராமச் சுற்றுச் சுவருக்கு வெளியே மாடுகள் கட்டப்பட்ட இடத்திற்கும், ஆடுகளை அடைத்து வைத்திருந்த இடத்திற்கும் அண்மையில் தரையில் அமர்ந்திருந்தனர். ஏனையோரிடமிருந்து ஒதுக்கி வைக்கப்பட்ட அடிமைகளை குண்டா முதன்முதலாக அங்கே கண்டான்.

அந்தப் புனிதரால் தன்னைச் சுற்றி முழந்தாளிட்டிருந்த அனைவரையும் நெருங்கி ஆசி வழங்க இயலவில்லை. கிராமக் குடிமக்களும் தனிச்சிறப்பு வாய்ந்த விருந்தினரும் ஒருசேரத் தமது நெற்றியைத் தரையில் பதித்துத் தமது குறைகளைக் கேட்குமாறு அவரிடம் மன்றாடினர். அண்மையில் இருந்த சிலர் அவருடைய அங்கியைத் தொட்டு வணங்கினர். சிலர் அவரைத் தமது கிராமத்திற்கு வந்து நீண்ட நாட்களாக நிறைவேற்றப்படாத தொழுகைகளை நடத்தித்தரும்படி வேண்டினர். இஸ்லாமிய சமயத்தில் சட்டமும் சமய நெறிகளும் இணைந்தவை என்பதால் சட்டத் தீர்வுகளையும் அவரிடம் கோரினர். இளம் தந்தைமார் தமது

குழந்தைகளுக்குப் பெயர் சூட்டும்படி கேட்டனர். தமது கிராமங்களில் ஆசான் இல்லாத கிராமத்தினர் அவருடைய சீடர்களுள் ஒருவரைத் தமது பிள்ளைகளுக்குக் கல்வி புகட்டும் ஆசானாக அருளுமாறு கெஞ்சினர்.

அவருடைய சீடர்கள் புனிதப்படுத்தப்பட்ட ஆட்டுத் தோலாலான சிறிய பட்டைகளை விற்பதில் முனைந்தனர். அவ்வாறு பெறப்பட்ட பட்டைகளில் புனிதச் சின்னம் பொறிக்கக் கோரி ஞானியிடம் நீட்டினர். புனிதச் சின்னம் பொறிக்கப்பட்ட அதனை ஒரு தாயத்தில் அடைத்துத் தனது புயத்தில் கட்டிக் கொண்ட ஒருவன் அல்லாவிடம் மிகவும் நெருக்கமாக இருப்பானாம்! ஜூஃப்யூரிலிருந்து கொண்டு வந்திருந்த இரண்டு சிப்பிகளுக்கு மாற்றாக அத்தகையதொரு பட்டையைப் பெற்றுக் கொண்ட குண்டா, புனிதச் சின்னம் பொறிக்கப் பெறுவதற்காக ஞானியரைச் சூழ்ந்திருந்த கூட்டத்தினரிடையே முண்டியடித்துக் கொண்டிருந்தான்.

அந்தப் புனிதரைப் போலவே தனது பாட்டனாரும் அல்லாவிடமிருந்து இயற்கை கடந்த ஆற்றலைப் பெற்றவராக இருந்திருக்க வேண்டும்; அதனால் தான் பட்டினியால் வாடிய ஜூஃப்யூர் கிராமத்தைச் செழிக்கச் செய்வதற்காக மழையை ஒருகாலத்தில் அவரால் வரவழைக்க முடிந்தது என்பது போன்ற எண்ணங்கள் அவனுடைய மூளையில் ஓடின. அவனுக்குப் புரிந்து கொள்ளக் கூடிய வயதில் அப்படித்தான் அவனுடைய பாட்டி ஆயிஸாவும் நியோ போட்டோ பாட்டியும் கூறினர். ஆனால், இப்பொழுது தான் அவன் தனது பாட்டனாருடைய பெருமையையும் இஸ்லாமிய சமயத்தினுடைய மாட்சியையும் முதன்முறையாகப் புரிந்து கொண்டான். தன்னுடைய விலை மதிப்புமிக்க சிப்பிகளைக் கொடுத்து வாங்கிய ஆட்டுத் தோல் பட்டையில் புனிதச் சின்னம் பொறிக்கப்பெறுவதற்காக அவன் காத்திருந்தது எதற்காக என்பதை ஒரே ஒருவருக்கு மட்டுமே அவன் தெரிவிக்க எண்ணினான். அது தான் நியோ போட்டோ பாட்டி! தாயகக் கிராமம் திரும்பியதும் அதை அவளிடம் கொடுத்துப் பத்திரப்படுத்தி தனக்கு ஒரு மகன் பிறந்த பின் அதனைத் தாயத்தில் அடைத்து அவனுடைய புயத்தில் கட்ட வேண்டும் என்பது அவனுடைய திட்டம்!

# 21

குண்டா தனது தந்தையுடன் பயணம் மேற்கொண்டதில் அவனுடைய கூட்டாளிகளுக்கு பொறாமை. அவன் மிகுந்த பெருமிதத்துடன் ஜுஃப்யூர் கிராமத்திற்குத் திரும்புவான் என்று எதிர்பார்த்த அவனுடைய நண்பர்கள் அவனிடமோ அவன் பயணத்தைப் பற்றித் தெரிவிக்கக் கூடிய செய்திகளிலோ சற்றும் அக்கறை காட்டுவதில்லை என்று ஒருவருக்கொருவர் சொல்லிக் கொள்ளாமலே தீர்மானித்திருந்தனர். அவன் ஊர் திரும்பியதும் அப்படியே நடந்து கொண்டனர். நீண்ட நாள் கழித்துத் திரும்பிய குண்டாவிற்கு அவர்கள் பாராமுகமாக நடந்து கொண்டதும் அவனிடம் பேசுவதைக் கூட நிறுத்திக் கொண்டதும் மிகுந்த மனவேதனை அளித்தது. வாழ்நாள் முழுவதும் உடன் வாழப் போகிற நண்பர்கள் அல்லவா! அவனுடைய மிக நெருங்கிய நண்பன் சிடாஃபா கூட மற்றவர்களைக் காட்டிலும் மிகவும் இறுக்கமாக நடந்து கொண்டான். தனது தந்தை ஒமோரோவுடன் அவன் ஊரை விட்டுச் சென்றிருந்த காலத்தில் பிறந்த தனது தம்பி சுவாடுவின் நினைப்புக் கூடத் தோன்றாத அளவிற்கு குண்டா மிகவும் நொந்து போய்விட்டான்.

ஒருநாள் மதிய வேளை. ஆடுகள் மேய்ந்து கொண்டிருந்தன. ஒருவாறாக குண்டா தீர்மானித்து விட்டான். நண்பர்கள்

காட்டிய வெறுப்பையும் பொருட்படுத்தாமல் அவர்களுக்கிடையே ஏற்பட்டிருந்த இடைவெளியைச் சரிப்படுத்துவதற்கு முயன்றான். அவர்கள் மதிய உணவு சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். அவர்களிடம் நெருங்கி அவர்கள் மத்தியில் அமர்ந்து கொண்டான். பேச்சைத் தொடங்கினான். "நீங்களும் எங்கூட வந்திருக்கணும்டா" என்று மெதுவாக ஆரம்பித்தான். அவர்கள் கேட்கிறார்களா என்பதையும் பொருட்படுத்தாமல் தொடர்ந்து பயணத்தைப் பற்றி விவரித்தான்.

நாட்கணக்கில் நடந்து சென்றது எவ்வளவு கடினமாக இருந்தது என்பது பற்றியும், தசைநார்களெல்லாம் விண், விண்ணென்று வலியெடுத்தது பற்றியும், சிங்கங்களைக் கண்டு அஞ்சி நடுங்கிக் கொண்டே அவற்றைக் கடந்து சென்றது பற்றியும் என்று விவரித்துக் கொண்டே போனான். அவன் கடந்து சென்ற பல்வேறு கிராமங்களைப் பற்றியும் அங்கு வாழ்ந்த பல்வேறு மலைவாழ் இனக்குழுக்களைப் பற்றியும் விவரித்துக் கொண்டிருக்கையில், ஒருவன் துள்ளியெழுந்து சிதறி ஓடிய ஆடுகளை ஒழுங்குபடுத்தச் சென்றான். திரும்பியவன் அவனையும் அறியாமல் குண்டாவின் அருகில் அமர்ந்தான். விரைவிலேயே குண்டாவின் வார்த்தைகளுடன் அவர்களுடைய அச்சம், வேதனை, வியப்பு போன்ற உணர்வுகளை வெளிப்படுத்தும் ஒலிகளும் அவர்கள் அறியாமலேயே கலந்து ஒலித்தன. கதை அவனுடைய பெரியப்பாக்களின் கிராமத்தை நெருங்கிய கட்டத்தை அடைந்த போது, ஆடுகளை வீட்டிற்கு ஓட்டிச் செல்ல வேண்டிய நேரம் வந்துவிட்டது.

மறுநாள் காலையில், ஆசானுடைய பள்ளித் திடலில் திரண்டிருந்த அனைத்துப் பொடியன்களும் பாடம் முடித்து விரைவில் அங்கிருந்து புறப்படுவதற்குத் துடித்துக் கொண்டிருந்தனர். ஒருவாறாக, ஆடுகளுடன் ஊரை விட்டுப் புறப்பட்டவுடன் குண்டாவைச் சூழ்ந்து கொண்டு கதை கேட்கத் தொடங்கினர். தனது பெரியப்பாக்கள் உருவாக்கியிருந்த கிராமத்தில் பல்வேறு இனக்குழுக்களும் ஒன்றிணைந்து வாழ்ந்ததையும் அவர்கள் பேசிய பலதரப்பட்ட மொழிகளைப் பற்றியும் தொடர்ந்து விளக்கினான். மாலை வேளையில் நெருப்பு மூட்டங்களைச் சுற்றி மக்கள் உட்கார்ந்திருந்த போது, ஜானேயும் சலோமும் தொலை தூர இடங்களைப் பற்றிக் கூறியதை அவன் விவரித்துக் கொண்டிருந்த சமயத்தில், பயல்கள் வாய்க்குள் ஈ நுழைவது கூடத் தெரியாமல் ஆழ்ந்திருந்தனர். அப்பொழுது, மேய்ச்சல் வெளியின் அமைதியைக் கிழித்துக் கொண்டு வேட்டை நாய்கள் ஆவேசமாகக் குரைத்தன; ஆடு ஒன்று பீதியில் ஓலமிட்டு அலறியது.

துள்ளியெழுந்த பையன்கள், தூரத்தில், உயரமாக வளர்ந்திருந்த புற்களுக்கும் மேல் மஞ்சளும் கறுப்பும் கலந்த தோலுடன் நின்றிருந்த மிகப் பெரிய சிறுத்தையின் வாயிலிருந்து ஆடு ஒன்று நழுவி விழுந்ததையும் அதனைச் சூழ்ந்து இரு வேட்டைநாய்கள் உக்கிரமாகக் குரைத்துக் கொண்டிருந்ததையும் கண்டனர். அதிர்ச்சியாலும் அச்சத்தாலும் அவர்களுடைய கால்கள் நடுங்கின. நாய்களில் ஒன்றை சிறுத்தை தனது பாதத்தால் உதைத்து வீசியது. மற்றொரு நாய் முன்னும் பின்னும் ஆவேசத்துடன் பாய்ந்து கொண்டிருந்தது. பாய்வதற்குப் பதுங்கிய புலியின் உறுமல் பேரொலியில் நாய்களுடைய குரைப்பொலியும் நாலா திசைகளிலும் சிதறி ஓடிய ஆடுகளுடைய ஓலமும் அடங்கிப் போயின.

சுதாரித்துக் கொண்ட பயல்கள் கூக்குரலிட்டபடி ஓடி ஆடுகளை அங்கிருந்து தப்பித்து ஓட்டிச் செல்ல முயன்றனர். ஆனால், குண்டா விழுந்து கிடந்த தனது தந்தையின் ஆட்டை நோக்கித் துணிச்சலுடன் சென்றான். நாய்களுக்கும் சிறுத்தைக்கும் இடையில் அவன் புகுந்து விடாமல் தடுப்பதற்காக சிடாஃபா கத்தினான், ''குண்டா, வேண்டாம்! நில்!'' அவனால் குண்டாவை நிறுத்த முடியவில்லை. கூக்குரலிட்டபடி தன்னை நோக்கி இருவர் ஓடி வந்ததைப் பார்த்த சிறுத்தை பின்வாங்கி, திரும்பி, காட்டிற்குள் ஓடியது. நாய்கள் அதனைத் துரத்திக் கொண்டு ஆவேசத்துடன் பாய்ந்தோடின.

சிறுத்தையின் துர்நாற்றத்தாலும், கருவுற்ற ஆடு சின்னாபின்னப்பட்டுக் கிடந்த காட்சியைக் கண்டதாலும் குண்டாவிற்குத் தலை சுற்றியது; நெரிக்கப்பட்ட கழுத்திலிருந்து உதிரம் வழிந்தோடியது; நாக்கு வெளித் தள்ளியிருந்தது; கண்கள் தலையோட்டிற்குள் செருகிக் கொண்டன; கிழிக்கப்பட்டிருந்த வயிற்றுக்குள் குட்டியை குண்டா பார்த்து விட்டான். உயிர்த்துடிப்பு இன்னமும் அடங்கவில்லை. அருகே வீசியெறியப்பட்ட வேட்டை நாய் மூச்சிரைத்தபடி வலியால் துடித்துக் கொண்டிருந்தது. குண்டாவைக் கண்டதும் வேதனையுடன் ஊர்ந்து அவனை நெருங்க முற்பட்டது. வாந்தியெடுத்து வெளிறிப் போய் நின்றிருந்த குண்டா திரும்பினான்; சிடாஃபாவின் துயரம் தோய்ந்த முகத்தைக் கண்டான்.

காயமடைந்த நாயையும் செத்துப் போன ஆட்டையும் உற்றுப் பார்த்தபடி அவனுடைய நண்பர்களில் சிலர் தன்னைச் சுற்றி நின்றிருந்ததை குண்டா கண்ணீர்த் திரையினூடே உணர்ந்தான். மெதுவாக அவர்கள் அனைவரும் நகர்ந்தனர். ஆனால், சிடாஃபாவின் கைகள் அவனைச் சுற்றி அணைத்துக் கொண்டன. இருவருமே பேசவில்லை. ஆனால், அந்தக் கேள்வி காற்றில் தொங்கியது. அவனுடைய தந்தையிடம் எப்படித் தெரிவிக்கப் போகிறான்? ஒருவாறாக, குண்டாவால் பேச முடிந்தது. "என்னுடைய ஆடுகளைக் கவனித்துக் கொள்வாயா?" சிடாஃபாவிடம் கேட்டான். "இதன் தோலை என் தந்தையிடம் கொண்டு செல்ல வேண்டும்!"

சிடாஃபா ஏனைய பையன்களை அணுகி ஏதோ பேசினான். அவர்களில் இருவர் வேதனையால் நொண்டிய நாயைத் தூக்கிச் சென்றனர். பிறகு, குண்டா சிடாஃபாவை பிறருடன் செல்லுமாறு சைகை காட்டினான். செத்துக் கிடந்த ஆட்டிற்கு அருகில் மண்டியிட்டு, முன்பொருமுறை தனது தந்தை செய்ததைக் கவனித்தது போல, கத்தியால் கிழித்து ஆட்டின் புறத்தோலை உரித்தான். சொத சொதத்த தோலைக் கைகளில் தூக்கிக் கொண்டு எழுந்தான். இலை, தழைகளைப் போட்டு ஆட்டின்உடலை இன்னும் பிறக்காத குட்டியுடன் மூடினான். திரும்பி, கிராமத்தை வெறித்து நோக்கினான். முன்பொருமுறை மேய்ந்து கொண்டிருந்த ஆடுகளை மறந்து திரிந்ததுண்டு. அப்பொழுது இனிமேல் அவ்வாறு நிகழாமல் கவனமாக இருப்பதாக உறுதியளித்திருந்தான். ஆனால், மீண்டும் நடந்துவிட்டது! இம்முறை கருவுற்ற தாய்ஆடு கொல்லப்பட்டுவிட்டது!

கையற்ற நிலையில் நடந்ததெல்லாம் கொடுங்கனவாக இருந்துவிடலாகாதா? அதிலிருந்து தான் விழித்துக் கொள்ளக் கூடாதா? என்றெண்ணி மறுகினான்.

என்னசெய்வது? கைகளில் ஈரம் தோய்ந்த தோல் கிடக்கிறதே! செத்துப் போய்விடலாமா என்று கூட வெறுத்தான். ஆனால், அவ்வாறு செய்தால், தனது மூதாதையரை தீராத அவமானத்துடன் சந்திக்க நேரிடுமே என்று உறைத்தது. 'சற்று நேரத்திற்கு முன்பு நண்பர்களிடம் பெருமை பீற்றிக் கொண்டிருந்தேன் அல்லவா? அல்லா தண்டித்து விட்டார்!' மானக் கேட்டால் கூனிக் குறுகிப் போனான். சூரியன் உதிக்கும் திசையை நோக்கி மண்டியிட்டுத் தன்னை மன்னிக்கும்படி வேண்டித் தொழுதான்.

எழுந்தான். ஆடுகளை ஒன்று சேர்த்து திரட்டிய விறகுக் கட்டுகளைத் தலையில் சுமந்தபடி மேய்ச்சல் நிலத்தை விட்டு வீட்டிற்குப் புறப்பட அவனுடைய கூட்டாளிகள் ஆயத்தமாகியிருந்ததைக் கவனித்தான். காயமடைந்த நாயை ஒருவன் தூக்கிக் கொண்டான். இரண்டு நாய்கள் வேதனையுடன் நொண்டியபடி நடந்தன. தங்களைப் பார்த்துக் கொண்டிருந்ததைக் கவனித்த சிடாஃபா, தலையிலிருந்த விறகுச் சுமையை இறக்கி வைத்து விட்டு குண்டாவை நோக்கி நடந்தான். உடனே குண்டா அவனை ஏனைய நண்பர்களுடன் செல்லும்படி தெரிவித்தான்.

ஆடுகளை ஓட்டிச் சென்ற பாதையில் அவன் எடுத்து வைத்த ஒவ்வொரு அடியும் அவன் முடிவை நெருங்கிக் கொண்டிருந்ததாகப் பட்டது. ஆமாம், அனைத்தும் முடியப் போகின்றன! குற்றவுணர்வு, பீதி, குலைநடுக்கம் அலைஅலையாக அவனை அடித்துச் சென்றன. அவனை வீட்டை விட்டுத் துரத்தப் போகிறார்கள். பின்டா, லேமின், நியோ போட்டோ பாட்டி அனைவரையும் இழந்து தவிக்கப் போகிறான்! ஆசானுடைய வகுப்பும் பறிபோகப் போகிறது! இறந்து போன ஆயிசாப் பாட்டியையும் தனக்குப் பெயர் அளித்த புனிதரான தனது பாட்டனாரையும் புதிதான ஒரு கிராமத்தையே உருவாக்கவல்ல பெருமை வாய்ந்த தனது பெரியப்பாக்களையும் நினைத்த போது அவர்கள் அனைவருக்கும் தான் மானக் கேட்டை விளைவித்து விட்டதாக வருந்தினான். அன்று பிற்பகலில் அவன் விறகுகளைத் திரட்டவில்லை என்பது நினைவிற்கு வந்தது. எப்போது பார்த்தாலும் அச்சவுணர்வுடன் பிற ஆடுகளிடமிருந்து ஒதுங்கி அசைந்து அசைந்து நடந்து சென்ற கருவுற்ற தாய் ஆட்டின் நினைவும் பிறக்கும் முன்பே இறந்துவிட்ட குட்டியின் நினைவும் அவனை வாட்டியது. அவையனைத்தையும் பற்றிய எண்ணங்கள் ஓடிக்கொண்டிருந்த வேளையில் நினைக்கும் போதே அச்சமூட்டிய அவனுடைய தந்தையின் நினைவும் பரவியது.

அவனுடைய மனம் பதைத்தது. முன்னால் நீண்டு கிடந்த பாதையை வெறித்தபடி மூச்சுப் பேச்சற்று நிலைக்குத்தி நின்றான். அவனை நோக்கி ஓமோரோ ஓடோடி வந்தார். பயல்கள் யாருக்கும் அவரிடம் சொல்லுகிற அளவுக்குத் துணிச்சல் இல்லையே! அவருக்கு எப்படித் தெரிந்தது?

"உனக்கு ஒண்ணுமில்லையே? நல்லாத் தானே இருக்கே?" அப்பா கேட்டார்.

பேச முயன்ற குண்டாவின் நாக்கு மேல் அண்ணத்தில் ஒட்டிக் கொண்டது. ஒருவாறாகப் பேசிவிட்டான், "ஆமாப்பா!" ஆனால், ஓமோரோ அவனுடைய வயிற்றைத் தடவிப் பார்த்தார். அவனுடைய ஆடையை நனைத்திருந்த குருதி

அவனுடையதல்ல!

தோலைத் தரையில் விரித்தார். "உட்கார்!" ஆணையிட்டார். குண்டா அமர்ந்தான். அவனிடமிருந்து சற்றே விலகி அவர் அமர்ந்ததால் குண்டா நடுங்கினான்.

ஒமோரோ தொடர்ந்தார், "நீ தெரிந்து கொள்ள வேண்டிய செய்தி ஒன்றுண்டு. மனிதர்கள் அனைவரும் ஏதேனும் ஒருவிதத்தில் தவறு செய்கிறார்கள். உன்னுடைய வயதில் நானும் சிங்கத்திடம் ஓர் ஆட்டைப் பறிகொடுத்தேன்."

தனது ஆடையை மேலே உயர்த்தி இடுப்பைக் காட்டினார். பளுப்பு நிறத்தில் ஆழமாகத் தழும்பைக் கண்டு அதிர்ச்சியடைந்தான். "நான் கற்றுக் கொண்டேன், நீ கற்றுக் கொள்ள வேண்டும்! ஆபத்தான விலங்குகளிடம் ஒருபோதும் நெருங்காதே!" அவருடைய கண்கள் குண்டாவின் முகத்தை ஆராய்ந்தன. "சொல்றது கேட்குதா"

"ஆமாப்பா"

ஒமோரோ எழுந்தார். ஆட்டுத் தோலைத் தூக்கி தூர எறிந்தார். "உனக்குச் சொல்ல வேண்டியதெல்லாம் அவ்வளவு தான்"

தந்தையைப் பின்தொடர்ந்து கிராமத்திற்குத் திரும்பிய குண்டாவின் தலை சுற்றியது. இழைத்த குற்றத்தைக் காட்டிலும், அதிலிருந்து விடுபட்டதைக் காட்டிலும், அந்தக் கணத்தில் அவன் தனது தந்தையின்பால் கொண்டிருந்த அன்பு மிகவும் உயர்ந்தது.

# 22

குண்டாவிற்கு பத்து வயது நிறைவடைந்தது. அவனுடைய வயதை ஒத்த இரண்டாம் பருவத்துப் பிள்ளைகள் பள்ளிப் படிப்பை நிறைவு செய்து கொள்ள வேண்டிய தருணம். பள்ளிக் கல்வி நிறைவு நாளன்று குண்டாவின் பெற்றோரும் அவனுடைய நண்பர்களும் ஆசானின் பள்ளித்திடலில் கிராம முதியோருக்கும் முன்பாக முதல் வரிசையில் பெருமிதத்துடன் அமர்ந்திருந்தனர். குண்டாவும் ஏனைய மாணவர்களும் ஆசானுக்கு எதிரே உட்கார்ந்திருந்தனர். கிராம மதகுரு தொழுகை நடத்தினார். ஆசான் எழுந்து மாணவர்களை நோட்டமிட்டார். கேள்விக்குப் பதிலளிக்கும் ஆவலில் மாணவர்கள் கைகளை உயர்த்தி அசைத்தனர். அவர் தேர்ந்தெடுத்த முதலாவது மாணவன் குண்டா.

"குண்டா கின்டே, உன்னுடைய மூதாதையருடைய தொழில் என்ன?" ஆசான் கேட்டார்.

"நூற்றுக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பு மாலி எனும் நாட்டில் கின்டே இனக்குழுவின் ஆடவர் கருமான்களாகப் பணியாற்றினர். பானைகள் செய்வதும் துணி நெய்வதும் பெண்களுடைய வேலை", குண்டா நம்பிக்கையுடன் பதிலளித் தான். ஒவ்வொரு மாணவனும் சரியான பதிலளித்த போது, குழுமியிருந்தோர் மகிழ்ச்சியில்

ஆரவாரித்தனர்.

ஆசான் கணக்குப் பாடத்தில் ஒரு கேள்வி எழுப்பினார். "கோமாளி ஒருவனுக்கு ஏழு மனைவியர். ஒவ்வொரு மனைவிக்கும் ஏழு குழந்தைகள். ஒவ்வொரு குழந்தையும் ஏழு நாட்களுக்கு ஏழு கடலைகள் தின்றன. அப்படியானால், அவன் யாராவது ஒருவருடைய பண்ணையிலிருந்து எத்தனை கடலைகள் திருட வேண்டும்?" கோரைப்புல் எழுதுகோலால் பலகையில் ஏகப்பட்ட கணக்கீடுகளைப் போட்டு முதலாவதாகச் சரியான பதிலைக் கூறியவன் சிடாஃபா சில்லா. கூட்டத்தினர் எழுப்பிய பாராட்டு ஆரவாரத்தில் ஏனைய மாணவர்களின் முனகல் ஒலிகள் அடங்கிப்போயின.

அடுத்து, மாணவர்கள் தமக்குப் பயிற்றுவிக்கப்பட்டபடி தமது பெயர்களை அரபு மொழியில் எழுதிக் காட்டினர். ஒவ்வொருவருடைய பலகையையும் ஆசான் உயர்த்திப் பிடித்து கல்வியின் ஆக்கத்தை சூழ்ந்திருந்த அனைவரும் அறிந்து கொள்ளும் விதமாகக் காண்பித்தார். ஏனைய மாணவர்களுக்குப் போலவே குண்டாவிற்கும் அந்தக் குறியீடுகள் எழுதுவதைக் காட்டிலும் படிப்பதற்குக் கடினமாக இருந்தது. காலையிலும் மாலையிலுமாகப் பல நாட்கள் ஆசான் அவர்களுடைய விரல் முட்டிகள் வலியெடுக்க எழுதப் பழக்கிய போதெல்லாம், செய்தி அறிவிக்கும் பறையொலி போல அரபு எழுத்துக்கள் எழுதுவதற்கு எளிதாக இருக்கக் கூடாதா என்று அவர்களுக்குத் தோன்றியது. செய்தி அறிவிக்கும் பறையொலியை லேமின் வயதுப் பிள்ளைகள் கூட ஏதோ தொலை தூரத்தில் இருந்து ஆட்கள் வாய்மொழியாக அறிவித்ததைப் போலப் புரிந்து கொண்டனர்.

ஒவ்வொருவராக அனைத்து மாணவர்களையும் எழுந்து நிற்கும்படி ஆசான் பணித்தார். கடைசியாக, குண்டாவின் முறை வந்தது. "குண்டா கின்டே!" அனைவருடைய கண்களும் அவன் மீது பதிந்தன. முதல் வரிசையில் அமர்ந்திருந்த தனது குடும்பத்தாரின் பெருமையை குண்டா உணர்ந்தான். கிராமத்திற்கு அப்பால் இடுகாட்டில் மீளாத்துயில் கொண்ட அவனுடைய மூதாதையர், குறிப்பாக, அவனுடைய பாசத்திற்குரிய பாட்டி ஆயிசா, நினைவும் நிழலாடியது. எழுந்து நின்று, திருக்குரானின் கடைசிப் பக்க சுலோகத்தை உரக்க வாசித்தான். பிறகு, முன்நெற்றியில் ஒற்றி வணங்கி, 'ஆமென்' என்றான். அனைவரும் வாசித்து முடித்த பின்னர், ஆசான் ஒவ்வொரு மாணவரையும் கைகுலுக்கி அவர்களுடைய பள்ளிக் கல்வி நிறைவுற்றதாகவும் அவர்கள் தமது மூன்றாம் பருவத்தை அடைந்து விட்டனர் என்றும் அறிவித்தார். அனைவரும் மகிழ்ச்சி ஆரவாரத்தில் பொங்கிப் பூரித்தனர். பின்டாவும் ஏனைய தாய்மார்களும் சமைத்து பாண்டங்களிலும் சுரைக்குடுவைகளிலும் நிரப்பி வைத்திருந்த பல வகை உணவுப் பண்டங்களைப் பரிமாறினர். பள்ளிக் கல்வி நிறைவு விழா பாண்டங்களையும் குடுவைகளையும் காலி செய்த விருந்துடன் இனிதே முடிந்தது.

மறுநாள் தனது குடும்ப ஆட்டு மந்தையை மேய்ச்சலுக்கு ஓட்டிச் செல்ல குண்டா பட்டிக்குச் சென்ற போது ஓமோரோ அங்கே காத்திருந்தார். கொழுத்த இளம் கிடாயும் கிடேறியுமாக இரு ஆடுகளைக் கையில் பிடித்திருந்தார். ஓமோரோ

கூறினார், "பள்ளிக் கல்வி நிறைவு செய்தமைக்காக இவை இரண்டும் எனது பரிசுகள்" திக்கித்துப் போன குண்டா நன்றி சொல்லத் திணறிக் கொண்டிருந்த போது, மறு வார்த்தை பேசாமல் ஒமோரோ அங்கிருந்து புறப்பட்டு விட்டார். ஏதோ நாள்தோறும் இரண்டு ஆடுகளைப் பரிசளித்தது போல இருந்தது அவருடைய செய்கை! உணர்ச்சிப் பெருக்கால் கண்ணீர் பொங்கிவிடாமல் தடுக்க குண்டா பெரும்பாடுபட்டான். ஆனால், அவனுடைய அப்பா பார்வைக்கு மறைந்த அந்தக் கணமே மகிழ்ச்சி ஆரவாரத்தில் அவன் எழுப்பிய கூச்சலைக் கேட்டு புதுவரவுகள் மிரண்டு ஓட அவற்றைத் துரத்திக் கொண்டு ஏனைய ஆடுகளும் பாய்ந்தன. அவற்றை ஒருவாறு ஒன்று திரட்டி மேய்ச்சலுக்கு ஓட்டிச் சென்ற போது அங்கே அவனுடைய நண்பர்கள் ஏற்கனவே தமது புதிய பரிசுகளுடன் மேய்த்துக் கொண்டிருந்தனர். பரிசாகக் கிடைத்த கிடாயும் கிடேறியும் அவர்களுக்குப் புனிதமானவை; அவர்களுடைய சிறப்புக் கவனத்தைப் பெற்றன. இளம் பசுந் தளிர்களாகப் பார்த்து பார்த்து மேய விட்டனர். அவர்களுடைய கண்களுக்கு முன்னால் காட்சி விரிந்தது. அவை சில நாட்களில் குட்டிகளை ஈன, அவை தம்முடைய குட்டிகளை அடுத்த சில மாதங்களில் ஈன, தமது தந்தைமாருடைய மந்தையைப் போலவே மதிப்புமிக்க பெரியதொரு ஆட்டு மந்தைக் கூட்டத்தின் கனைப்பொலியும் கேட்டது.

அடுத்த பிறை தோன்றிய நாளன்று ஒமோரோவும் பின்டேயும் தமது மகனுக்குக் கல்வி புகட்டியதற்கு நன்றி தெரிவிக்கும் விதமாக ஆசானுக்கு ஓர் ஆட்டை காணிக்கையாகக் கொடுத்தனர். அவர்கள் கூடுதல் வளம் படைத்தவர்களாக இருப்பின் ஒரு பசுவைக் கொடுத்து மகிழ்ந்திருப்பர். எளிய கிராமமான ஜுஃப்பூரில் அவர்களுக்கு மட்டுமல்ல அனைவருக்குமே அது இயலாத ஒன்று என்பதை அவர்கள் புரிந்து வைத்திருந்தனர். உண்மையைச் சொல்வதென்றால், சில பெற்றோர்கள், புதிதாக அடிமையானவர்கள், எதையும் சேமிக்க இயலாதவர்கள், ஒரு மாத காலம் தமது உழைப்பை ஆசானுடைய பண்ணையில் காணிக்கையாக நல்கினர்.

பிறைகள் பருவங்களாக ஒருவாறாக அடுத்து ஓர் ஆண்டும் உருண்டோடிவிட்டது. குண்டாவின் வயதுப் பையன்கள் லேமின் வயதுப் பொடியன்களுக்கு ஆடு மேய்க்கக் கற்றுக் கொடுத்தனர். நீண்ட நாட்களாக எதிர்பார்த்த தருணம் உறுதியுடன் நெருங்கிக் கொண்டிருந்தது. குண்டாவும் அவனுடைய கூட்டாளிகளும் அறுவடைத் திருவிழாவை ஆவலுடனும் ஆதங்கத்துடனும் எதிர்பார்த்திருந்தனர். விழா முடியும் போது, பத்திலிருந்து பதினைந்து வயதிற்கு உட்பட்ட மூன்றாம் பருவத்துப் பையன்களை ஜுஃப்பூர் கிராமத் திலிருந்து வெகு தொலைவில் உள்ள இடத்திற்கு இளந்தாரிப் பயிற்சிக்காக அழைத்துச் சென்று விடுவர். நான்கு மாதங்களுக்குப் பிறகு அவர்கள் முழு ஆண்பிள்ளைகளாகத் திரும்புவர்.

குண்டாவும் அவனுடைய நண்பர்களும் அத்தகைய கடுமையான பயிற்சிக்குச் செல்வதைப் பற்றி தமக்கு எவ்வித வருத்தமுமில்லை என்று காட்டிக் கொள்ள முயன்றனர். ஆனால், அவர்களுக்கு அதைத் தவிர வேறு எந்தவிதமான சிந்தனையும் இல்லை. அதைப் பற்றி யாரேனும் பெரியவர்கள் குறிப்பிட்டால்

அதை உன்னிப்பாகக் கவனித்தனர். வறட்சிக் காலத்தின் தொடக்கத்தில், ஒரு சில பையன்களுடைய தந்தைமார்கள் அரவமின்றி ஜுஃப்யூர் கிராமத்தை விட்டுச் சென்றதையும் இரண்டு, மூன்று நாட்களுக்குப் பின்னர் அதேபோல அரவமின்றித் திரும்பியதையும் அவர்களுக்குள் முணுமுணுத்துக் கொண்டனர். குறிப்பாக, கலிலு கொண்டே தனது பெரியப்பா பேசியதை ஒற்றுக் கேட்ட பிறகு அவர்கள் மத்தியில் பதட்டம் கூடுதலாயிற்று. கடந்த பயிற்சிக்குப் பிறகு ஐந்தாண்டு காலமாகப் பயன்படுத்தப்படாமல் பருவ மாற்றத்தாலும் விலங்குகளின் ஆக்கிரமிப்பாலும் சீர்குலைந்து கிடந்த இளந்தாரிப் பயிற்சி நடத்தப்படும் கிராமத்தில் தேவையான பழுதுநீக்கும் பணிகள் மேற்கொள்ளப்பட்டுவிட்டனவாம்! கிராமப் பெரியோர்கள் பேரவை அவர்களுடைய தந்தைமார்களில் மூத்தவரைப் பயிற்சிக்குப் பொறுப்பாளராகத் தேர்ந்தெடுக்கப் போகின்றனர் என்கிற பேச்சு அடிபட்டவுடன் பதட்டம் மேலும் அதிகரித்தது. குண்டாவும் அவனுடைய கூட்டாளிகளும் தமது தந்தையரும், பெரியப்பா, சித்தப்பாக்களும், தமையன்மாரும் பல ஆண்டுகளுக்கு முன்னர் தமக்குப் பயிற்சியளித்த பயிற்றுநர்களைப் பற்றி மிகுந்த மதிப்புடன் குறிப்பிட்டதைப் பலமுறை கேட்டிருந்தனர்.

அறுவடைத் திருவிழாவின் தொடக்கத்திற்கு முன்பே தமது தாய்மார்கள் ஆடைகள் தைப்பதற்காக அளவெடுக்கும் நாடாவைக் கொண்டு தலை முதல் தோள்கள் வரை மிகத் துல்லியமாக அளவெடுத்தது பற்றி மூன்றாம் பருவத்தை எட்டிய பையன்கள் ஒவ்வொருவரும் தமக்குள் மிகுந்த பதட்டத்துடன் பேசிக் கொண்டனர். குண்டா ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு ஒரு நாள் காலையில் தனது நண்பர்களுடன் கண்ட காட்சியின் கொடிய நினைவுகளை மறப்பதற்குப் பெரிதும் முயன்றான். அப்போது தான் அவர்கள் குட்டி இடையர்களாகத் தமது மந்தை மேய்க்கும் தொழிலை ஏற்றிருந்தனர். பயங்கரமான முகமூடிகள் அணிந்த குழுவினர் பெருங் கூச்சல் எழுப்பியவாறு, கைகளில் குத்தீட்டிகளைப் பிடித்தபடி ஒருவித கோரமான நடனமாடிக் கொண்டு, கழுத்தையும் தலையையும் மறைக்கின்ற தொப்பியுடன் கூடிய அங்கி அணிந்திருந்த மூன்றாம் பருவத்துப் பையன்களைக் கதற, கதற அடித்தும் உதைத்தும் இழுத்துச் சென்றதைக் கண்டனர்.

மத்தள முழக்கங்கள் காற்றை நிறைத்தன. அந்த ஆண்டின் அறுவடைத் திருவிழா தொடங்கிவிட்டது. ஏனைய கிராமத்தினருடன் சேர்ந்து குண்டா வயல்களுக்குப் புறப்பட்டான். கடுமையான வேலையில் ஈடுபடப் போகின்ற அந்த நெடிய நாட்களை அவன் பெரிதும் வரவேற்றான். பரபரப்பாக வேலையில் மூழ்கிக் களைத்துப் போகும் போது எதிர்கொள்ளவிருந்த பயிற்சி பற்றிய கொடிய நினைவுகள் அவனை ஆட்கொண்டு அலைக்கழிக்க மாட்டா அல்லவா! ஆனால், அறுவடை முடிந்து கொண்டாட்டம் தொடங்கிய போது, நிகழ்த்தப்பட்ட இசையிலும் நடனங்களிலும், விருந்துகளிலும் அவனால் மற்றவர்களைப் போல குதூகலத்துடன் பங்கேற்க இயலவில்லை. அவனுக்கு நினைவு தெரிந்த நாள் முதல் அறுவடைக் கொண்டாட்டங்களில் மிகுந்த கும்மாளத்துடன் பங்குபெற்று வந்திருந்தான். அதிகரித்துக் கொண்டிருந்த ஆரவாரப் பேரொலிகள் அவனுடைய துயரத்தையும் அதிகரித்தன. இறுதியில் விழாவின் கடைசி இரண்டு நாட்களையும் தனிமையில் வாய்க்கால் கரையில் அமர்ந்து நீரில் தவளைக் கல் எறிவதில்

பொழுதைப் போக்கினான்.

விழாவின் கடைசி நாளைக்கு முந்தைய இரவு. பின்டாவின் குடிசையில், சோற்றுடன் வேர்க்கடலை கலந்து செய்யப்பட்ட உணவை அமைதியாக சாப்பிட்டு முடித்திருந்தான். ஓமோரோ அவனுக்குப் பின்னால் வந்து நின்றார். தனது தந்தை வெண்மை நிறத்தில் ஏதோ ஒன்றை உயர்த்துவதை ஓரக்கண்ணால் கண்டு கொண்டான். அவன் திரும்பிப் பார்ப்பதற்கு முன் அவனுடைய தலை வழியாக நீண்ட அங்கியை அவனுடைய தந்தை நுழைத்தார். உடலெங்கும் பரவிய பீதி குண்டாவைச் செயலிழக்கச் செய்தது. தந்தை தனது மேல் தோள்களை இறுகப் பற்றியிருந்ததை உணர்ந்தான். எழுந்து கொள்ளும்படி வற்புறுத்தினார். அவனைத் திருப்பித் தள்ளிச் சென்று ஒரு தாழ்வான சிறிய பெஞ்சின் மீது உட்கார வைத்தார். கால்கள் வலுவிழந்து தலை காற்றில் மிதந்ததைப் போல உணர்ந்த குண்டாவிற்கு வலிந்து உட்கார வைத்தது கூட இதமாக இருந்தது. விட்டு, விட்டு மூச்சிரைத்ததை அவனால் கேட்க முடிந்தது. நகர்ந்தால் அந்த மிகச் சிறிய பெஞ்சிலிருந்து விழுந்து விடக்கூடும் என்பதையும் உணர்ந்தான். தன்னை இருட்டுக்குப் பழகிக் கொள்வதற்கு முயன்றவாறு உறுதியாக அமர்ந்து கொண்டான். பீதியால் இருள் இருமடங்காகத் தோன்றியது. கழுத்தையும் தலையையும் மூடியிருந்த அங்கிக்குள் சுவாசத்தின் வெம்மை அவனுடைய மேலுதட்டை வருடியது. குண்டாவின் மூளைக்குள் திடீரென்று ஒரு மின்னல் பளிச்சிட்டது. என்றோ ஒரு நாள் அதே போன்றதோர் அங்கியை அவனுடைய தந்தையின் தலை வழியாகவும் நுழைத்திருப்பர்! அவர் அந்த அளவுக்குப் பயந்திருப்பாரா? குண்டாவால் கற்பனை செய்து பார்க்க இயலவில்லை! கின்டே இனக்குழுவிற்கு அவனால் மானக்கேடு நேர்ந்துவிடக் கூடாதல்லவா!

குடிசையில் அமைதி நிலவியது. வயிற்றைப் பிசைந்து கொண்டிருந்த அச்ச முடிச்சை அவன் அவிழ்க்கப் போராடிக் கொண்டிருந்தான். கண்களை மூடி, எதையாவது கேட்க முடியுமா என்று முயன்று பார்த்தான். எதுவும் செவிப்படவில்லை. பின்டா நகருகின்ற சத்தம் கேட்குமே? அவனால் உறுதிபட உணர முடியவில்லை. லேமின் எங்கே போனான்? சுவாடு கூச்சல் போட்டுக் கொண்டிருப்பானே? அவனுக்கு ஒன்று மட்டும் உறுதியாகத் தெரிந்தது. பின்டாவோ வேறு யாருமோ அவனுடன் பேசப் போவதில்லை! பிறகு, தலையிலிருந்து முக்காட்டையா நீக்கிவிடப் போகிறார்கள்! அப்படி நினைத்த போது, மற்றொன்றும் உறைத்தது. முக்காட்டை நீக்கினால் பேயறைந்த அவனுடைய முகத்தை அனைவரும் பார்த்துவிடுவார்கள்! தனது பருவத்துத் தோழர்களுடன் இளந்தாரிப் பயிற்சிக்குச் செல்ல தகுதியற்றவன் என்று நினைத்து விடுவார்கள்!

லேமின் வயது பிள்ளைகளுக்குக் கூடத் தெரியும்! ஏனெனில், குண்டாவே லேமினிடம் கூறியிருக்கிறான். பையன்களை பன்னிரெண்டு மாத காலத்திற்குள் வேட்டைக்காரர்களாகவும், போர்வீரர்களாகவும், முழு மனிதர்களாகவும் மாற்ற வல்ல பயிற்சியைத் தாங்கிக் கொள்ள அஞ்சி நடுங்குவோருக்கு நேரிடக் கூடியது பற்றி அனைவரும் அறிந்திருந்தனர். ஒருவேளை, அவன் பயிற்சிபெறத் தவறிவிட்டால்? இளந்தாரிப் பயிற்சி பெறத் தவறியவர்களுக்கு நேர்ந்தவற்றைப்

பற்றி அவன் கேள்விப்பட்டிருந்த செய்திகள் நினைவிற்கு வந்த போது அச்சமும் பீதியும் விடைபெற்றுக் கொள்ளத் தொடங்கின. அத்தகையோர் பெரியவராக வளர்ந்த போதிலும் வாழ்நாள் முழுவதும் குழந்தையாகவே நடத்தப்படுவர். அவர்கள் முற்றாகப் புறக்கணிக்கப்படுவர். ஊரிலுள்ளவர்கள் அவர்கள் திருமணம் செய்வதை அனுமதிக்க மாட்டார்கள். அவர்களைப் போன்றவர்களுக்குத் தானே தந்தையராவர்? அத்தகைய அவல நிலைக்கு ஆளானோர் கிராமத்தை விட்டே ஓடிவிடுவர். ஒருபோதும் திரும்ப மாட்டார்கள். அவர்களுடைய தந்தையரோ, தாயார்களோ, உடன்பிறந்தாரோ அவர்களைப் பற்றி நினைத்துக் கூடப் பார்க்க மாட்டார்கள். அனைவராலும் வெறுக்கப்பட்டு ஒரு வெறி பிடித்த கழுதைப்புலியைப் போல தானும் ஜுஃப்யூர் கிராமத்தை விட்டு விரட்டியடிக்கப்படுவதாக குண்டா நினைத்துப் பார்த்தான். படுபயங்கரமாக இருந்தது!

சற்று நேரம் கழிந்தது. தொலை தூரத்தில் பறையொலி எழும்பியதையும் நடனக்காரர்களின் கூச்சலையும் மெல்லிய ஒலியாக அவனால் கேட்க முடிந்தது. அந்நிலையில் நீண்ட நேரம் கடந்தது. நேரம் என்னவாக இருக்கும்? அவனால் கணிக்க முடியவில்லை. பொழுது சாய்ந்ததற்கும் பொழுது புலர்வதற்கும் இடைப்பட்ட காலம். ஆனால், சில கணங்கள் கழித்து உச்ச தொனியில் எழுந்த கிராம மதகுருவினுடைய வாங்கோசை கிராமத்தினரை இரவு நேரத் தொழுகைக்கு அழைப்பு விடுத்ததைக் கேட்டான். நள்ளிரவுக்கு இரண்டு மணி முன்பு! இசை முழக்கம் நின்றது. கிராமத்தினர் கொண்டாட்டங்களை நிறுத்தி விட்டனர். ஆடவர் மசூதிக்கு விரைந்துகொண்டிருந்தனர்.

தொழுகை முடிந்து விட்டதை அறிந்து கொள்ளும் வரை குண்டா அமர்ந்த நிலையில் இருந்தான். ஆனால், இசை முழக்கம் மீண்டும் தொடரவில்லை. காதைத் தீட்டிக் கொண்டு எதையாவது கேட்க முயன்றான். ஆனால், அமைதியை மட்டுமே உணர முடிந்தது. சில கணங்கள் கழித்துத் திடீரென விழித்துக் கொண்டவன் தலையைக் குலுக்கினான். அமைதியின் ஆழம் அதிகரித்தது. நிலவில்லா வானத்தைக் காட்டிலும் முக்காட்டிற்குள் இருளின் கனம் அதிகமாக இருந்தது. இறுதியில், கழுதைப்புலிகளின் கனைப்பொலிகள் மென்மையாக அவனுடைய காதுகளை எட்டின. முறையாக ஊளையிடுவதற்கு முன்பு கழுதைப்புலிகள் சற்று நேரம் செறுமலாகவும் முனகலாகவும் ஒலி எழுப்புவது வழக்கம். பொழுது புலரும் வரை அத்தகைய ஒலி தொடர்ந்து தொலை தூரத்திலிருந்து கேட்டுக்கொண்டிருந்தது.

அறுவடைத் திருவிழா வாரத்தின் போது, கதிரவனின் முதற் கீற்றுக்கள் புறப்பட்ட உடனே கிராமத்தில் மத்தளங்கள் முழக்கப்படுவது வழக்கம். அந்த ஒலியை எதிர்பார்த்தபடி அமர்ந்திருந்தான். அவனுக்கு ஏதேனும் ஒலி கேட்காதா என்கிற ஆதங்கம்! காத்திருப்பு கோபத்தை உருவாக்கியதை உணர்ந்தான். எந்த நேரத்திலும் மத்தள முழக்கம் கேட்கலாம் என்பது அவனுடைய எதிர்பார்ப்பு. ஆனால், எதுவும் நிகழவில்லை! அதன் பிறகு, பலமுறை தூக்கத்திலிருந்து உலுக்கி விழித்தவன், கடைசியில் ஒருவாறாக அமர்ந்த நிலையிலேயே தூங்கிப் போனான். மத்தள முழக்கம் கேட்ட போது, துள்ளி விழித்தவன், உறங்கிப் போனதற்காக வெட்கமடைந்ததால் முக்காட்டிற்குள் அவனுடைய முகத்தில் வெம்மை

பரவியது.

முக்காடு ஏற்படுத்திய இருளுக்குப் பழகிப்போய்விட்டபடியால், அவனுக்குச் செவிப்பட்ட ஒலிகளைக் கொண்டு காலை நடவடிக்கைகளைக் கண்டு கொள்ள முடிந்தது. காகங்கள் கரையும் ஒலியையும் வேட்டைநாய்கள் குரைக்கும் ஒலியையும், மதகுருவின் வாங்கோசையையும், பெண்டிர் காலை உணவுக்காகத் தானியங்களைத் தூய்மைப்படுத்த இடிக்கும் ஓசையையும் கேட்டான். தொடங்க விருந்த இளந்தாரிப் பயிற்சி வெற்றிகரமாக நிறைவேற வேண்டும் என்பதே அன்றைய காலைத் தொழுகையின் சிறப்பம்சமாக இருந்திருக்கும் என்பதை உணர்ந்தான். குடிசைக்குள் அசைவுகளைக் கேட்க முடிந்தது. அது பின்டாவாகத் தான் இருக்கும்! அவனால் பார்க்க முடியாமல் போனது வியப்பளித்தது. ஆனால், அது தனது தாய் தான் என்பதை அவன் அறிந்து கொண்டான். சிடாஃபாவையும் மற்ற கூட்டாளிகளையும் நினைத்த போது அவனுக்கு வியப்பாக இருந்தது. முந்தைய இரவு தொடங்கி அந்தக் கணம் வரையிலும் எப்படி அவனால் அவர்களைப் பற்றி நினைக்காமல் இருக்க முடிந்தது? அவர்களும் தன்னைப் போலவே நீண்ட கொடிய இரவைக் கழித்திருப்பார்கள் என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

குடிசைக்கு வெளியே இசைக் கருவிகளுடைய முழக்கம் கேட்கத் தொடங்கி விட்டது. ஆட்களின் நடமாட்டமும் பேச்சொலியும் மேலும் மேலும் உரத்து ஒலித்தன. அந்தக் கூச்சலுடன் பறையொலியும் இணைந்தது. அதன் ஒலி மிகவும் கூர்மையானதாகவும் தனித்தும் ஒலித்தது. சற்று நேரத்தில் யாரோ ஒருவர் குடிசைக்குள் விரைந்து நுழையும் அரவம் கேட்டது. குண்டாவின் இதயம் துடிப்பதை நிறுத்திவிட்டது. இன்னதென்று உணருவதற்கு முன்னரே அவனுடைய மணிக்கட்டுகளை இறுகப் பற்றி பெஞ்சிலிருந்து இழுத்து குடிசைக்கு வெளியே வலிந்து கொண்டு செல்லப்பட்டான். பெரும் பறைகளுடைய ஒலியும் மக்களுடைய கூச்சலும் காதுகளைச் செவிடாக்கின.

கைகள் தாக்கின; கால்கள் உதைத்தன. வேறு வழியின்றி, கை போன போக்கிலும் கால் போன போக்கிலும் அடித்து உதைக்கலாமா என்று குண்டா எண்ணினான். அதற்குள் அவனை உறுதியாக ஆனால் இதமாக கை ஒன்று பற்றியதை உணர்ந்தான். முக்காட்டிற்குள்ளே மூச்சிரைத்தது. அதன் பின்னர் தன்னை யாரும் அடித்ததாகவோ உதைத்ததாகவோ அவனால் உணர முடியவில்லை. கூச்சலும் ஆரவாரமும் கூட அண்மையிலிருந்து கேட்கவில்லை. அவர்கள் மற்ற பையன்களை இழுத்துச் செல்வதற்காகப் புறப்பட்டு விட்டனர் போலும்! தன்னைப் பற்றியிருந்த கை பயிற்சி நடக்கும் இடத்திற்குத் தன்னை அழைத்துச் செல்வதற்காக தந்தை அமர்த்தியிருந்த அடிமையினுடையதாக இருக்க வேண்டும்! ஒவ்வொரு தந்தையும் தனது மகனை பயிற்சி நடைபெற்ற இடத்திற்கு வழிநடத்திச் செல்வதற்காக அடிமை ஒருவரை கூலிக்கு அமர்த்தியிருந்தனர்.

குடிசைகளிலிருந்து ஒவ்வொரு பையனையும் வெளியே இழுத்துச் சென்ற போது, கூட்டத்தினரிடையே கூச்சலும் ஆர்ப்பரிப்பும் உச்ச நிலையை அடைந்தது. குத்தீட்டிகளைக் கைகளிலேந்தி பலவாறான பாவனைகள் செய்து இரத்தத்தை உறையச் செய்கிற வகையில் பெருங்கூச்சல் போட்டு உயரத் தாவிக் குதித்து

அவர்கள் ஆடிய கோர நடனத்தைக் காணாதது குறித்து குண்டாவிற்கு மகிழ்ச்சி தான். "நான்கு மாதங்கள்!", "அவர்கள் முழுமனிதர்கள் ஆகி விடுவர்" என்றெல்லாம் இருமருங்கிலும் வரிசையாக மக்கள் கத்திக் கொண்டே தொடர்ந்து செல்ல, பெரியவை, சிறியவை என்று கிராமத்திலிருந்த பறைகளெல்லாம் இடைவிடாது முழங்க ஓர் அடிமை குண்டாவின் கையைப் பற்றி வேக, வேகமாக அழைத்துச் சென்றான். குண்டாவிற்குக் கதறி அழ வேண்டும் போல இருந்தது. ஒமோரோ, பின்டா, லேமின், குட்டிப் பயல் சுவாடு — அவர்களை ஒருமுறை தொட்டுப் பார்த்துக் கொள்ளத் துடித்தான்; நான்கு மாத காலத்திற்கு அவர்களை மீண்டும் காணும் வாய்ப்புக் கிடைக்கப் போவதில்லை; அந்த எண்ணம் அவர்கள் மீது அவன் முன்னெப்பொழுதுமே உணர்ந்திராத பாசத்தைக் கிளறி வதைத்தது. தனது வழிகாட்டியும் தானும் முழங்கிய பறையொலியின் இலயத்திற்கேற்ப அணிவகுத்துச் செல்வோருடன் இணைந்து செல்வதாக குண்டாவின் காதுகளுக்கு எட்டியது. கிராமத்தின் நுழைவாயிலைக் கடந்து சென்றதை அவனால் உறுதியாகக் கூற முடிந்தது. ஏனெனில், கிராமத்தாருடைய கூக்குரலின் ஒலி மட்டுப்படத் தொடங்கியது. வெதுவெதுப்பாக கண்ணீர் அவனுடைய கன்னங்களில் வழிந்தது. கண்ணீர்த் திவலைகளைத் தனக்கே மறைத்துக் கொள்ளும் முயற்சியாக கண்களை இறுக மூடிக் கொண்டான்.

குடிசையில் பின்டா இருந்ததை உணர முடிந்தது போல, தனக்கு முன்னும் பின்னும் வழிநடத்திச் செல்லப்பட்ட தன்னுடைய கூட்டாளிகளுடைய அச்சத்தையும் மணத்தை நுகர்வதைப் போல அவனால் மோப்பம் பிடிக்க முடிந்தது. அவர்களும் அவனைப் போலவே வெகுவாகப் பயந்து போயிருப்பர். அந்த எண்ணம் அவனுள் எழுந்த வெட்க உணர்வைத் தணித்தது. வெண்ணிற முக்காட்டால் பார்வை மறைக்கப்பட்டு தள்ளாடி நடந்து சென்ற போது, அச்ச உணர்வினும் கூடுதலாக துயரம் கவ்வியது. தாய், தந்தை, சகோதரர்கள், கிராம மக்கள் அனைவரையும் விட்டுச் செல்கிறானல்லவா? ஆனால், அப்படிச் செய்தாகத் தான் வேண்டும்! அவனுடைய தந்தையும் அப்படித் தான் செய்திருப்பார்! வருங்காலத்தில் அவனுடைய மகனும் அதைச் செய்து தான் தீர வேண்டும்! திரும்பப் போவது உறுதி; ஆனால் முழு மனிதனாக!

# 23

குண்டாவால் உணர முடிந்தது. கல் எறி தூரத்தில் அண்மையில் வெட்டி அகற்றப்பட்ட மூங்கில் புதர் இருந்த இடத்தை அவர்கள் நெருங்கிக் கொண்டிருந்தனர். முக்காட்டின் ஊடே புதிதாக வெட்டப்பட்ட மூங்கிலின் நறுமணத்தை நுகர்ந்தான். அந்த இடத்தை நெருங்க, நெருங்க காற்றில் மணத்தின் கனம் அதிகரித்தது. தடுப்புச் சுவர் அருகே சென்றனர். பின்னர், அதற்குள் நுழைந்தனர். ஆனாலும், இன்னமும் திறந்தவெளியில் தான் இருந்தனர். ஆம்! அது மூங்கில் கழிகளால் அமைக்கப்பட்ட சுற்றுச் சுவர். பறையொலி அடங்கியது; அணிவகுப்பு நின்றது. பல நிமிட நேரம் குண்டாவும் அவனுடைய நண்பர்களும் அமைதியாக நின்றிருந்தனர். அவர்கள் எப்பொழுது நின்றனர், எங்கே நின்றனர் என்பதைத் தெரிந்து கொள்ளும் விதத்தில் ஏதேனும் ஓசை கேட்காதா என்று காதைத் தீட்டிக் கொண்டிருந்தான். ஆனால், அவனுடைய செவிப்பட்டதெல்லாம் தலைக்கு மேலே கிளிகளின் கீச்சொலிகளும் குரங்குகளின் கொக்கரிப்புகளும் மட்டுமே!

திடீரென்று அவனுடைய முக்காடு நீக்கப்பட்டது. நண்பகல் சூரியனுக்குக் கீழ் மலங்க மலங்க விழித்துக் கொண்டு நின்றான். ஒளியின் தாக்கத்திற்கேற்ப தனது

கண்களைத் தகவமைத்துக் கொள்ள முயன்றான். தனது கூட்டாளிகளைக் காண்பதற்காக தலையைத் திருப்புவதற்குக் கூடப் பயந்தான். ஏனெனில், அவனுக்கு நேர் எதிரே உடலெல்லாம் சுருக்கம் விழுந்த முதியவர் சில்லா பா டிப்பா கட்டுறுதியாக நிமிர்ந்து விரைப்பாக நின்றிருந்தார். மற்ற பையன்களைப் போலவே, குண்டா அவரையும் அவருடைய குடும்பத்தாரையும் நன்கு அறிந்திருந்தான். ஆனால், அவர் ஏற்கனவே அறிமுகமானவராகக் காட்டிக் கொள்ளவில்லை. அப்போதைக்கு அவர் அவர்களைக் கண்டு கொள்ளப் போவதில்லை என்பது தெளிவானது. ஊர்ந்து செல்கின்ற புழுக்களை ஆய்வதைப் போல அவர்களுடைய முகங்களை ஆய்வு செய்தார். அவர்களுக்குப் பயிற்சி அளிக்கப் போகிற பயிற்றுனர் அவர் தான் என்பது உறுதிப்பட்டது. அவருக்கு இருமருங்கிலும் இரண்டு நடுத்தர வயதினர் நின்றனர். அலி சிசே, சோரு தூரா ஆகிய இருவரையும் குண்டா நன்கு அறிவான். சோரு அவனுடைய தந்தை ஓமோரோவின் நெருங்கிய நண்பர். நல்ல வேளை! அந்த இடத்தில் அவனுடைய தந்தை இல்லை! அவனுடைய பயம் வெளிப்பட்டுப் போகுமே!

பயிற்சி நடைபெற்றுக் கொண்டிருந்த போது, அங்கிருந்த இருபத்தி மூன்று மூன்றாம் பருவத்துப் பையன்களும் தமது மார்புகளுக்குக்குக் குறுக்கே கைகளை வைத்து மரபுப்படி தமது மூத்தோர்களை வாழ்த்தி வணங்கினர். "அமைதி!" "அமைதி மட்டுமே" என்று பயிற்றுநரும் அவருடைய உதவியாளர்களும் பதிலுக்கு வாழ்த்தினர். தலையை அசைக்காமல் மிகுந்த கவனத்துடன் குண்டா தனது கண்களை அகல விரித்து சுற்றிலும் நோட்டமிட்டான். ஆங்காங்கே மண்சுவர் எழுப்பி கூரை வேயப்பட்ட சிறிய குடிசைகள் பல அமைக்கப்பட்டிருந்தன. சுற்றிலும் உயரமான புதிய மூங்கில் கழிகளைக் கொண்டு சுற்றுச்சுவர் எழுப்பப்பட்டிருந்தது. சில நாட்கள் ஜுஃப்பூர் கிராமத்திலிருந்து காணாமற் போயிருந்த தந்தைமார்களால் அந்தக் குடிசைகள் அமைக்கப்பட்டிருக்க வேண்டும் என்று குண்டா புரிந்து கொண்டான். தசைநார்களில் ஒன்றைக் கூட அசைக்காதபடி அவன் அவற்றையெல்லாம் கண்ணுற்றான். ஆனால், அடுத்த கணமே உடலை உலுக்கித் தன்னைச் சுதாரித்துக் கொண்டான்.

உரத்த குரலில் பயிற்றுநர் பேசினார், "ஜுஃப்பூர் கிராமத்தை விட்டு குழந்தைகளாகப் புறப்பட்ட நீங்கள் முழு மனிதர்களாகத் திரும்ப வேண்டுமென்றால், அச்சத்தை முழுமையாக அகற்றிக் கொள்ள வேண்டும். ஏனெனில், அஞ்சுகின்றவன் வலுவற்றவன்; வலுவற்றவன் தனது குடும்பத்திற்கும், தனது கிராமத்திற்கும், தனது இனத்திற்கும் ஆபத்தானவன்." அவர் அவர்களைப் போன்ற மோசமான பொடியன்களை ஒருபோதும் பார்த்ததில்லை என்பது போல வெறித்து நோக்கினார்; பிறகு பார்வையைத் திருப்பிக் கொண்டார். உடனே, அவருடைய உதவியாளர்கள் முன்னோக்கிப் பாய்ந்தனர். அவர்களுடைய கைகளிலிருந்த பிரம்புகள் பையன்களுடைய தோள்களிலும் புட்டங்களிலும் விளையாடின; ஆட்டு மந்தைகளை ஓட்டிச் செல்வதைப் போல அவர்களைத் துரத்தி, குழுக்களாகப் பிரித்து குடிசைகளில் தள்ளினர்.

எந்தவிதமான வசதியுமில்லாத வெற்றுக் குடிசைக்குள் நெருக்கியடித்துக் கிடந்த

குண்டாவும் அவனுடைய நான்கு கூட்டாளிகளும் பிரம்படியின் வேதனையை உணர்ந்து ஒருவரை ஒருவர் பார்ப்பதற்குத் தலையைத் தூக்குவதற்குக் கூட வெட்கப்பட்டனர். சில நிமிடங்கள் கழித்து, சற்று நேரத்திற்கு அவர்கள் தம்மைத் துன்புறுத்த மாட்டார்கள் என்று தோன்றியதும், குண்டா தனது நண்பர்களை ஓரப் பார்வையால் நோட்டமிட்டான். சிடாஃபா அந்தக் குடிசையில் இருந்தால் நன்றாக இருக்கும் என்பது அவனுடைய விருப்பம். அங்கிருந்த மற்ற பையன்களை அவன் அறிந்திருந்தான். என்றாலும், சிடாஃபா அளவிற்குப் பழக்கமானவர்கள் இல்லை. அவனுடைய இதயம் சூம்பிப் போனது. ஆனால், அது ஒன்றும் தற்செயலாக நிகழ்ந்ததில்லை. ஆராயத் தொடங்கினான்; அந்த அளவு வசதியைக் கூட பயிற்றுநர்கள் அவர்களுக்கு அளிக்கத் தயாராக இல்லை. சாப்பாடாவது போடுவார்களா? வயிறு வேறு பசித்துத் தொலைக்கிறதே!

பொழுது சாய்ந்த உடனே, பயிற்றுநருடைய உதவியாளர்கள் குடிசைக்குள் திடீரெனப் புகுந்து ''புறப்படுங்கள்'' என்று அதட்டினர். குண்டாவின் தோள்களில் ஒரு தடி பலமாக விழுந்தது. குடிசைகளை விட்டு வெளியேறி மற்ற குடிசைகளிலிருந்து வெளிப்பட்ட பையன்களை இடித்து மோதிக் கொண்டு இருளில் சிதறி ஓடியவர்களை அதட்டி அடக்கினர். ஒருவர் கையை மற்றவர் பற்றிக் கொண்டு இருளில் ஒழுங்கற்ற வரிசையில் சென்றனர். தடிகள் சரமாரியாக விழுந்தன. உரிய இடத்தை அடைந்தவுடன், இருளிலும் வெளிப்பட்ட தன்னுடைய சீற்றமிக்க முகச்சுளிப்பால், பயிற்றுநர் அவர்களுடைய கவனத்தை ஈர்த்தார். சுற்றிலும் அடர்ந்து கிடந்த காட்டிற்குள் அன்றிரவு பயணம் மேற்கொள்ளப் போவதாக அறிவித்தார்.

அணிவகுத்துச் செல்வதற்கான ஆணை பிறப்பிக்கப்பட்டவுடன், பையன்கள் நீண்ட வரிசையில் கரடுமுரடான பாதையில் நடக்கத் தொடங்கினர். ஓயாத தடியடி நடந்து கொண்டே இருந்தது. “என்னடா, எருமை மாதிரி நடக்கிறே!”, குண்டாவின் காதருகே கேட்டது. எதிலோ மோதிக் கொண்ட பையனொருவன் வலி தாங்க முடியாமல் கதறினான். “யார் அது?” இருளில் இரு உதவியாளர்களும் உரக்கக் கத்தினர். சரமாரியாக விழுந்த தடியடிகள் மேலும் கடுமையாயின. அதன் பின்னர் ஒரு பயலும் மூச்சுவிடவில்லை.

குண்டாவின் கால்கள் வலியெடுக்கத் தொடங்கின. ஜானே, சலோம் பெரியப்பாக்களுடைய கிராமத்திற்குச் சென்ற போது கால்களைத் தளர்த்தி எட்டுப் போடும் பயிற்சியை அவன் தனது தந்தையிடமிருந்து பெறாமல் இருந்திருந்தால், கால்களில் வலியின் வேதனை இன்னும் கூடுதலாக இருந்திருக்கும். மலைப் பாதைகளில் நடந்து பழக்கப்படாததால் மற்ற பையன்களுடைய பாதங்கள் அவனுடையவற்றைக் காட்டிலும் மோசமடைந்திருக்கக் கூடும் என்கிற எண்ணம் கூட இதமாக இருந்தது. ஆனால், பசியையும் தாகத்தையும் தாங்கிக் கொள்ள குண்டா எவ்விதப் பயிற்சியும் பெற்றிருக்கவில்லை. பசி வயிற்றைப் பிசைந்தது; தலை காற்றில் மிதப்பதைப் போல உணரத் தொடங்கினான். ஒருவழியாக சிறிய நீரோடைக்கருகே நிற்கும்படி ஆணை பிறந்தது. முழுநிலவின் பேரொளி நீரோடையின் மேற்பரப்பில் ஏற்படுத்திய பிரதிபலிப்பில் சிற்றலைகளின்

நளினங்கள் தோன்றின. பையன்கள் மண்டியிட்டு நீரைக் கைநிறைய அள்ளிப் பருகத் தொடங்கிவிட்டனர். ஒரு கணம் கழித்து, ஒரே சமயத்தில் நிறைய நீரைக் குடிக்கக் கூடாது என்று நீரோடையை விட்டு விலகிச் செல்லுமாறு ஆணை பறந்தது. பிறகு தலைச்சுமையாகக் கொண்டுவரப்பட்ட மூட்டையைப் பிரித்து வறுத்த இறைச்சித் துண்டங்களைப் பையன்களிடம் கொடுத்தனர். இறந்த சடலங்களை கழுதைப்புலிகள் பற்களால் கிழித்துத் தின்பதைப் போல, பையன்கள் பெரிய துண்டங்களைக் கடித்துப் பிரித்து உண்ணத் தொடங்கினர். எவ்வளவோ வேகமாகத் தின்பதற்கு முயற்சித்தும் குண்டாவின் பங்காக நான்கு முறைதான் சுவைக்க முடிந்தது.

ஒவ்வொரு பையனுடைய பாதங்களிலும் சிராய்ப்புகள் ஏற்பட்டு குருதி கொட்டிய நிலையில் இருந்தன. குண்டாவினுடைய பாதங்களும் ஏனையோருடையவற்றைப் போல மிகவும் மோசமான நிலையில் இருந்தன. ஆனாலும், உணவும் நீரும் வயிற்றுக்கு இதமளித்தமையால் வேதனை ஒரு பொருட்டாகப் படவில்லை. நீரோடைக்கு அருகே அவர்கள் அமர்ந்திருந்த வேளையில் குண்டாவும் அவனுடைய தோழர்களும் சுற்றும் முற்றும் பார்வையை ஓட்டித் தமது நண்பர்களை நிலவொளியில் காண முற்பட்டனர். அப்பொழுது அவர்களுக்குப் பயத்தைக் காட்டிலும் களைப்பு கூடுதலாகத் தோன்றியது. குண்டாவும் சிடாஃபாவும் தொலைவிலிருந்தபடி பார்வைகளைப் பரிமாறிக் கொண்டனர். ஆனால், தன்னைப் போலவே தனது நண்பனும் அல்லலுற்றானா என்பதைக் கேட்டுத் தெரிந்து கொள்ள முடியவில்லை.

எரிச்சலெடுத்த தனது பாதங்களை நீரோடையில் குளிரச் செய்வதற்கு குண்டா முற்பட்டான். அதற்குள் பயிற்றுநரின் உதவியாளர்கள் பயிற்சி இடத்திற்குத் திரும்பிச் செல்வதற்கான நீண்ட பயணத்தைத் தொடங்குவதற்காக அணிவகுக்குமாறு பணித்தனர். விடிவதற்குச் சற்று முன்னர் மூங்கில் தட்டிகளால் அமைக்கப்பட்ட நுழைவாயில் அவர்கள் கண்களில் படும் தூரத்தை ஒருவாறாக நெருங்கிக் கொண்டிருந்த போது அவனுடைய கால்களும் தலையும் மரத்துப் போயின. இறப்பதற்குத் துணிந்துவிட்டவனைப் போல, குடிசைக்குள் தள்ளாடியவாறு நுழைந்தான்; ஏற்கனவே உள்ளே சென்றிருந்தவன் மீது மோதினான்; பாதங்கள் நிலைகுலைந்தன; தடுமாறி விழுந்தான்; விழுந்த இடத்திலேயே ஆழ்ந்து தூங்கிவிட்டான்.

அடுத்த ஆறு நாட்கள் ஒவ்வொரு இரவிலும் மற்றொரு அணிவகுப்புப் பயணம் நிகழ்ந்தது. ஒவ்வொரு நாளும் பயண தூரம் முந்தைய இரவைக் காட்டிலும் நீண்டது. சிராய்ப்பு ஏற்பட்ட பாதங்களில் வலி கொடூரமாக இருந்தது. ஆனால், நான்காவது இரவு ஒருவாறாக வலியைப் பொருட்படுத்தாதிருக்கப் பழகிக் கொண்டான். வரவேற்கத் தக்க புத்துணர்ச்சியான பெருமிதத்தை உணரத் தொடங்கிவிட்டான். ஆறாவது இரவில், இருள் கவிழ்ந்திருந்த போதிலும் உறுதிபட நேர் வரிசையில் நடந்து செல்வதற்கு அடுத்துத் தொடர்ந்த பையனுடைய கரத்தைப் பற்றிக் கொள்ள வேண்டிய தேவையில்லாமல் போயிற்று.

ஏழாவது இரவில், பயிற்றுநருடைய நேரடிப் பாடம் முதன்முறையாக நிகழ்ந்தது.

அடர்ந்த காட்டிற்குள் விண்மீன்களை வழிகாட்டிகளாகப் பயன்படுத்தி பாதையைத் தவற விடாமல் இருப்பதற்கான வழிமுறைகள் விளக்கப்பட்டன. முதல் அரை மாத காலத்திற்குள் பயிற்சியாளர் ஒவ்வொருவரும் விண்மீன்களின் உதவியுடன் அணிவகுப்பை அடர்ந்த காட்டிற்குள் நடத்திச் சென்று பயிற்சி இடத்திற்குத் திரும்புவதற்குப் பழகிக் கொண்டனர். ஓர் இரவு, குண்டா அணிவகுப்பிற்குத் தலைமை வகித்த போது, காட்டு எலி ஒன்று அவனைக் கண்டு மறைவிடத்திற்கு விரைவதற்குள் அதனை மிதித்து விட்டான். அச்சம் ஏற்பட்ட போதிலும் பெருமை பிடிபடவில்லை. காட்டு விலங்கொன்று கண்டு கொள்ள இயலாத அளவிற்கு அமைதியாக அணிவகுத்துச் செல்லப் பழகிவிட்டார்களல்லவா!

ஆனால், வேட்டையாடும் கலையைக் கற்றுக் கொடுக்கும் சிறந்த ஆசான்கள் விலங்குகள் என்றார் பயிற்றுநர். மாண்டிங்கா இனத்தவரைப் பொறுத்த வரை கற்றுக் கொள்ள வேண்டியவற்றுள் வேட்டையாடுதல் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. காடுகளுக்குள் பயணம் செய்வதற்கான நுணுக்கங்களில் தேர்ந்து விட்டனர் என்கிற நிறைவு ஏற்பட்ட பின்னர், பயிற்றுநர் அவர்களை அடுத்த அரை மாத காலத்திற்கு அவர்கள் தங்கியிருந்த இடத்திலிருந்து வெகு தொலைவில் அடர்ந்த காடுகளுக்குள் அழைத்துச் சென்றார். வேட்டைத்தொழிலை முழுமையாகக் கற்றுக் கொள்வதற்குத் தேவையான எண்ணற்ற யுக்திகளில் பயிற்சி பெறுவதற்கிடையே உறங்குவதற்காக மரக்கிளைகளில் தங்குமிடங்களை அமைத்திருந்தனர். குண்டாவின் கண்கள் மூடியதே இல்லை. பயிற்றுநரின் உதவியாளர்கள் ஏதேனுமொரு பயிற்சியை மேற்கொள்வதற்காக விழித்துக் கொள்ளும்படி குரலெழுப்பிய போதெல்லாம் அவன் அணியமாக இருந்தான்.

சிங்கங்கள் பதுங்கியிருந்த இடங்களையும், பாய்ந்து மான்களைக் கவ்விய இடங்களையும், இரையைத் தின்ற பின்னர் அவை எஞ்சிய இரவு நேரத்தில் உறங்கிக் கழித்த இடங்களையும் ஒவ்வொன்றாக உதவியாளர்கள் சுட்டிக் காட்டினர். மான் கூட்டம் சிங்கங்களால் தாக்கப்படுவதற்கு முன்னர் கடந்து சென்ற தடங்களைப் பின்னோக்கித் தொடர்ந்து அவை முன்பகல் முழுவதும் செய்த ஒவ்வொன்றும் பையன்களுடைய மனத்தில் ஓவியமாகப் பதியும் விதத்தில் நேரில் காட்டி விளக்கினர். பயிற்சியாளர்கள் ஓநாய்களும் கழுதைப்புலிகளும் மறைந்திருந்த பாறைப் பிளவுகளையெல்லாம் பார்வையிட்டனர். அடுத்ததாக, கனவிலும் எண்ணிப் பார்த்திராத வேட்டைத் தொழில் நுணுக்கங்களையெல்லாம் கற்றனர். எடுத்துக்காட்டாக, தேர்ந்த வேட்டைக்காரருடைய முதலாவது இரகசியமே அவர் காட்டிற்குள் திட்டமிடாமல் அங்குமிங்குமாக அலையக் கூடாது என்பதை அவர்கள் ஒருபோதும் அறிந்திருந்ததில்லை. அது தொடர்பாக பயிற்றுநர் அவர்களுக்கு ஒரு கதையை விவரித்தார். வேட்டையாடுவதற்கான விலங்குகள் நிறைந்திருந்த காட்டிற்குள் ஒரு முட்டாள் வேட்டைக்காரன் எதையும் வேட்டையாட முடியாமல் பட்டினியால் இறந்தே போனானாம். ஒழுங்கற்ற விதத்தில் கூக்குரல் எழுப்பியபடி காடு முழுக்கச் சுற்றி வந்தான். அவனுடைய இருப்பை உணர்ந்த விலங்குகள் அமைதியாக விரைந்தோடித் தப்பித்துக் கொண்டன. அவை அருகில் இருந்ததை அவனால் ஒருபோதும் உணர முடியவில்லை.

பயிற்சியின் போது விலங்குகளைப் போலவும் பறவைகளைப் போலவும் கண்டபடி ஒலி எழுப்பிய தமது செயலை எண்ணிப் பார்த்த பையன்களுக்கு முறையற்ற அந்த வேட்டைக்காரனுடைய நினைவு வந்தது. அவர்கள் எழுப்பிய உறுமல் ஒலிகளும் ஊதல் ஒலிகளும் காற்றை நிறைத்தன. ஆனால், எந்தவொரு பறவையோ விலங்கோ வெளிப்பட்டதே இல்லை. அதன் பின்னர், அவர்களைத் தமது ஒளிவிடங்களில் பதுங்கியிருக்கச் செய்து விட்டுப் பயிற்றுநரும் உதவியாளர்களும் உரிய முறையில் அதே ஒலிகளை எழுப்பிய போது, அப்பகுதியில் மறைந்திருந்த விலங்குகளும் பறவைகளும் தமது இனத்தைச் சேர்ந்த விலங்குகளையும் பறவைகளையும் தேடி தலைகளை நீட்டி வெளிப்பட்டன.

மதிய வேளை ஒன்றில், பையன்கள் பறவை ஒலிகளைப் பயிற்சி செய்து கொண்டிருந்த போது, திடீரென மிகப்பெரிய உடலமைப்பும் கனத்த அலகும் கொண்ட பறவையொன்று பலத்த கீச்சொலி எழுப்பியவாறு அருகிலிருந்த புதர் ஒன்றில் அமர்ந்தது. "அதோ பார்!" உரத்த சிரிப்பொலியுடன் ஒருவன் கத்தி விட்டான். ஏனைய ஒவ்வொரு பையனுடைய இதயமும் அவனுடைய தொண்டை வரை உருண்டது. ஏனெனில், அவனுடைய அடங்காத அகல வாயால் அனைவருமே தண்டனை பெறப் போவது உறுதி! அதற்கு முன்பு பல முறை சிந்திக்காமல் செயல்படும் அவனுடைய பழக்கம் வெளிப்பட்டிருந்தது. ஆனால், இம்முறை பயிற்றுநர் அவர்களுக்கு வியப்பளிக்கும் விதமாக, அமைதியாக அந்தப் பையனிடம் நெருங்கிச் சென்று அந்தப் பறவையை உயிருடன் பிடித்து வருமாறு கண்டிப்புடன் பணித்தார். குண்டாவும் அவனுடைய தோழர்களும் மூச்சைப் பிடித்துக் கொண்டு நின்றனர். அவன் கீழே குனிந்து அந்தக் கனத்த பறவை அமர்ந்திருந்த புதரை நோக்கித் தவழ்ந்தான். அது தலையை அங்குமிங்குமாகத் திருப்பிக் கொண்டு ஏதுமறியாமல் அமர்ந்திருந்தது. ஆனால், அவன் தாவிய போது, தன்னைப் பிடிக்கத் துணிந்த அவனுடைய கைகளுக்குச் சிக்காமல் இறக்கைகளை அடித்தபடி உயர்ந்து தனது கனத்த உடலை தூக்கிக் கொண்டு பறந்தது. பையனும் அதனைத் தொடர்ந்து பாய்ந்து துரத்திச் சென்றான். விரைவில், அவனும் பறவையும் கண்ணுக்கெட்டாத தூரம் பறந்து விட்டனர்.

குண்டாவும் மற்றவர்களும் உறைந்து நின்றனர். பயிற்றுநர் அவர்களுக்கு கொடுக்கப் போகிற தண்டனையை அவர்களால் யூகிக்க இயலவில்லை. அடுத்த மூன்று பகல் பொழுதுகளிலும் இரவுகளிலும் பையன்கள் பயிற்சியில் ஈடுபட்டிருந்த போதிலும் காணாமற் போன பையனுக்கு என்ன நேர்ந்ததோ என்கிற தவிப்புடன் ஒருவரை ஒருவர் தொலைவில் இருந்தபடி பார்த்துக் கொண்டனர்; அந்தப் புதரையும் நோட்டமிட்டனர். அதற்கு முன் அவன் செய்த தவறுகளுக்கெல்லாம் அவர்கள் அனைவருக்கும் தண்டனை பெற்றுத் தந்தவன் என்பதால் அவன் மீது அவர்கள் எரிச்சலடைந்திருந்தனர். தற்பொழுது அவன் இல்லை என்றானதும் அப்படிக் கருதத் தோன்றவில்லை.

நான்காவது நாள் காலையில் பையன்கள் விழித்தெழுந்து கொண்டிருந்த போது, அவர்களுடைய இருப்பிடத்தை நோக்கி யாரோ வருவதற்கான சமிக்ஞை காவலாளியிடமிருந்து வந்தது. சில நொடிகள் கழித்து "அவன் வந்து விட்டான்"

என்று பறையொலி அறிவித்தது. அவனை எதிர்கொள்வதற்கு அவர்கள் அனைவரும் விரைந்தனர். ஏதோ காணாமற் போன சகோதரன் திரும்பிவிட்டதைப் போன்ற ஆரவாரம் அங்கே நிலவியது. மெலிந்து, அழுக்கடைந்து, வெட்டுக்களும் காயங்களுமாக ஒருவழியாக வந்து சேர்ந்து விட்டான். அவர்கள் அவனை நெருங்கி அவனுடைய முதுகில் செல்லமாகத் தட்டினர்; அவன் நெளிந்தான். மெலிந்ததொரு புன்னகை அவனுடைய இதழ்களில் தென்பட்டது. தளிர்க்கொடி ஒன்றால் அலகையும், இறக்கைகளையும், கால்களையும் கட்டி அந்தப் பறவையைக் கைகளில் ஏந்தியிருந்தான். அவனை விட மோசமான நிலையில் இருந்த போதிலும், உயிருடன் நெளிந்தது.

பயிற்றுநர் வெளியில் வந்தார். அவர் கூறியவை அந்தப் பையனுக்குத் தான் என்ற போதிலும் அவர்கள் அனைவருக்கும் பொருந்தக் கூடியவை. "இதன் மூலம் இரண்டு முக்கியமான செய்திகளைத் தெரிந்து கொண்டாய்! சொற்படி செயல்படு! வாயைப் பொத்திக்கொள்! முழுமனிதனுக்கான தயாரிப்பின் போது கடைப்பிடிக்கப்பட வேண்டியவை!" குண்டாவும் மற்றவர்களும் மற்றொன்றையும் கண்ணுற்றனர். அந்த முதிய பயிற்றுநர் முதன்முறையாக ஒருவர் மீது கனிவான பார்வையை வீசியதை! புதர்களில் மிகக் குறுகிய தொலைவுக்கு தாழ்வாக எம்பிக் குதிக்கக் கூடிய கனத்த பறவைகளைப் பிடிப்பதற்கான நுணுக்கங்களை அவன் விரைவிலேயே கற்றுக் கொள்வான் என்பதை அவர் அறிந்து கொண்டார்.

விரைவிலேயே அந்தப் பெரும் பறவையை வறுத்து, அதனைப் பிடித்தவனைத் தவிர ஏனைய அனைவரும் சுவைத்து உண்டனர். அதனைச் சமையல் செய்து முடிக்கும் வரை அவனால் விழித்திருக்க இயலவில்லை. அந்த அளவிற்குக் களைத்துப் போனான். அன்றைய பகல் முழுவதும் இரவும் அவன் உறங்குவதற்கு அனுமதிக்கப்பட்டான். அந்தச் சமயத்தில் குண்டாவும் பிறரும் புதர்களுக்கிடையே வேட்டைப் பயிற்சியில் ஈடுபட்டிருந்தனர். அடுத்த நாள், முதலாவதாகக் கிடைத்த ஓய்வு நேரத்தில், அந்தப் பையன் தனது தோழர்களிடம் நடந்தவற்றை விவரித்தான். அதனைத் துரத்திச் சென்று பட்டவதைகளையெல்லாம் கூறினான். இரண்டு பகல் வேளைகளிலும் ஓர் இரவு முழுவதும் படாத பாடு பட்டு, கடைசியில் கண்ணி வைத்து அந்தப் பறவையைப் பிடித்தான். அதன் அலகுடன் அதனைக் கட்டிப் போட்டு அடுத்த இரவும் பகலும் வானத்து மீன்களைக் கொண்டு, கற்பிக்கப்பட்டபடி, வழியைக் கண்டு பிடித்துத் திரும்பியதாகத் தெரிவித்தான். ஏனைய பையன்கள் அவனிடம் கூறுவதற்குப் பெரிதாக எதுவும் இல்லை. குண்டா தனக்குள் சொல்லிக் கொண்டான், 'அவனைப் பார்த்து எனக்கொன்றும் பொறாமை இல்லை. ஆனாலும், அவனுடைய தீரச் செயலாலும், பயிற்றுநர் அதனை ஏற்றுக் கொண்ட விதத்திலும் அவன் ஏனையோரைக் காட்டிலும் முக்கியத்துவம் வாய்ந்தவனாகி விட்டான்.' அடுத்து, ஒரு நாள் பிற்பகல் பயிற்றுநரின் உதவியாளர்கள் மல்யுத்தத்தில் பயிற்சி பெறும்படி பணித்த போது, குண்டா அந்தக் குறிப்பிட்ட பையனை பிடித்திழுத்துத் தரையில் தள்ளுவதற்கான வாய்ப்புக் கிட்டியது!

பயிற்சியின் இரண்டாவது மாதத்தின் போது, குண்டாவும் அவனுடைய

நண்பர்களும் தமது கிராமங்களில் வாழ்ந்ததைப் போலவே காட்டிற்குள்ளும் வாழ்வதற்கான திறமைகளைப் பெற்றுவிட்டனர். விலங்குகள் மறைந்திருப்பதற்கான அறிகுறிகளைக் கண்டறிவதற்கான அனைத்து நுட்பங்களும் அவர்கள் கற்றுக் கொண்டு பின்பற்றவும் செய்தனர். தற்பொழுது மூதாதையருக்கான சடங்குகளையும் தொழுகைகளையும் நிறைவேற்றுவதற்கான பயிற்சி பெற்று வந்தனர். அவை விலங்குகளின் கண்களுக்கு அவர்கள் தென்படாதவாறு மறைத்துக் கொள்வதற்கு உதவக் கூடியவை. அவர்கள் சாப்பிடக் கூடிய ஒவ்வொரு உணவுப் பொருளும் அவர்கள் கண்ணி வைத்துப் பிடித்தும் கவண்கற்களையும், வில், அம்புகளையும் கொண்டு எய்தும் பெற்றவை. முன்பு செய்ததைக் காட்டிலும் இரு மடங்கு வேகத்தில் அவர்களால் சிறிய விலங்குகளின் தோலை உரிக்க முடியும், அதே போல நெருப்பு மூட்டிச் சமைப்பதற்கும் கற்றுக் கொண்டனர்.

அவர்கள் கற்றுக் கொண்ட முக்கியமான பாடங்கள் சில முன்கூட்டித் திட்டமிடப் பட்டவை அல்ல. ஒரு நாள், ஓய்வு நேரத்தின் போது, ஒருவன் தனது வில் வித்தையைச் சோதித்துப் பார்க்க முயன்ற போது, கவனக்குறைவாக ஓர் அம்பு உயரமான மரத்தின் உச்சியிலிருந்த தேன் கூட்டைத் தாக்கி விட்டது. சினங் கொண்ட தேனீக்கள் கூட்டம் வெறியுடன் அவர்களைச் சுற்றிச் சூழ்ந்து தாக்கத் தொடங்கின. மறுபடியும் ஒருவன் செய்த தவற்றால் அனைவரும் தேனீக்களால் கொட்டப்பட்டனர். மிக விரைவாக ஓடிய பையன் கூட தேனீக்களின் கொடுக்குகளுக்குத் தப்பிக்க முடியவில்லை.

பின்னர், பயிற்றுநர் விளக்கினார், “எந்தவொரு வேடனும் தான் எய்யும் அம்பு தாக்கக் கூடிய இலக்கு எது என்பதை அறியாமல் தொடுக்க மாட்டான்.” வீங்கிப் போய் வேதனை எடுத்த இடங்களில் ஷியா மரப் பிசினைத் தேய்க்குமாறு பணித்துவிட்டுக் கூறினார், “இன்றிரவு அந்த தேனீக் கூட்டத்தை முறையான விதத்தில் கையாளுவதற்குக் கற்றுக் கொள்ளப் போகிறீர்கள்” அன்று இருள் கவிந்த பின்னர், பையன்கள் காய்ந்து போன பாசிகளை தேன்கூடு இருந்த மரத்தின் அடிப்பகுதியில் குவித்தனர். பயிற்றுநருடைய உதவியாளர் ஒருவர் அதில் நெருப்பு மூட்டிய பிறகு, மற்றொருவர் ஒரு வகைப் புதரிலிருந்து இலைகளை குறிப்பிட்ட அளவிற்குக் கொண்டு வந்து நெருப்பின் மீது போட்டார். அடர்த்தியாக, மூச்சடைக்கச் செய்கின்ற புகை மேலெழும்பி மரத்தின் உச்சியை அடைந்தது. உடனே ஆயிரக்கணக்கான தேனீக்கள் தீங்கற்ற மழைத்துளிகளைப் போல பையன்களைச் சுற்றிலும் செத்து விழுந்தன. மறுநாள் காலையில் குண்டாவும் நண்பர்களும் தேன்கூட்டிற்குள் இறந்து கிடந்த எஞ்சிய தேனீக்களையும் வடித்து விட்டு அதிலிருந்த தேனை சிந்தாமல் சிதறாமல் சேகரிப்பதற்கு பயிற்றுவிக்கப்பட்டனர். அடர்ந்த காட்டிற்குள் சோர்வுற்றிருக்கும் வேடர்களுக்கு உடனடி ஊட்டமளிக்க வல்ல தேனை வேண்டிய அளவு பருகிய குண்டாவின் உடலில் புதுத்தெம்பு பரவியது.

ஆனால், அவர்கள் எவ்வளவு தான் கடுமையான பயிற்சிகளுக்கு உட்படுத்தப்பட்ட போதிலும், அறிவாக்கத்தையும் திறமைகளையும் எவ்வளவு தான் திரட்டிக் கொண்ட போதிலும், அந்த முதிய பயிற்றுநர் நிறைவடையவே இல்லை.

அவருடைய எதிர்பார்ப்புகளும் ஒழுக்கநெறிகளும் மிக, மிகக் கடுமையானவையாகத் தொடர்ந்தன. பையன்கள் பெரும்பாலான சமயங்களில் அச்சத்திற்கும் கோபத்திற்கும் இடையே அலைக் கழிக்கப்பட்டனர். அத்தகைய உணர்வுகளை உணரக் கூடிய சக்தியை இழக்குமளவிற்குக் களைப்படைந்தனர். ஒருவனுக்கு இடப்பட்ட கட்டளை உடனடியாக முழுநிறைவுடன் நிறைவேற்றப்படவில்லையென்றால் அனைவருக்கும் அடிவிழும் கண்டிப்புத் தொடர்ந்தது. குண்டா நொந்து போனான். 'எதற்கெடுத்தாலும் அடி விழுகிறது; அடித்து அடித்து அவர்களுடைய கையே வலியெடுத்துவிடும் போல! யாரேனும் ஏதேனும் தவறு செய்து விட்டால், நடு ராத்திரியில் தூக்கத்திலிருந்து திடீரென எழுப்பி காட்டிற்குள் நீண்ட அணிவகுப்புப் பயணம் நடத்தச் சொல்கிறார்கள்!' தவறு செய்து அனைவருக்கும் அடிவாங்கிக் கொடுத்த பையனை அவர்களே அடிக்காமல் விட்டு வைத்திருந்ததற்கு ஒரே ஒரு காரணம் உண்டு. அவர்கள் இளந்தாரிப் பயிற்சிக்கு வருவதற்கு நெடு நாட்களுக்கு முன்பே அவர்கள் தமது வாழ்க்கையில் கற்றுக் கொண்ட முதல் பாடமே மாண்டிங்கர்கள் தமக்குள் சண்டையிட்டுக் கொள்ளக் கூடாது என்பது தான்! இறுதியில், அவர்கள் அனைவருமே புரிந்து கொண்டனர். அவர்களுடைய இனத்தினுடைய நலம் அவர்கள் ஒவ்வொருவரையும் சார்ந்திருந்ததைப் போல பயற்சிக்காக ஒன்றிணைந்திருந்த அவர்களுடைய குழுவின் நலமும் அவர்கள் ஒவ்வொருவரையும் சார்ந்திருந்தது. விதிமுறைகளிலிருந்து பிறழ்ந்து செயல்படுவதென்பது படிப்படியாகக் குறைந்து எப்போதாவது எதிர்பாராமல் நிகழ்வது என்கிற நிலை உருவானது; பிரம்படி தண்டனையும் குறைந்து போனது; பயிற்றுநரையும் உதவியாளர்களையும் கண்டாலே ஏற்பட்ட ஒருவித இனம்புரியாத அச்சமும் பீதியும் இருந்த இடத்தில் தமது தந்தைமார்களுக்கு மட்டுமே தரக்கூடிய மதிப்பும் மரியாதையும் நிலை கொண்டது.

இருப்பினும், குண்டாவும் தோழர்களும் தம்மீதே அருவருப்புற்று முற்றிலும் அறியாமையில் திகைக்கின்ற விதமாக ஏதேனும் புதிய சூழல்கள் நாள்தோறும் உருவாகிக் கொண்டே இருந்தன. கற்றுக் கொள்ள வேண்டும் என்கிற உந்துதல் தொடர்ந்தது. எடுத்துக்காட்டாக, ஒருவருடைய குடிசை அருகில், குறிப்பிட்டதொரு விதத்தில் மடிக்கப்பட்டு போர்வை ஒன்று தொங்கவிடப்பட்டிருந்தால், அது ஏனைய மாண்டிங்கா ஆடவருக்கு அவர் எப்பொழுது திரும்பிவரத் திட்டமிட்டிருந்தார் என்பதை அறிவித்தது. அல்லது ஒரு குடிசைக்கு வெளியே ஒரு குறிப்பிட்ட விதத்தில் குறுக்காக செருப்பு வைக்கப்பட்டிருந்தால், ஏனைய ஆடவர் மட்டுமே புரிந்து கொள்ளக் கூடிய பல செய்திகளை அவை புலப்படுத்தின. ஆனால், பெரிதும் குறிப்பிடத்தக்க விதத்தில் அவர்கள் பயன்படுத்திய குழுக்குறி இரகசியங்களுள் ஒன்று குண்டாவின் கவனத்தை மிகவும் ஈர்த்தது. ஆடவர்கள் தமக்குள் மாண்டிங்கா மொழி வார்த்தைகளை வித்தியாசமான ஒலிகளை எழுப்பும் விதமாகப் பேசிக்கொண்டனர். அவற்றின் உட்பொருளைப் பெண்டிருக்கோ, குழந்தைகளுக்கோ, மாண்டிங்கா இனம் அல்லாதாருக்கோ கற்றுக் கொடுத்ததில்லை. தனது தந்தை மற்றொருவரிடம் அந்த விதத்தில் மிகவும் விரைவாகப் பேசிக் கொண்டதை குண்டா கேட்டிருந்தான்; அவனுக்குப் புரியவுமில்லை; அதற்கான விளக்கத்தைக் கேட்பதற்குத் துணிவுமில்லை. தற்பொழுது அவன் அதைக் கற்றுக்கொண்டுவிட்டபடியால் அவனும் அவனுடைய நண்பர்களும் கிட்டத்தட்ட

அவர்கள் பேச நினைக்கின்ற அனைத்தையும் ஆடவருடைய இரகசிய மொழியிலேயே பேசிக் கொண்டனர்.

ஜுஃப்பூர் கிராமத்திலிருந்து வெளியேறிய காலத்தைக் கணிப்பதற்காக, பையன்கள் ஒவ்வொரு குடிசையிலும் ஒரு பாண்டத்தில் ஒவ்வொரு மாத முடிவிலும் ஒரு கல்லைச் சேகரித்து வந்தனர். பாண்டத்தில் மூன்றாவது கல்லைச் சேர்த்த ஒரு சில நாட்களிலேயே, ஒரு மதிய வேளையில், வளாகத்திற்குள் மல்யுத்தப் பயிற்சியில் ஈடுபட்டிருந்த போது, திடீரென்று நுழைவாயிலை நோக்கிப் பார்வையைச் செலுத்தினர். இருபத்தைந்து, முப்பது பேர் நுழைவதைக் கண்டனர். அவர்கள் தமது தந்தையர், பெரியப்பா சித்தப்பா மார்கள், தமையன்கள் என்று அடையாளம் கண்டு கொண்ட போது, பேருவகை எழுந்தது. குண்டா துள்ளி எழுந்தான்; அவனால் நம்பவே முடியவில்லை; மூன்று மாதங்கள் கழித்துத் தந்தையை முதன்முறையாகப் பார்த்ததால் அவனுள் பூரிப்புப் பொங்கியது. ஆனாலும், ஏதோ ஒரு கரம் அவனைத் தடுத்து நிறுத்தி மகிழ்ச்சி ஆரவாரத்தில் பெருங்குரல் எடுத்துவிடாதபடி தடுத்தது. அவனுடைய தந்தையின் முகத்திலும் மகனைப் பிரிந்து மீண்டும் பார்த்ததற்கான உணர்ச்சிப் பெருக்கின் சுவடு தென்படவில்லை.

ஒரே ஒரு பையன் மட்டும் ‘அப்பா’ என்று கத்திக் கொண்டு ஓடோடிச் சென்றான். ஒரு வார்த்தையும் பேசாத அவனுடைய தந்தை, அருகிலிருந்த பயிற்றுநரின் உதவியாளரிடமிருந்த பிரம்பைப் பறித்து வெளுத்து வாங்கிவிட்டார். அவர் தான் ஏமாற்றப்பட்டுவிட்டதாகவும் தனது மகன் இன்னமும் பொடியனாகவே இருந்ததாகவும் கத்தினார். தந்தைமாரிடமிருந்தும் எவ்வித சலுகையும் எதிர்பார்க்கலாகாது என்பது உறுதிப்பட்டது. சினங்கொண்ட பயிற்றுநர், அனைவரையும் வரிசையாகக் குப்புறப் படுக்கும்படி பணித்தார். வரிசைகளினூடே சென்ற தந்தையர் கைத்தடிகளால் பயல்களுடைய பிட்டத்தில் தாக்கினர். குண்டாவிற்கு மிகுந்த உணர்ச்சிக் குழப்பம்! அடிகளைப் பொருட்படுத்தவில்லை; இளந்தாரிப் பயிற்சியில் பெற்ற எத்தனையோ அடிகளுள் அதுவும் ஒரு வகை! அப்பாவைக் கட்டியணைத்து அவருடைய குரலைக் கேட்காமல் போனமையால் வலித்தது. அப்படிப்பட்ட அற்ப ஆசைகளிலெல்லாம் ஈடுபடுவது ஆண்மைக்கு அழகாகாது என்பதை உணர்ந்த போது வெட்கமடைந்தான்.

தடியடி நிறுத்தப்பட்டது. பையன்களை ஓட்டப் பந்தயங்கள், தாண்டுதல், நடனமாடுதல், மல்யுத்தம் புரிதல் போன்ற கற்றுத்தரப்பட்ட அனைத்துக் கலைகளையும் நிகழ்த்திக் காட்டுமாறும், அவர்களுக்குப் பயிற்றுவிக்கப்பட்ட விதத்தில் தொழுகையில் ஈடுபடுமாறும் பணித்தார். தந்தையரும், பெரியப்பா, சித்தப்பாமார்களும், தமையன்களும் அமைதியாகக் கவனித்துக் கொண்டிருந்தனர். அன்பொழுக பயிற்றுநருக்கும் உதவியாளர்களுக்கும் பலவிதமான பரிசுப் பொருட்களையும் காணிக்கையாக்கிப் பாராட்டுத் தெரிவித்துவிட்டுப் புறப்பட்டனர்; தமது பிள்ளைகளைத் திரும்பிப் பார்க்கக்கூட இல்லை. அவர்கள் முகத்தைத் தொங்கப் போட்டபடி நின்றனர். ஒரு மணி நேரத்திற்குப் பிறகு, மாலை நேர உணவு தயாரிப்பதில் சுணக்கம் காட்டியமைக்காக அவர்கள் மற்றொருமுறை

தடியடி பட்டனர். உறவினர்கள் வந்து சென்றது பற்றிய எவ்வித உணர்வையும் பொருட்படுத்தாமல் பயிற்றுநரும் உதவியாளர்களும் செயல்பட்டதால் தடியடியைக் காட்டிலும் வேதனை மீதூர்ந்தது. ஆனால், முன்னிரவு நேரத்தில், உறங்குவதற்கு முன்பு பையன்கள் மல்யுத்தத்தில் ஈடுபட்டிருந்த போது, உதவியாளர்களில் ஒருவர் அவனருகில் நெருங்கினார். மூச்சிரைக்க நின்றவனிடம், அரை மனதாகத் தான், இரகசியமாகச் செய்தி தெரிவித்தார், "புதிதாக ஒரு தம்பி பிறந்திருக்கிறான். அவன்பெயர் மதி"

அன்றிரவு நெடு நேரம் உறங்காமல் விழித்துக் கிடந்த குண்டாவின் எண்ணங்கள் துள்ளின, "நாங்கள் இப்போது நால்வர்! நான்கு சகோதரர்கள்! என் அப்பா, அம்மாவிற்கு நான்கு மகன்கள்! 'நூற்றுக்கணக்கான ஆண்டுகளுக்குப் பின்னர், எதிர்காலத்தில், கதைசொல்லிகள் கின்டே குடும்ப வரலாற்றைப் பாடும் போது எப்படி இருக்கும்!' ஜூஃப்யூர் கிராமத்திற்குத் திரும்பும் போது, அவனுடைய குடும்பத்தில் ஓமோரோவுக்கு அடுத்து அவன் தான் முதல் ஆம்பிளை! உள்ளம் குதூகலத்தால் கும்மாளமிட்டது. தான் ஒரு முழு ஆம்பிளை ஆவதற்கு மட்டுமின்றி, தனது தம்பிகளுக்குக் கற்றுக் கொடுப்பதற்காகவும் பலவிதமான பயிற்சிகளைப் பெற்று வந்தான். அவன் ஏற்கனவே லேமினுக்கு பிள்ளைப் பருவத்தில் கற்றுக் கொள்ள வேண்டியவற்றையெல்லாம் சொல்லிக் கொடுத்திருந்தான். லேமின் பருவத்துப் பையன்கள் அறிந்து கொள்ள அனுமதிக்கப்படக் கூடியவற்றை மட்டிலுமாவது அவன் கற்றுக் கொடுக்கலாம். லேமின் சுவாடுவுக்குக் கற்றுக் கொடுக்கலாம்; சுவாடு, குண்டா இன்னும் பார்த்திராத குட்டித் தம்பி மதிக்குக் கற்றுக் கொடுக்கலாம். ஒரு நாள், அவனும் ஓமோரோ வயதை அடைவான்; அவனுக்கென பிள்ளைகள் பிறப்பார்கள்; மீண்டும் அனைத்தும் துவக்கம் பெறுவன. சிந்தனையில் ஆழ்ந்தவாறே தூங்கிப் போனான்.